15-6. 26·11 '73

## உள்ளே...



## CONTRIBUTORS


1. N, Vanamamalai, M. A , L. T. Editor, Aaraichi.

2. S. Thothadhri, M. A. Dept. of English, Paramakalyani College Alwarkurichi.

3. Dr. Svetlana Troubnikova, Teaches Tamil in Foreign languages Institute, Moscow,

4. Dr. S. V. Shanmugam, Dept. of linguistics. Annamalai University.

5. V. S. Kamala, graduate in Rusian language and leterature, Peoples Frendship University Moscow. Now in Madras.

6. R. Nagaswamy, M A. Director of Archaeology, State Dept of Archaeology.

7. Natana Kasinathan, M. A. Epigrapic, Asst. State Dept. of Archaeology.

9. T. Mangai, Works in the editorial office of Aaraichi.

8. M. D. Rajakumar, M. A., B. O. L. Research Student, P. S. G Arts College, Tamil Research Dept.

10 P. S. K. Bhaktavatsalan, B.SC.B.T. Employed as Science Teacher in Govt- School.

# ஆராய்ச்சி

மலர் 4 | அக்டோபர் 1973 | இதழ் 1


ஆராய்ச்சி நான்காம் ஆண்டில், இவ்விதழ் வெளியீட்டோடு பிரவேசிக்கிறது. பதின் மூன்றும் இதழ் இது.

ஆர்வம் மிக்க வாசகர்களின் பேருதவியோடும், ஆய்வாளர்களின் சிறந்த அறிவுக் கூர்மையின் வெளிப்பாடுகளின் உள்ளடக்க நிறைவோடும், நெல்லை ஆய்வுக்குழுவின் இடையருத உழைப்புக் கொடையோடும் ஆராய்ச்சி பலவித இன்னல்களையும், தடைகளையும் கடந்து முன்னேறி வருவதை நீங்களே அறிவீர்கள் - நான் சொல்ல வேண்டியதில்லை.

அறிவு - விஞ்ஞான முறையியல்களின் வழியே சென்று அறியக்கூடியது, பல் துறைகளுக்கு, ஆய்வு முறைகளினின்றும் சிறப்பான ஆய்வுமுறை இயல்களும், பொதுவாக எல்லாத் துறைகளுக்கும் பொதுவான ஆய்வுமுறை நோக்கு உளதென்றும் அறிவியல் ஆய்வாளர்கள் ஒப்புக்கொண்டுள்ளார்கள். இவ்வாய்வு முறையியல்கள், தமிழியல் ஆய்வுகளில் அண்மைக்காலப் புதுமையாக நுழைந்துள்ளது. இவற்றை வளர்ப்பது, பலதுறைகளில் ஆய்வாளர்களது முயற்சியால் சேமிக்கப்படும் அறிவை, பிற துறை ஆய்வுகளுக்குப் பயன்படுத்தி, ஒவ்வோர் துறை அறிவையும் ஆழமாகவும், அகற்சியுடையதாகவும் ஆக்குவது ஆகிய முயற்சிகளில் ஆராய்ச்சி முன்னேற விரும்புகிறது. இத்திக்கில் அது முன்னேறி வருகிறது என்பதை வாழ்த்துரை வழங்கியுள்ள அறிஞர்களது கருத்துக்கள் காட்டுகின்றன.

இவ்விதழ் தாமதமாக வெளிவந்ததற்குக் காரணங்களைச் சொன்னால் வழக்கமாகச் சொல்லுகிற சாக்குகள்தானே என்றுபடும். ஏற்கெனவே ஒரு சிறு பத்திரிகைக்கு, ஆராய்ச்சி உணர்வு பரவலாக இல்லாத தமிழ் நாட்டில் வெளிவருகிற ஒரே ஒரு ஆராய்ச்சிப் பத்திரிகைக்கு இருக்கிற பிறவிச்சங்கடங்களோடு, தாள் விலை உயர்வு, மை விலை உயர்வு, அச்சு இயந்திர வேலை நிறுத்தம், மின்வெட்டு, மெஷின் ஓட்டுகிற ஆள் கிடைக்காதது இவையெல்லாம் இவ்விதழ் வேலை நடக்கும் காலத்தில் ஏற்பட்ட இடையூறுகள். அடுத்த இதழை இப்பொழுதே வேலை தொடங்கி, டிசம்பரில் வெளியிட்டு இவ்வாண்டில் நான்கு இதழ்களையும் பூர்த்தி செய்து விடலாம் என்று நம்புகிறேன்.

1974 ஜனவரியில் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டுக் கருத்தரங்கு நடைபெறப் போவதாக வதந்திகள் உலவுகின்றன. வழக்கமாக அரசியல் ஆதிக்கம் பெற்றவர்கள், தங்களையும், தங்கள் நண்பர்களையும் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவார்கள். பாரிஸ் மாநாட்டிற்கு யார் போனுர்கள் என்பதை மாநாடு முடிந்த பின்னரே, சில சச்சரவுகள் தினசரிப் பத்திரிகையில் வெளிவந்த பின்னரே ஆய்வாளர்கள் அறிந்துகொள்ள முடிந்தது. இத்தடவை ஆய்வாளர்கள் கவமானமாக இருந்து உல்லாச பிரயாணிகள் ஆய்வாளர்களாக மாறுவேஷம் போடவிடாமல் தடுத்து, ஆய்வுக் கட்டுரை எழுதியவர்களையும் கடந்த மாநாட்டிற்குப்பின் ஆய்வுப்பணி செய்துள்ளவர்களையும் மட்டுமே ஆய்வுக் கருத்தரங்குக்குச் செல்ல விடுவதென்று உறுதிபூண வேண்டும்.

# வாழ்த்துக்கள்

Dr. S. V. Subramanian, M. A., Ph. D.
Reader and Head of the Deportment of Tamil
UNIVERSITY OF KERALA

KARIYAVATTOM P. O,
TRIVANDRUM
..............................

பேரன்புடையீர்,

வணக்கம், தங்கள் 2—10—73 கடிதம் கிடைத்தது.

நம் நாடு உழைப்புக் குறைந்த நாடு.

இங்கு ஆராய்ச்சி வளருவது கடினம்.

இந்நாட்டிலும் ஆராய்ச்சியை வளர்க்க, மிகத் துணிவோடு 'ஆராய்ச்சி' என்ற ஆய்வு இதழைத் தொடங்கி நடத்துவது போற்றற்குரியது.

அதிலும் சிறப்பாக நம்நாட்டு அறிஞர்கள் பிறநாட்டு அறிஞர்கள், இவர்களின் பல தர மிக்க, இலக்கியம் வரலாறு பண்பாடு மொழியியல் போன்ற பல துறைகளிலும் அமைந்த கட்டுரைகளை வெளியிட்டுச் சேவை செய்து வருவது பாராட்டற்குரியது. 'ஆராய்ச்சி'க் குழந்தை நான்கு வயதாகி ஓடி ஆடும் பருவத்திற்கு வந்துவிட்டாள் என்றறியும் போது மிகவும் மகிழ்கிறேன்.

இவ்வாராய்ச்சிக் குழந்தை வளர்ந்து, மலர்ந்து, மணம் பெற்று, இன்னும் பல ஆய்வுக் குழந்தைகளை வழிவழியாகத் தோற்றுவிப்பாள் என நம்புகிறேன்.

'ஆராய்ச்சி' இதழ் வாழ்க பல்லாண்டு என வாழ்த்தி அமைகின்றேன்.

அன்பன்

ச. வே. சுப்பிரமணியன்.

---

மு. வரதராசன்
துணைவேந்தர்,
மதுரைப் பல்கலைக் கழகம்

பல்கலைநகர்,
மதுரை-21.
10-.10--1973

அன்புடையீர்,

"ஆராய்ச்சி" பன்னிரண்டு இதழ்கள் வெளியிட்டு அறிவுப்பணி புரிந்தமை நன்கு அறிவேன். தமிழை ஒட்டிய பல துறைகளிலும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. மேலை நாட்டு ஆராய்ச்சிப் போக்கினைப் பின்பற்றி ஆராய்ச்சிக் கட்டுரைகள் சிறப்பாக அமைந்துள்ளன. இத்தகைய இதழின் தொண்டுகள் மென்மேலும் ஓங்குக என வாழ்த்துகிறேன்.

தங்கள் அன்புள்ள

மு. வரதராசனார்,

Dr. K. V. RAMAN, M. A., M. Litt.,
Dip. Arch. Ph. D.,
Dy. Superintending Archaeologist.

Archaeological Survey of India,
Southern Circle, Madras-9,

*Dated* : 4th October '73'

*Dear Sir,*

I am indeed happy to knowthat "Araichi" has successfully completed three years and is entering into its fourth year of publication.

I am one of those who have been watching the useful work done by your journal in several fields of cultural activity. It has been serving as a forum for good academic studies and discussions. The journal has already become popular in the Scholarly circles. I am sure it will continue to receive the support and patronage of educational institutions and the public. Please accept my hearty congratulations and best wishes.

*Yours sincerely,*
*( K. V. RAMAN )*

---

*MOHITSEN*
Principal,
Central Marxist School,
C. P. I. NEW DELHI.

*Dear Sir,*

If Marxism–Leninism is to take real root in our country the paramount task at the moment is to investigate Indian reality with its aid to do this through the medium of our own languages. **Aaraichi** occupies a special place, therefore in the indispensable preparatory work to achieve the hegemony of Marxism–Leninism in our country. May **Aaraichi** win further intellectual victories for the Indian working class,

*Greatings,*
*MOHITSEN.*




Director:
PROF. 8. AGESTHJALINGOM,
M. A., PH. D. (Kerala), PH. D. (Indiana, U S A)
ANNAMALAINAGAR,
TamilNadu (INDIA)

கடந்த மூன்று ஆண்டுகளாக 'ஆராய்ச்சி' செய்து வரும் அரிய பணி என் உள்ளத்தைத் தொட்டு நிற்கிறது. தமிழியியல் ஆய்வுத் துறையியல் 'ஆராய்ச்சிக்கு' சிறந்த பங்கு உண்டு. மானிடயியல், அறிவியல், சமூகவியல் போன்ற பல்வேறு துறைகளில் சிறந்த அறிஞர் களின் ஆராய்ச்சிகளை அவ்வப்போது வெளியிடும் பெருமை இவ்விதழுக்கு உண்டு. இது போன்றே தமிழ் இலக்கிய வரலாறு, பண்பாடு போன்ற பலதுறை செய்திகளையும் அவ்வப் போது வெளியிட்டு வந்துள்ளது இவ்வாராய்ச்சி ஏடு ஆய்வுத்துறையில் சிறந்து நிற்கும் அறிஞர்களின் கருத்துக்களை மட்டுமின்றி வளர்ந்து வரும் ஆராய்ச்சி மாணவ சமுதாயத்தின் கருத்துக்களையும் அவ்வப்போது வெளியிட்டு ஊக்குவித்துள்ளது. இந்நிலையில் ஆராய்ச்சி ஏடு வாழவும், வளரவும், பல்கிப் பெருகவும் என்னுடைய வாழ்த்துக்கள். ஆசிரிய நண்பர் திரு. வானமாமலைக்கு என் பாராட்டுகள்.

தங்கள் அன்புள்ள,
**ச. அகத்தியலிங்கம்**
18—10—73

---

*K. G. Krishnan, M. A.,*
Superintending Epigraphist
for Dravidian Inscriptions
Office of the Chief Epigraphist
Mysore-5. [570005]

**மைசூர்**
8—10—73

அன்புடைய ஆசிரியரவர்களே, வணக்கம். தங்கள் கடிதம் கண்டு மகிழ்ந்தேன்.

மூன்று ஆண்டுகள் தொடர்த்து பணி செய்துவரும் 'ஆராய்ச்சி' மேலும் ஓங்கி வளரும் என்று உறுதியாக நம்புகின்றேன். 'அறிதோறும் அறியாமை கண்டற்றால்' என்பது போல உண்மையை அறிய அகழ்ந்து ஆராய்ந்து செல்லச் செல்ல பல அரிய உண்மைகளை அறிய நேரிடும் உணர்வு ஒன்றே ஆராய்ச்சிக்கு அடிப்படையாகும். எனவே உண்மையை அறிய வேண்டும் என்ற இதழ் மிகவும் தேவைப்படுகிறது. வளர்க ஆராய்ச்சி!

அலுவலகத் தொல்லையால் என் சிறிய பணியையும் செய்ய இயலாமைக்கு வருந்து கின்றேன். காலம் என்ற வாய்ப்பு கிடைத்தால் கூடிய விரைவில் ஒரு கட்டுரை அனுப்ப எண்ணியிருக்கிறேன்.]

வணக்கம்.

அன்புள்ள
**கிருஷ்ணன்**

மயிலை சீனி. வேங்கடசாமி

MYLAI SEENI VENKATASWAMI

74, காரணீசுவரர் கோவில் தெரு,
மயிலாப்பூர், சென்னை-4.

74, Karaneeswarar Koil St ,
MYLAPORE, MADRAS-4,
5—10—1973

பேரன்புடையீர்,

வணக்கம். 'ஆராய்ச்சி'க்கு வாழ்த்துச் செய்தி எழுதி அனுப்புகிறேன். இதனை வெளியிட்டருள்க.

பல துறைகளைப் பற்றி ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கி வெளிவருகிற தனிப்பத்திரிகை 'ஆராய்ச்சி' ஒன்றே. இலக்கியம் வரலாறு பண்பாடு விஞ்ஞானம் அழகுக் கலைகள் போன்ற பல துறைகளிலும் அரிய பெரிய ஆய்வுரைகள் 'ஆராய்ச்சி'யில் வெளிவருகிறன. அவ்வத் துறையில் வல்ல அறிஞர்கள் இதில் எழுதி வருகிறார்கள். தமிழ் நாட்டு ஆய்வாளர்கள் மட்டுமல்லாமல் அயல் நாட்டு அறிஞர்களும் இதில் கட்டுரைகள் எழுதிவருவது பாராட்டுதற்குரியது.

மூன்று ஆண்டுகளாக வெளிவந்துகொண்டிருக்கிற 'ஆராய்ச்சி' இப்போது நான்காவது ஆண்டில் அடி எடுத்துவைக்கிறது மேன்மேலும் சிறந்த ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கித் தொண்டு செய்துவரும் என்பதில் ஐயமில்லை. உயர்தரமான 'ஆராய்ச்சி'ப் பத்திரிகையைத் தொடங்கி நன்றாகவும் சிறப்பாகவும் இதனை நடத்திவருகிற இதன் ஆசிரியர் திரு. நா. வானமாமலை அவர்களைப் போற்றிப் பாராட்டுகிறேன். வருக வளர்க ஓங்குக 'ஆராய்ச்சி'.

அன்புள்ள

மயிலை சீனி வேங்கடசாமி

---

Pref. Dr. K. MEENAKSHISUNDARAM,
M A., M. Litt,, Ph D.
Deputy Director

International Institute of Tamil Studies
Central Polytechnic Campus,
ADAYAR, MADRAS-20.
13—10—73

'ஆராய்ச்சி' நான்காவது ஆண்டில் அடியெடுத்து வைப்பது அறிந்து மிக மகிழ்கிறேன்.

புதிய முறையில் அறிவியல் அடிப்படையில் தெளிவாகவும் அழுத்தமாகவும் எளிய துல்லியமான நடையில் "ஆராய்ச்சி" தன் கட்டுரைகளை வெளிப்படுத்தி வருவது நாடறிந்த செய்தி. புற்றீசல் போல் வரும் புதிய கவர்ச்சியலைகளின் கட்டில் அகப்படாமல் நல்ல மருத்துவன் போல இயங்கி வரும் "ஆராய்ச்சி" மென்மேலும் நன்கு வளர்ந்து மொழிக்கும் மக்களுக்கும் சிறந்த தொண்டாற்ற நல்வாழ்த்துக்களைப் பொழிகின்றேன்.

அன்புள்ள

கா. மீனாட்சிசுந்தரம்

Dr. T. P. Meenakshisundaram
M. A., B. L., M. O. L. D. Litt.
Samayanallur, Madurai Dt.

சமயநல்லூர் — மதுரை
19—10—73

அன்பரே,

வணக்கம் "ஆராய்ச்சி" மூன்றாண்டுகளை, வெற்றியுடன் விளங்கிக் கடந்து மேலே பீடுநடை போட்டு 13ஆவது இதழ் கொண்டு புன்சிரிப்புக் கொள்ளப்போவதை அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி கொள்கிறேன். இது தோன்றும் போது சிறப்பாக அறிவு வளர்ச்சிக்கும் தமிழ் எழுத்தாளர்க்கும் பேருதவியாக விளங்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன் என்று என் ஆசையை வெளியிட்டேன் ஒவ்வோர் இதழும் இந்த ஆசையை நிறைவேற்றியது கண்டு இன்பமுற்றேன். இலக்கியம், பண்பாடு, மானிட இயல், வரலாறு மொழிஇயல் - கலை அழகியல் போன்ற பல மானிடத் துறைகளில் பல புதிய கோணங்களில் விஞ்ஞான முறைப்படி ஆராய்ந்த திறம் மிக்க கட்டுரைகள் வெளிவந்துள்ளது தமிழின் நல்ல காலமே ஆம்., "ஆராய்ச்சி" தோன்றாமல் இருந்தால் இவை வெளி வர வாய்ப்பில்லாமல் போயிருக்கும் தமிழுக்கும் தமிழர்க்கும் சிறந்த தொண்டை செய்து வரும் "ஆராய்ச்சி" மேலும் இவ்வாறே வளர்ந்தோங்கிப் புதிய ஆராய்ச்சித்துறைகளைக் கொண்டு புதிய தமிழுலகைப் படைக்கும் என்பதில் ஐயம் ஒன்றும் இல்லை.

அன்பன்

தெ. பொ, மீனாட்சிசுந்தரன்

---

பெ. கோ. சுந்தர்ராசன், (சிட்டி)
ஆசிரியர்,
நூலகம்,
சென்னை.

பல்கலைக்கழகங்களும், வசதி படைத்த அறக்கட்டளைகளும் செய்யவேண்டிய அரும் பணியை தாங்கள் தனியாக ஆற்றி வருவது வெறும் பாராட்டுக்கு மட்டுமின்றி வியப்புக்கும் உரியதாகும். தங்களுடைய அறிவு வேட்கையையே முதலீடாகவும், அறிவு வளர்ச்சிக்குத் தங்களுடைய உழைப்பை அர்ப்பணித்துக் கொண்ட சில நண்பர்களின் உற்சாகத்தை துணையாகவும் கொண்டு பல இடையூறுகளிடையே மூன்று ஆண்டுகளைத் தாங்கள் "ஆராய்ச்சி"யை நடத்தி வருவது பின் வரும் சந்ததியாருக்குப் பெரிதும் பயன் தரும். 'ஆராய்ச்சி' என்றால் பழைய மறந்து போன விஷயங்களைப் பற்றி மட்டும் ஆய்வதல்ல, இன்றைய இலக்கிய, வரலாற்று, சமுதாயப் பிரச்னைகளைப் பற்றியும் ஆலோசித்து இனம் கண்டுகொள்வதாகும் என்ற உண்மையை 'ஆராய்ச்சி' இதழ்களின் பல்வேறு விஷய அட்டவணைகள் எடுத்துக் காட்டுகின்றன. கலாசார வரலாற்றுக்கு ஆதாரங்களையும் விளக்கக்குறிப்புகளையும் தருவதில் 'ஆராய்ச்சி' ஒரு புது முறையைக் கையாள்கிறது, ஆராய்ச்சியைப் படித்துப் பயன்பெறும் வாய்ப்பை இன்னும் பல்லாயிரம் தமிழ் மக்கள் அடையும் நிலை ஏற்படவேண்டும்.

சிட்டி

**ப. மாணிக்கம்**
*மார்க்சிய தத்துவ அறிஞர்,*
*துணைச் செயலாளர்,*
*இந்திய கம்யூனிஸ்ட் கட்சி,*
*தமிழ்நாடு,*
*சென்னை.*

தமிழ் வரலாறு, கலாச்சாரம், புதைபொருள் ஆராய்ச்சி ஆகிய துறைகளில் 'ஆராய்ச்சி' செய்து வரும் சேவை இந்திய அறிஞர்கள் மத்தியில் அங்கீகாரம் பெறத் துவங்கியுள்ளது. தமிழர்களின் கலாசார சமூக வளர்ச்சி பற்றிய பல உண்மைகளை அறிந்துகொள்ள 'ஆராய்ச்சி' துணை செய்கிறது.

தமிழ் தெய்வத்தன்மை வாய்ந்தது என்றும், தமிழன் வரலாறு கண்டறிய முடியாதது என்றும் கூறி வந்த ஏலாந்தனத்தை முறியடித்து, தமிழ் வளர்ச்சி, தமிழன் வரலாறு உலகத் தொடர்போடு எவ்வாறு உருவாகியது என்கிற உண்மையை பல அம்சங்களில் ஆராய்ச்சி உணர்த்தி வருவது, வரலாற்று பூர்வமான சேவையாகும்.

தமிழ்க் கலாச்சாரப் பெருமையை மூடப்பழக்கமாக சிறு கூட்டத்தாரின் சதியை முறிப்பதில் ஆராய்ச்சி வெற்றி கண்டுள்ளது.

இளம் ஆராய்ச்சியாளர்களின் ஞானம் வரை 'ஆராய்ச்சி' பெரிதும் துணை புரிவது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். எல்லாவற்றிற்கும் மேலாக, விஞ்ஞான பூர்வமான கண்ணோட்டத்திலும், ஆராய்ச்சி முறைகளினும் நாட்டம் கொண்ட நல்லறிஞர்களை இணைப்பதில் ஆராய்ச்சி வெற்றி கண்டுள்ளது. அடுத்து வரும் ஆண்டுகளில் மேலும் பல வெற்றிகளை குவிக்கும் என்ற நம்பிக்கையில் ஆராயச்சிக்கு எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள
**ப. மாணிக்கம்**

---

***பி. எல். சுவாமி,***
கூட்டுறவுத்துறைப் பதிவாளர்,
புதுவை அரசு.

"தமிழ் நாட்டில் வெளிவரும் ஆராய்ச்சி இதழ்களில் பாளையங்கோட்டையில் இருந்துவரும் தங்களுடைய ஆராய்ச்சியே, தமிழ் இலக்கிய, வரலாறு, பண்பாடு ஆகிய துறைகளில் அறிவியல் கண்ணோட்டத்தோடு கட்டுரைகளைத் தொடர்து வெளியிட்டு வருகின்றது. இத்தகைய உயர்தர இதழ்களை வெளியிடுவது தமிழ் நாட்டில் முடியாத செயலாகும். மூன்றாண்டுகள் தொடர்ந்து இந்த அரிய இதழை நடத்தி வந்து ஆய்வுத்துறைக்கு பணிபுரிந்து வரும் தங்களுடைய தொண்டை மிகவும் பாராட்டுகின்றேன்"

இப்படிக்கு,
அன்புள்ள
பி. எல். சாமி.

இரா. நாகசாமி, எம்.ஏ.
இயக்குநர்
தொல்பொருள் ஆய்வுத்துறை
சென்னை.

ஒரு சில மனித உள்ளங்களிலே தோன்றுகின்ற கருத்துக்கள் இடத்தைக் கடந்து, தேசத்தையும், காலத்தையும், மொழியையும் கடந்து மனித சமுதாயம் முழுதும் ஊடுருவி பரவி பல பெரும் மாற்றங்களை அவ்வப்போது ஏற்படுத்தியுள்ளன. அக்கருத்துக்கள் ஒரு தனிப்பட்ட இடத்தில் தோன்றியவைதான். ஆனால் அதன் விளைவுகள் மாப்பெரும் மாற்றங்களைச் செய்யும் வல்லமைபடைத்தவை. கலைத்துறையில், மொழித்துறையில், சமுதாயத் துறையில்' இனத்துறையில் இது போன்ற மாற்றங்கள் உலகம் முழுதும் ஏற்பட்டுள்ளன. ஒவ்வொரு துறையிலும் இம்மாற்றங்களுக்குக் காரணமாயிருந்த அடிப்படைக் கருத்துக்கள் எவை, அக்கருத்துக்களால் தோன்றிய மாற்றங்கள் எவை, அதனால் மனித சமுதாயத்திற்கு ஏற்பட்ட ஏற்றமோ வீழ்ச்சியோ எவை என ஆய்ந்து வருங்கால செயல்முறையை வகுத்துக்கொள்வதே ஆராய்ச்சியின் குறிக்கோள்.

அது போன்ற கருத்துத் தெளிவு, சிந்தனைத்திறன், செயல் வல்லமை இன்றைய தமிழகத்தில் தோன்றி, பரவி, நிறைதல் இன்றியமையாததாம். விருப்பமும், அதனால் உந்தப்பட்ட ஆர்வமும் ஆராய்ச்சியாக அமைந்துவிடாது. விரும்புவதை மட்டுமே தமிழில் வடித்துக்கொடுத்தால்கூட வாங்கிப் படிக்கும் சூழ்நிலையில்லாத இக்காலத்தில் சான்றுகளின் அடிப்படையில் ஆராய்ச்சியை மட்டும் படைத்து அதன் பயனால் ஓங்கு புகழ் கருத்துக்களை உருவாக்க முயலும் ஆராய்ச்சியின் பணி அரும்பணி. பொருள் வளமும் பிறவளமும் கொண்டு தாங்குவாரின்றி, தனித்தொருவரால் கடந்த மூன்றாண்டுகளாக ஆராய்ச்சிக்காக மட்டும் இதழை தொடர்ந்து தமிழகத்தில் வெளியிட்டு, சிந்தனையைத் தூண்டி' ஓர் உயர்ந்த சூழ்நிலையை உருவாக்கும் ஆக்கச் சக்தியே நீ வாழ்க! உன்னை நாங்கள் போற்றுகின்றோம். உன் பணி சிறக்க உடலால், உள்ளத்தால் வாழ்த்துகின்றோம். ஆராய்ச்சியே நின் மணம் பரவட்டும்.

இரா. நாகசாமி.

செய்தி

# கருவூர் நடுகற்கள்.

கரூரில் அண்மையில் இரண்டு நடுகற்கள் படி எடுக்கப்பட்டுள்ளன. அவை வரலாற்றிற்கு இன்றியமையாதவை. ஒரு போர் வீரன் எதிர்க்கும் இரண்டு மாற்றார்களை வீழ்த்துகின்ற சிற்பங்கள் இரண்டிலும் செதுக்கப் பட்டுள்ளன.

இவை 8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நடுகற்களாகும். அக்கால கொங்கு நாட்டு கலைக்கு சிறந்த எடுத்துக்காட்டுகளாக இருக்கின்றன. நடுகல் ஒன்றில்

'கோ கலியன் மவன் கருவூரிடை
தந்நாநிரை கொள்ள எறிந்து பட்டான்'

என்று குறிக்கப்பட்டுள்ளது. இது கி. பி. 8-ஆம் நூற்றாண்டு தமிழ் எழுத்துக் களில் பொறிக்கப்பட்டுள்ளது.

மற்றொரு கல்வெட்டு வட்டெழுத்தும் தமிழும் கலந்த எழுத்தில் எழுதப்பட்டுள்ளது. இதில் முதல் இரண்டு அடிகளே தெளிவாகத் தெரிகின்றன. மற்ற எழுத்துக்கள் மிகவும் சிதைந்துள்ளன. இதில்,

'ஸ்ரீ வஞ்சி வேளடியான் நாகன்'

என்று காணப்படுகிறது. இதுவும் கி. பி. 8-ஆம் நூற்றாண்டு எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது.

கருவூரில் கிடைத்துள்ள இந்த இரண்டு நடுகற்களில் ஒன்றில் 'கருவூர்' என்றும், மற்றதில் 'வஞ்சி' என்றும் குறிக்கப்பட்டுள்ளமை வரலாற் றிற்கு மிகவும் இன்றியமையாத சான்றாகும். கொங்கு நாட்டுக் கருவூரே சங்க கால சேரர்களின் தலைநகரான வஞ்சி. ஆன்பொருநைக் கரையிலேயே அது இருந்தது என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

கருவூருக்கு அருகில் உள்ள புகளூர் கல்வெட்டு சங்ககால சேர மன் னர்களைக் குறிக்கிறது. கருவூரும் இதில் குறிக்கப்பட்டுள்ளது. கருவூரில் அண்மையில் நடந்த அகழ்வாராய்ச்சியில் ரோமானிய பானை ஓடுகள் கிடைத் துள்ளன. பிற்கால கல்வெட்டுகளும் உரையும் இந்நகரையே கருவூர் வஞ்சி என குறிக்கின்றன. ஆதலின் சங்ககால சேரர்களின் தலைநகர் கருவூர் வஞ்சியே என்று முன்னர் மு. இராகவையங்கார் அவர்கள் அனுமானித்த கருத்து மேலும் வலுப்பெருகிறது. இவ்விரு நடுகற்களும் தமிழக வரலாற்றிற்கு இன்றியமையாத சான்றுகள் என்பதில் ஐயமில்லை.

வரலாறு
பண்பாட்டு
மானிடவியல்

# நடுகற்களும் நம்பிக்கைகளும்

நா. வானமாமலை

(24—2—73ல் சென்னையில் நடைபெற்ற நடுகல் பற்றிய ஆய்வரங்கில் படிக்கப்பட்டது. இவ்வாய்வரங்கு தமிழ்நாடு அரசு தொல்பொருள் துறையினரால் ஏற்பாடு செய்யப் பட்டது.)

நடுகற்களைப்பற்றி சங்க இலக்கியங்களி லிருந்தும், தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை முதலிய இலக்கண நூல்களி லிருந்தும் நாம் அறிகிறோம். ஆநிரைகளைப் பாதுகாக்கவும், ஊரைக்காக்கவும், மன்னனுக் காகவும் போர் செய்து உயிர் நீத்தவர்களுக்கும் நடுகல் நாட்டி பண்டைத் தமிழ் மக்கள் வணங்கி வந்தனர். இப்பண்டைய வழக்கம் இரண்டொரு நூற்றுண்டுகளுக்கு முன் வரை நீடித்திருந்தது.

இக்கற்களில் உருவமெழுதிய கற்களும், உருவமற்ற கற்களும் இருந்தன. தெருச்சந்தி களிலும், பாதைச் சந்திகளிலும் இருந்த கற்களை "கவலையகல்" என்றும், உருவமெழுதிய கற்களை "கடவுளெழுதியகல்" என்றும் புறநானூற்றுச் செய்யுள்கள் குறிப்பிடுகின்றன. சங்க இலக்கி யங்கள் தலை மக்களது வீரத்தையே போற்றுவன ஆகையாலும், புலவர்கள் மன்னர்களிடம் பரிசில் பெறப்பாடியவையாதலாலும், அவை தலைமக் களது நடுகல் வணக்கத்தையே குறிப்பிடு கின்றன, எடுத்துக்காட்டாக புறம், 231 அதிய மான் நெடுமானஞ்சி போரில் வேல் பாய்ந்து மாய்ந்த செய்தியைக் கூறுகிறது. புறம் 243 அவனுக்கு நடுகல் எடுத்த செய்தியைக் கூறு கிறது. ஔவை பாடிய இப்பாடலின் நடுகல் பற்றிய குறிப்பு பின்வரும் அடிகளில் காணப் படுகிறது.

*"இல்லாகியரோ, காலை மாலை*
*நடுகற் பீலி குட்டி நார் அரி*
*சிறுகலத்துகுப்பவும் கொள்வன் கொல்லோ"*

அதியமான், ஔவையை ஆதரித்த தலைவன். அவனது நடுகல்லைக் கண்டு ஔவை, பிறருக்கு உணவளித்துப் போற்றிய இத்தலைவனுக்கு பிண்ட உணவு பிறர் ஊட்டும் நிலை வந்து விட்டதே என்று கூறி வருந்துகிறார்.

"நடுகல் பீலி குட்டி" என்று வருணிக்கப் படும் கல், உருவம் செதுக்காத கல் தான். பீலி சூட்டுவதும், சிறுகலத்துங்கள் வார்ப்பதும் ஆவிச் சடங்குகள். அதியமானது ஆன்மா மகிழ்ச்சியோடிருக்க அவனது மக்கள் செய்யும் சடங்குகள். 6-வது நூற்றுண்டிற்குப் பிற்பட்ட காலத்துக் கற்களை அகழ்வாராய்ச்சியாளர் கண்டுபிடித்துள்ளனராயினும், [ சங்ககாலக் கற்கள் எவையும் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆயினும் பிற்காலக் கற்கள், இலக்கியத்தில் குறிக்கப்படும் கற்களைப் போல செதுக்சப்பட்டி ருக்க வேண்டும்.

சங்ககாலக் கற்களை ஆராய்ச்சியாளர்கள் அகழ்ந்தெடுத்துக் காட்டாவிடினும், அக்கால நடுகல் சடங்குகள் பற்றிய வருணனைகளை சங்க இலக்கியங்களில் படிக்கிறோம். இவை யாவும் மன்னர்கள், படைத் தலைவர்களது நடுகற்களுக்கு சமூகாலத்து மக்கள் செய்த பூசனையாகவும், சாந்திச் சடங்குகளாகவுமே இருத்தலைக் காணலாம்.

இக்கற்கள் கல்லறைகளின் மீது மட்டு மல்லாமல், இறந்து விழுந்த இடத்திலும், இறந்தவனது ஊரிலும், அவனது மரபினர் வாழ்ந்த ஊரிலும் நடப்பட்டு வணங்கப்பட்டன. எனவே இவற்றை கல்லறை மீதிருந்த அடையா ளங்களாகக் கொள்வதற்கில்லை. இறந்தவர் உடல்களை எரிக்கும் வழக்கம் தோன்றிய பின்னர், கல்லறையில் உடலைப் பாதுகாத்து

புதைத்து வைக்கும் வழக்கம் மறைந்து, கல்லை மேற்கூறியவாறு எரித்த இடத்தில் இல்லாமல் வேறிடங்களில். நாட்டும் வழக்கம் தோன்றிற்று. இன்றும் இவ்வழக்கத்தின் எச்சத்தை, கல்நாட்டுதல் என்ற சாவுச்சடங்கில் காணலாம். சில சாதியினர் சுடுகாட்டுக்கு வெகுதூரத்தில் உள்ள ஒரு அரச மரத்தடியில் சிறிய கல்லைப் புதைத்து வைக்கின்றனர். அவ்விடத்தில் இறந்தவரது ஆன்மா இருப்பதாகக் கருதி சடங்குகள் செய்கின்றனர். சில சாதியினர் இறந்தவர் ஆவி, அவனுடைய வீட்டில் இருப்பதாகக் கருதி வீட்டில் வடக்கு மூலையில் ஒரு குழி தோண்டி கல் நாட்டுகின்றனர். இச்சடங்கு நடக்கும் பொழுது சொல்லப்படும் மந்திரங்களிலிருந்து இறந்தவனது ஆன்மா அங்கிருப்பதாக கருதுகிற நம்பிக்கையை அறிய முடிகிறது.

ஓர் தலைவன் இறந்த பின் அவனுக்குச் செய்வதற்குரிய நடுகல் சடங்கு பற்றி ஆறு செயல்களைத் தொல்காப்பியர் கூறுகிறுர். அவையாவன: 1) காட்சி; 2) கால்கோள்; 3) நீர்ப்படை; 4) நடுதல்; 5) பெரும்படை; 6) வாழ்த்து.

முதலில் நிமித்திகன் அல்லது கணியான் சுட்டிக்காட்டும் இடத்தில் கல்லைத் தேர்ந்தெடுத்து வெட்டிக்கொண்டு வருவதுதான் இச்சடங்கு. ஏன் ஓர் குறிப்பிட்ட இடத்தில் கல்லை வெட்ட வேண்டும்? இறந்தவனது ஆவி பற்றிய நம்பிக்கைகள் இரண்டுதான் இதற்கு காரணம். "இறந்தவனது ஆன்மாவை சில சடங்குகள் மூலம் ஓர் குறிப்பிட்ட இடத்திற்கு வரவழைக்கலாம். அங்குள்ள ஓர் பொருளில் நுழைந்து கொள்ளச் செய்யலாம் என்ற நம்பிக்கை உலகமெங்கும் பண்டைய மக்களின் பண்பாட்டில் காணப்படுகிறது." ஜே. ஜி. பிரேஸர் (J. G. Frazar) இதனை விளக்கியுள்ளார். "ஆன்மா உடலிலிருந்து பிரிந்து, சாவு ஏற்படாமலேயே சில காலம் இருத்தல் கூடும் என்பது பண்டைய மக்களின் நம்பிக்கை. சில காலம் இருக்க முடியுமானுல் நெடுநாட்கள் இருக்க முடியும் என்பதும் சாத்தியமே. அப்படி பிரிந்திருக்கும் பொழுது ஒரு பகுதி ஆன்மா வேறிடத்திலும், ஒரு பகுதி ஆவியின் இருப்பிடத்திலும் இருக்கும். உடலைவிட்டு பிரிந்திருக்கும் ஆன்மா ஒரு பறவை, செடி, மரம், பெட்டி, புழு, மீன் முதலியவற்றில் இருக்கும். இவற்றிற்கு ஆபத்து ஏற்பட்டால், ஆன்மாவின் மற்ருேர் பகுதி உறையும் உடலுக்கும் ஆபத்து ஏற்படும்."[1] இந்நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு புராதன மக்கள் படைத்த நூற்றுக் கணக்கான கதைகளை பிரேஸர் கூறுகிறுர். இக்கதைகள் பண்டைய மக்கள் அனைவரிடத்தும், வழங்கி வந்தன என்றும் இனக்குழு மக்கள் பெரும்பாலோரிடத்தும் வழங்கி வருகின்றன என்றும் அவர் கூறுகிறுர். இக்கூற்றை வலியுறுத்த அவர் 100க்கு மேற்பட்ட எடுத்துக்காட்டுகளை குறிப்பிட்டுள்ளார்.[2] இக்கதைகளில் நெடுநாள், ஆவி குடியிருக்க வேண்டுமானுல், அழியாத, கடினமான உயிரல்லாத பொருள் தேவை என்ற நம்பிக்கை, மேற்கூறிய உயிருள்ள பொருளில் உயிர்போய்த் தங்குகிறது என்ற நம்பிக்கையின் வளர்ச்சியாகத் தோன்றியது. காலத்தால் பிற்பட்ட பண்டைய மக்களின் கதைகளில் கற்களில் ஆன்மா நெடுநாள் தங்கமுடியும் என்ற கருத்துத் தோன்றியது. கல், வைரம், முத்து போன்றவற்றில் அரக்கர்கள் உயிர்கள் நெடுநாள் தங்கியிருந்ததாகக் கதைகள் உள்ளன என்பதை பிரேஸர் எடுத்துக்காட்டியுள்ளார். இவ்வாறு உடலிலிருந்து சிறிது காலம் பிரிந்து ஒரு கல்லில் உயிர் தங்க முடியுமானுல், உடல் அழிந்து அதிலுள்ள ஆவி வேறுலகம் சென்ற பின், கல்லிலுள்ள அதன் மற்ருேர் பகுதிக்கு அது திரும்ப முடியும் என்ற நம்பிக்கையும் மேற்குறிப்பிட்ட கருத்திலிருந்து வளர்ந்தது. இதனுலேயே இறந்தவனது ஆன்மாவின் ஒரு பகுதியைக் கொண்டிருக்கும் கல்லைத் தேட வேண்டும். ஒரு பகுதி ஆவி உலகிலேயே ஒரு கல்லில் இருக்கும். மற்ருேர் பகுதி தேவருலகை சென்றடையும். இவ்வாறு ஆவிகுடிபுகுந்த கல்லை கணியானும் சோதிடனும் கண்டறிவார்கள்.

பிற்காலத்தில் ஆவி குடி புகுந்திருக்கும் கல்லைக் கண்டு பிடிக்க முயலாமல் ஒரு புனிதமான கல்லில் ஆவியை மந்திரங்களின் சக்தியால் புகுந்துகொள்ளச் செய்யலாம் என்ற நம்பிக்கை தோன்றியது.[3] ஒரு புல், ஒரு

பொம்மை, அல்லது கல், அல்லது சிலையில் அதனை குடிபுகச் செய்யலாம் என்று மக்கள் நம்பத் தொடங்கினர். பேய்களும் ஆவிகள் தான். அவற்றை ஒரு தேங்காய் அல்லது முட்டைக்குள் வரவழைத்து எங்காவது கொண்டு போய் விட்டு விடலாம் என்ற நம்பிக்கை, மந்திரவாதச் செயல்கள், சூனியச் செயல்களின் அடிப்படையாயுள்ளது. இது போலவே விக்ரகங்கள் பிரதிட்டை செய்யப் படும்பொழுது தெய்வீக சக்தி அதனுள் நுழையும்படியாக பல மந்திரங்களை ஓதி சடங்குகளைச் செய்யும் வழக்கங்கள் சைவ-வைணவ ஆகமங்களில் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வாறு செய்வதற்கு ஆவாகனம் என்றுபெயர். இவ்வழக்கம் ஆவியை ஒரு பொருளில் குடியேறச் செய்யும் வழக்கத்தின் வளர்ச்சியே. தொல்காப்பியர் கூறும் பெரும்படையும், கல்முறை பழிச்சலும், உணவு படைத்து, பாடல்கள் பாடி, துணங்கைக் கூத்தாடி, இறந்தவர் ஆவிகளை கற்களுள் உறைய அழைக்கும் சடங்கேயாகும். இக்கல்லை நிலைபெற ஓரே இடத்தில் அமைத்தல் இல்-கொண்டு புகுதலாகும்.

நீர்ப்படை என்பது நீராட்டுதல். நீரினால் பொருள்கள் புனிதமடையும் என்ற நம்பிக்கை பண்டைய மக்களுக்குண்டு.[4] நீருக்கு இயற்கையில் பூமியை பயன்தரச் செய்யும் சக்தி இருப்பதைக்கண்டு பண்டைக் கால மக்கள், அதற்குப் பல அதிசய சக்திகள் உண்டென்று நம்பினர். புனிதமான தீர்த்தம் என்று சில இடங்களைக் கருதி அவ்விடத்தின் நீர் மலட்டுத் தன்மையைத் தீர்க்கும், இறந்தவன் சாம்பலை அங்கு கரைத்தால், அவன் ஆவி சுவர்க்கம் புகும் என்று நம்பினார்கள். இதனால் தான் வெறும் கல்லை ஆவிபுகும் கல்லாக்கும் தகுதி பெறச் செய்ய அதனை நீராட்டுவார்கள். இது சாதாரணமாகக் குளிப்பாட்டுதல் அன்று. மந்திர ஸ்நானம் ஆகும். அதன் பின்னர் இக்கல்லுக்கு ஊட்டுப் படைப்பார்கள். இறந்தவன் உயிரோடிருந்த காலத்தில் அவனுக்கு விருப்பமாயிருந்த உணவை அவனுக்குப் படைத்து, அதனைத் தாங்களும் சடங்காசார முறையில் உண்பார்கள்.[5] இதனால் அவனுடைய ஆற்றல் இப்படைப்பின் உணவை உண்கிறவர்களுக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு இச்சடங்கைச் செய்கிறார்கள். பெரும்படையில் உயிர்ப்பலி கொடுப்பதும், கள் படைப்பதும் வழக்கமாயிருந்தது, இதனையே பெரும்படை என்று தொல்காப்பியர் அழைத்தார்.[6]

பின் கல்லில் நிலைத்து உறையும் ஆன்மாவை வாழ்த்தி ஆடலும் பாடலும் நிகழ்த்துவார்கள். இவ்வாழ்த்து பிற்காலத்தில் வளர்ச்சியுற்ற நிலையில் வஞ்சிக் காண்டத்தில் காணப்படுகிறது.

புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியரும் நடுகல் சடங்குகளை ஆறாகவே கூறுகிறார். அவர் கூறும் ஆறு சடங்குகளும் வருமாறு: (1) கல்காண்டல், (2) கற்கோள் நிலை, (3) கல் நீர்ப்படுத்தல், (4) கல் நடுதல், (5) கல்முறை பழிச்சல், (6) இல்கொண்டு புகுதல்.

இரு நூல்களிலும் முதல் நான்கு சடங்குகள் ஒன்றாகவே கூறப்பட்டுள்ளன. ஐந்தாவது, ஆறாவது சடங்குச் செயல்கள் வேறுபடக் கூறப்பட்டிருக்கின்றன. கல்முறை பழிச்சலும், இல் கொண்டு புகுதலும் வேறுபட கூறப்பட்ட சடங்குகள். பழிச்சல் என்பது பூசனை. பெரும்படையை இச்சடங்கினுள் புறப்பொருள் வெண்பாமாலையாசிரியர் அடக்கிக் கூறினார், இல்கொண்டு புகுதல் என்பது இந்நூலில் புதிதாகக் கூறப்பட்டதாகும். இல் என்பது கல் நாட்டும் இடம் என்பதை உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். அவ்வாறாயின், அவ்விடத்தில் ஒரு சிறு பீடமோ அறையோ இருக்கும். அதனுள் கல்லைக்கொண்டு சேர்த்தலை இச்சடங்கு குறிப்பிட வேண்டும். எனவே முதலைந்து சடங்குகள் கல்வெட்டிய இடத்திலும் இறுதிச் சடங்கு கோயில் கட்டிய இடத்திலும் நிகழ்த்தப்பட்டிருக்க வேண்டும்.

இந்நூல்கள் தோன்றிய காலத்திற்கு மிகவும் பிற்பட்ட காலத்தில் வாழ்ந்த உரையாசிரியர்கள் நடுகற்களைப் பற்றி தொல்காப்பியரும், ஐயனாரிதனாரும் அறிந்திராத செய்திகளைக் கூறுகிறார்கள். ஆனால் தங்கள் காலத்து வழக்கம் என்று வேறுபடுத்திக் குறிப்பிடாமல், தொல்காப்பியர், ஐயனாரிதனார் காலத்து வழக்-

கங்கள் என்று கருதியே அவர்கள் அச்செய்திகளைக் குறிப்பிடுகிறார்கள். அவர்கள் நடுகற்களில் ''ஊரும், பேரும், பீடும்'' எழுதியிருந்ததாகக் குறிப்பிடுகிறார்கள். இவற்றை முதல் நூலாசிரியர்கள் குறிப்பிடவில்லை. எனவே இறந்தவனது ஊரையும், பேரையும் அவனது வீரச்செய்திகளையும் நடுகல்லில் எழுதுகிற வழக்கம் பிந்திய காலத்தில் எழுந்தது என்பதை ஊகிக்கலாம்.

இவ்வாறு வளர்ச்சி பெற்ற நடுகல் மரபுகளின் ஒரு வளர்ச்சி நிலையை தமிழகத் தொல்பொருள் ஆய்வாளர்கள் அகழ்ந்தெடுத்திருக்கும் நடுகற்களை ஆராய்வதன்மூலம் அறியலாம்.

தமிழ்நாட்டு தொல்பொருள் ஆய்வுத்துறையினர் செங்கம் வட்டத்தில் அறுபதிற்கும் அதிகமான நடுகற்களைத் தோண்டியெடுத்துள்ளனர்.7 இவை விளக்கும் செய்திகள் இலக்கியத்திலிருந்தும், இலக்கண நூல்களிலிருந்தும் அறியப்படும் தலைமக்களது நடுகல் செய்திகளாக இல்லாமல், பொதுமக்களது நடுகற்களாகவே காணப்படுகின்றன. அதாவது, ஆளும் பிரிவினரது நடுகற்களைப்பற்றி இலக்கிய இலக்கணங்கள் கூறுகின்றன. நாட்டு மக்களது வீரர்களது நடுகற்களை (Folkhero stones) ஆய்வாளர்கள் அகழ்ந்தெடுத்துள்ளார்கள். நடுகல் எழுத்துக்களிலிருந்து, இவை சேவகர், பறையர், இளையர் முதலிய சமுதாயத்தின் கீழ் நிலை மக்களது நடுகற்களாகவே உள்ளன என்பதை அறிகிறோம். இவர்களுக்கு நடுகற்சடங்கு செய்து, எழுத்துக்களை கல்லில் வெட்டியவர்கள் இறந்தவனது ஊரார் அல்லது சுற்றத்தார்களாகவே இருப்பதைக் காணலாம்.

உதாரணமாக,

''கங்கதி அரைசரு மக்கள்மேல் விண்ணனூர்
சேவகந் தொப்புரவருப்பாடி ஆள்கின்ற பசிர
பணாணன் குறட்டாதன் வரமுகொன்ட
ஞான்று எறிந்து பட்டான்''8

''கங்கரைசரு சேவகரு எறிந்து பட்டாறு''

''கருங்காலி பாடி ஆள் கொற்ற வாசிக்
கருஞ்சாத்தனுரு மகன்'' 9

''பொன்மோதண்ணூர் சேவகன் அக்கந்தைக்
கோடன் தொறு விடுவித்துப் பட்டான்கல்''10

''பொன்றைம்பனூர் தொல்லகச்
சேவகன் காகண்டி அண்ணுவன் கல்''11

இவர்கள், சேவகன், ஆள் என்றே குறிப்பிடப்பட்டுள்ளார்கள். இவர்கள் மன்னர்களோ, சிற்றரசர்களோ, படைத் தலைவர்கள் அல்லர். இவர்கள் சாவிற்குக் காரணம் என்ன?

தம் ஊரை முற்றுகையிட்ட அரசர், சிற்றரசர் படைகளை எதிர்த்துப் போராடி உயிர் விட்டவர்கள் சிலர். இதற்கு ஓர் உதாரணம்:

.............. ''ஊர் போ
ந்தை மேற் சக்கரவரு படை வந்த ஞா
ன்றுரைக்கையார் இளமகன் வந்தாவ
ன் மகள் னந்தி எறிந்து பட்டா
ன் கல்''12

இக்கல்லுடையான், சக்கிரவரு படை தன் ஊரை முற்றுகையிட்ட போது போர் செய்து உயிர்விட்டவன். அவன் பெயர் நந்தி.

சிற்றூர் தலைவர்களும், குறுநில மன்னர்களும் வெட்சியப் போர்களில் ஈடுபட்டிருந்தனர். அவர்கள் பசுநிரைகளையும், எருமை மந்தைகளையும் கொள்ளைகொண்டு செல்லும்பொழுது நிரை மீட்க நடந்த பூசல்களில் இருபுறமும் உயிர்ச்சேதம் ஏற்பட்டது. மன்னர்களும் சிற்றரசருமே கொள்ளையடிக்க வந்தவர்கள். இறந்தவர்கள் ஊர்ப்பசுமந்தையைப் பாதுகாக்க போராடிய கரந்தை வீரர்கள் — அதாவது கொள்ளை கொண்டு போன பசுக்களையும், எருமைகளையும் மீட்கப் போராடியவர்கள். உதாரணமாக கீழ்வரும் கல்வாசகங்களில் எதற்காக நடுகல் வீரன் உயிர்விட்டான் என்பது கூறப்படுகிறது.

''வாணகோ அரைசரு மரு
மக்கள் கந்த விண்ண
னூர் கூடல் தொறுக்கொண்ட
ஞான்று தொறு இடுவித்துப்பட்டா
ன் பொன்னரம்பனூர் கொல்லகச்
சேவகன் தாகண்டி அண்ணுவன் கல்''13

''வேண்ணுட்டுக் கோவலூ ஊரரைச
ர் பெரும்பாணதியரை சர் சேவக
ன் சிற்றுப்பாப்பணையனுர் மறி
தொறுக்கொண்ட ஞான்று
பட்
டான்'' 14
மீகொன்ற நாட்டு பாசாற்று பகைம
தர் சேவகன் தொறு இடுவித்துப் பட்டான்
ணய நாத்தன்'' 15

''மறுக்கோட்டு வேட்டுவர் தாழை ஊர்
தொறுக் கொண்ட ஞான்று தா
ழை ஊருடைய
வண்ணக் கடையனுர்
தொறு மீட்டுப் பட்டார்'' 16

எனவே நடுகல் வீரர்கள் தங்கள் ஊரில் அரசரும், சிற்றரசரும், வேட்டுவரும் படையெடுத்து வந்து எருமை மந்தைகளைப் பற்றிச் சொல்லும் பொழுது மீட்டுக்கொணர நடந்தபோரில் கொல்லப்பட்டனரென்று தெரிகிறது ''தொறு மீட்டுப் பட்டார்'' என்ற வாசகம் இதனைக் குறிப்பிடுகிறது. இன்னும் சிலர் மந்தையைப் பற்றிச் செல்லும்பொழுது கொல்லப்பட்டனர். அவர்களை ''தொறுக்கொண்ட ஞான்று பட்டார்'' என்ற வாசகம் குறிப்பிடுகிறது. மந்தையைக் கவர வரும்பொழுது தடுத்தும், கவர்ந்து செல்லும்பொழுது தடுத்தும் நடைபெற்ற போர்களில் இறந்தவர்களை ''பூசலில் பட்டார்'' என்ற வாசகம் குறிப்பிடுகிறது. கள்வர்களையும், அரசர், சிற்றசர் படைகளையும் விரட்டி, கவர்ந்து சென்ற மந்தைகளை ஊர் வீரர்கள் மீட்டு வந்த செய்தியை, தொறுக் கொண்ட ஞான்று இடுவித்துப் பட்டான்'' என்பது போன்ற சொற்றொடர்கள் குறிப்பிடும்.

தொறுக் கொண்ட ஞான்றும், பூசலிட்டும், தொறு மீட்டும் பட்டவர்கள் அரசியல் பெரும் போர்களில் மாண்டவர்களல்லர். ஆநிரை வளமுடைய ஊர்களை அத்தகையவளம் இல்லாத மக்கள் தலைவர்கள் வளைந்து கொண்டு ஆநிரைகளைக் கவர்ந்து செல்லும் பொழுதும், சிற்றரசர், அரசர் படைகளும் பகை மன்னர் நாட்டு மக்களின் ஆநிரைகளைக் கவர்ந்து சென்ற பொழுதும் மக்களிடையே தோன்றிய வீரர்கள், மக்களை அணியாகப் படை திரட்டி போராடியுள்ளார்கள். இவைதாம் பூசல்கள், போர்களல்ல. பகையரசர் படைகள் ஊரை அழிக்க முயலும் பொழுது அதை எதிர்த்துப் போரிட்டு, ஊரைக் காப்பதில் உயிர் விட்டவர்கள் நடுகல் வீரர்களாகியுள்ளனர். இக்கல் வாசகங்களிலிருந்து எருமை மந்தைகளைக் கவரவும் மீட்கவுமே மிகப்பல பூசல்கள் நிகழ்ந்துள்ளன என்று அறிகிறோம். ஆநிரையும், ஆட்டு மந்தையும் ஒவ்வொரு சமயம் பூசலுக்குரிய செல்வங்களாயிருந்தன.

''சாத்தனூர் ஆண்தொறுக் கொண்ட ஞான்று''
(ஆண்தொறு - பசுமந்தை)

''கோவனூர் ஊரரைசர் பெரும்பானதி
யரைசர் சேவகன் சிற்றுபாடி பனை
யனுர் மறிதொறுக் கொண்ட ஞான்று
(மறிதொறு)

ஆநிரை கவர்வதிலும், மீட்பதிலும் நடைபெற்ற போர்களில் மட்டுமல்லாமல் தம்மூர்ப் பெயர் மக்களின் மானம் காக்கவும் வீரர்கள் போரிட்டு உயிர்நீத்துள்ளார்கள். இதற்குரிய ஒரே ஒரு சான்று தர்மபுரி மாவட்டத்தில் சாமல் பட்டியருகில் கிடைத்துள்ளது. புலவர் வரதராசன், ஒரு நடுகல்லைக் கண்டுபிடித்து, அதன்மேல் வெட்டியுள்ள கல்வெட்டையும் பிரதி செய்துள்ளார்.

''பெண்டுகள் கூறை உறிந்தபோது எறிந்து பட்டான்'' என்ற வாசகம், பகைவர்கள் தம்மூர் பெண்களின் சீலையை உறிந்தவர்களை எதிர்த்துத் தாக்கியபோது, பகைவர்களால் கொல்லப் பட்டான் என்று தெரிகிறது. இவ்வாறு ஏழை எளிய கிராமப் பெண்களின் மானத்தைப் பறித்தவர்களை எதிர்த்துப் போராடி உயிர்நீத்தவர்களுக்கு நடுகல் நாட்டிய வழக்கம் விளங்குகிறது. நாட்டுப் பாடல்களிலும் இத்தகைய வீரர்கள் அதைத் தலைவர்களாகப் போற்றப் பட்டுள்ளனர். கௌதலமாடன் கதை இதற்கோர் உதாரணம்.

இவ்வாறு மந்தைகளைக் கவர்வதிலும், மீட்பதிலும் உயிர் விட்டவர்களுக்கும் மாதர் மானம் காக்க உயிர்விட்டவர்களுக்கும் ஏன் மக்கள் நடுகல் நாட்டி, சடங்குகள் செய்து வழி

டட்டனர்? அதனால் கிடைக்கும் பயன் என்னவென்று அவர்கள் கருதினர்? இவை குறித்து நடுகற்களை வழிபட்டவர்களுடைய நம்பிக்கைகள் எவை?

இவ்வினாக்களுக்கு விடையளிக்க நாம் பண்பாட்டு மானிடவியல் ஆராய்ச்சி முடிவுகளுக்கும் நாட்டுப் பண்பாட்டு நம்பிக்கைகளுக்கும் நமது கவனத்தைத் திருப்ப வேண்டும்.

இறந்து போனவர்களது ஆன்மா, அதனுடைய சக்தி பற்றி இனக்குழு மக்களுக்கும் பண்டைய நாகரிக நிலையிலிருந்த மக்களுக்கும் உலக முழுவதும் சில நம்பிக்கைகள் இருந்தன. இறந்து போனவர்களுடைய ஆன்மாவிற்கு ஆற்றல் அதிகம். அது ஆக்க சக்தியாகவும், அழிவு சக்தியாகவும் வெளிப்படலாம். அவ்வான்மா அவர்களுடைய சந்ததியாரோடு தொடர்பு கொள்ளும். அவற்றைச் சடங்குகள், வழிபாடுகள், சாந்திகள் மூலம் சந்ததியார் மகிழ்வித்தால், அவர்களுக்கு அவர்களுடைய முன்னோர்களின் ஆவி ஆற்றலளிக்கும். போரில் உதவும். ஆடுமாடுகளைப் பாதுகாக்கும். வயல்களில் விளைச்சலை அதிகப்படுத்த உதவும். இதற்காக தமது முன்னோர்களின் ஆவிகளுக்கு சடங்குகள் நடத்தி ஊட்டுக் கொடுக்கவேண்டும். படையல் போட வேண்டும். இதற்கு ஆன்றோர் வணக்கம் (ancestor worship) என்று பெயர். ஆப்பிரிக்க மக்கள் இவ்வான்மாக்களுக்கு உருவம் கொடுத்துள்ளார்கள். அவற்றை சுட்ட மண்ணாலும், கல்லாலும் செய்து வழிபட்டனர். இவ்வணக்கம் கென்யா, கோல்ட் கோஸ்ட், நைஜீரியா முதலிய நாடுகளில் பல இனக் குழு மக்களிடையே வழக்கத்திலுள்ளது. இது போலவே தென்கடல் தீவுகளின் மக்கள், சிவப்பு இந்தியர்களில் பல இனமக்களிடையே வழக்கிலுள்ளது.[18] இந்தியாவில் ஆன்றோர் உருவ வணக்கமில்லாது போயினும் ஆவி வடிவில் அவர்கள் திவசதினங்களில் வழிபடப்பட்டு, பிராம்மணர்களை ஆவியின் உறைவிடமாகக் கருதி உணவளித்து வழிபடும் வழக்கம் உள்ளது. தங்கள் தந்தையருக்குத் திவசச்சடங்கு நடத்தாதவர்களுக்கு பல இன்னல்கள் விளையுமென்பது ஓர் பரவலான நம்பிக்கை.

இந்த ஆன்றோர் வணக்கமே குழு முன்னோர் வணக்கத்திலிருந்து தோன்றியிருக்க வேண்டும். ஒவ்வொரு குழுவும் ஒரு குலக்குறி விலங்கை முன்னோராகக் கருதினர். அதனைப் புனிதமெனக் கருதினர். அதன் வளர்ச்சியாக மனித உருவில் அதனை வழிபட்டனர். பின்னர் இறந்து போன தமது முன்னோர்களை அதனோடு சேர்த்து வழிபட்டனர். இவர்கள் தெய்வங்களிலிருந்து வேறுபட்டவர்கள். இவர்களும் குழுவிற்கு ஆற்றல் அளிக்க வல்லவர்கள் என்ற நம்பிக்கை முற்கால இனக்குழு மக்களிடம் இருந்தது. தற்கால மக்களிடமும் உள்ளது. இதன் வெளிப்பாட்டைப் பல குழு வணக்க முறைகளிலும், பலிச் சடங்குகளிலும் காணலாம்.

பண்டைய மக்கள் ஒருவன் தனது குழு உறுப்பினர்களைக் கொல்லுவது பெரிய குற்றமெனக் கருதினர். ஆனால் வேறு குழுவிலுள்ளவர்களைக் கொன்று, தமது ஆன்றோர்களுக்கு இருப்பது போன்றே கல்நாட்டி, அவர்களது ஆவிகளுக்கு, தமது முன்னோர்களுக்குச் செய்யும் சடங்குகளைச் செய்து விட்டால், அவை தமது முன்னோர்களோடு சேர்ந்து தமது குழுக்கழுக்கு ஆற்றலளிக்கும் என்ற நம்பிக்கை அங்காமி நாகர்கள், ஸரவாக்கிலுள்ள தகவெட்டி மக்கள், நீகிரோவ உறாட்டன்டாட் மக்களிடையே நிலவுகிறது.[19] இதனால் ஒரு வீரனுடைய சமூக மதிப்பு அவன் எவ்வளவு மனிதர்களைக் கொன்று அவர்களது ஆவிகளைத் தனது முன்னோர் ஆவிகளோடு சேர்த்துள்ளான் என்பதைப் பொறுத்து உயர்வடையும். இதை காட்டிக் கொள்ள மேலே குறிப்பிட்ட இனக்குழு உறுப்பினர்கள் மரத்தால் செய்த மண்டை போட்டு உருவங்களை நூலில் கோர்த்து அணிவார்கள். ஒவ்வொரு உருவமும், ஒரு மனிதன் தலையை அவன் வெட்டினான் என்பதைக் குறிக்கும். குழுவின் ஆற்றலை அதிகரிக்க, அதிக ஆவிகளை தமது முன்னோர்களாக்க வேண்டும். அதற்கு பலரைக் கொன்று, இறந்தவர்களது ஆவிக்கு தமது முன்னோருக்குச் செய்யும் சடங்குகளைச் செய்து, அவர்களோடு சேர்த்துவிட வேண்டும்.[20]

இவ்விரண்டு நம்பிக்கைகள் உலக முழுவதிலும் இனக்குழு மக்களிடம் பரவியிருந்தன. அவர்கள் நாகரிக அணியின் படிக்கட்டுகளில் ஏறுகிற பொழுது நம்பிக்கையின் அடிப்படையில் அவர்கள் செய்து வந்த உயிர்க்கொலை மட்டும் நின்று விட்டது. ஆனால் அதன் எச்சங்கள் (suruwals) இனக்குழு மக்கள் நாகரிகமடைந்த பின்னும் நிலைத்தன. அவ்வாறு நிலைத்த எச்சங்களுள் ஒன்றே நடுகல் வணக்கம். இது போன்றதோர் வணக்கம் உலக முழுவதுமுள்ள இனக்குழு மக்களிடையே உள்ளது. தமிழகத்தில் நடுகல் வணக்கம் பண்டை வரலாற்றுக் காலத்தில் இருந்தது. நடுகல் வீரர்களின் ஆன்மாக்களுக்கு ஊரையும், மந்தையையும், ஊர் மக்களையும் பாதுகாக்கக்கூடிய ஆற்றல் உண்டென்ற நம்பிக்கையில் தான், அவர்களுடைய நடுகல்களுக்கு 'பெரும்படை' செய்து உணவும், கள்ளும் படைத்ததும், ஆடிப்பாடி வாழ்த்தி மகிழ்விக்க முயன்றதும் ஆகிய செயல்களை ஊராரும், உறவினரும் செய்தார்கள். இறந்தவனது ஆன்மாவை கல்லில் நிலையாக இருக்கச் செய்வதற்காகத் தான். பொருத்தமான கல்லை வெட்டிக் கொண்டு வந்து நீராட்டி, ஸ்தாபித்து உணவும், கள்ளும் கொடுத்து பாராட்டினார்கள். வீரன் ஆன்மாவை 'இல்கொண்டு' சேர்த்தது — தங்களோடு இருந்து தங்களுக்கு பசு, எருமை, ஆட்டு மந்தைகளைப் பாதுகாக்க ஆற்றலளிக்க வேண்டுமென்பதற்காகத்தான், தங்கள் ஊரில் வாழ்ந்தவனை மட்டுமல்லாமல் பகைவர் படை வீரர்களுக்குக் கூட, நடுகல் நட்டிருப்பது, தங்களுக்கு உதவக் கூடிய ஆவிகளின் எண்ணிக்கையை அதிகரித்து தமது ஆவிப் படைவலிமை அதிரித்துக் கொள்ளவே தான்.

பிற்காலத்தில் இத்தகைய விழாச் சடங்குகளுக்காக ஊர்நிலத்தை இரத்த காணிக்கையாக நடுகல்லுக்கு எழுதி வைத்தார்கள். இந்த நம்பிக்கை எவ்வளவு அழுத்தமாக இருந்ததென்பதற்கு, இந்த நிலத்தைக் கவருபவனுக்கு எவ்வளவு கடுமையான சாபங்களை அவர்கள் அளிக்கிறார்கள் என்பதே தெளிவாக்கும்.

உதாரணம் :

"படாரிக்கு நவகண்டங்குடுத்து குன்றகத் தலையறுத்து பிடலிகை மேல் வைத்தானுக்கு திருவாண்மூர் ஊரார் வைத்த பரிசாவது. எமூர் பறைகொண்ட கல் மேடு செய்தார், ஆவிக்குக் குடுப்பாரானர். பொத்தனுய் கிழவர்களும் தொறுப்பட்டி நிலம் குடுத்தார்கள். இது அன்றென்றார் கங்கையிடைக் குமரியிடை எழுநூற்றுக் காதமும் செய்த பாவத்துப் படுவார். அன்னுன்ரார் அன்ருள் கோவுக்கு காற்பொன் தண்டப்படுவார்".21

மேற்கண்ட நடுகல் குறிப்பிடும் ஆவிக்குப் பிண்டம் நறவும் அளித்தால் அது தமக்கு உதவும் என்ற பயன்பாட்டுச் சிந்தனைகளே அவர்களுக்கிருந்தன. கடவுள் எழுதியதென்பது கூட செய்வதைக் குறிப்பிடாமல் உடல் கடந்த ஆவியின் கற்பனைப் படிமம் என்றே அக்கால மக்கள் கருதினர் என்று கொள்ளலாம். இவ்வழக்கம், குடைவரை, கட்டுமானக் கோயில்கள் தோன்றி, அவற்றிற்கு நில தானங்கள் அளிக்கப்பட்ட காலத்திலிருந்து தோன்றியிருக்க வேண்டும்.

போரில் இறந்தவனுக்கென்று, மிகச்சிறப்பு வாய்ந்த உலகம் ஒன்று உண்டென்பது பண்டைய நாகரிகமாக மக்கள் அனைவருடைய நம்பிக்கை.22 எலிஸியம் என்பது இறந்த வீரர் புகும் சுவர்க்கம் என்றும் அது இவ்வுலகிலேயே உள்ளதென்றும் பண்டைய கிரேக்கர்கள் நம்பினர் 23 இதுபோலவே பண்டைய ஜெர்மானியர், ரோமானியர், எகிப்தியர், தமிழர், சீனர் அனைவரும் "வீர சுவர்க்கம்" என்ற கருத்தில் நம்பிக்கையுடையவர்களாயிருந்தனர்.24 இதனைத் தமிழர் மேலோர் உலகு, வானோர் உலகு என்றழைத்தனர்.

அவ்வாருயின் இறந்த பின் இறந்தவனது ஆவி மேலோர் உலகிற்குச் சென்றுவிடும். அவனது புகழ்தான் இவ்வுலகில் எஞ்சும். பின் ஏன் வீரனுக்கு கல்நாட்டி வழிபட்டு தங்களுக்குத் துணையாக நிற்க வேண்டுமென அவனது ஆவயை வேண்டிக்கொள்ள வேண்டும்?

ஆவி பிரிந்த சில நாட்களுககு அது உலகில், விண்ணில் இருப்பதாகவும், சாவுச் சடங்குகள் கழிந்த பின்னரே வேறுலகு செல்வதாகவும் மக்கள் நம்பினர். அதற்குள் கல்நாட்டிச் சடங்கு செய்தால் ஆவியின் ஓர் பகுதி அங்கு தங்குமெனவும், விழாக்காலங்களில், பழம் பிறப்பு உணர்வுடைய மேலோர் உலகிலுள்ள ஆவி, இக்கல்லுக்கு வரும் என்ற நம்பிக்கை வழிபடுபவர்களுக்கு இருந்தது. வேண்டிக் கொள்கிற நேரத்தில் வானோர் உலக ஆவி கல்லுக்கு வந்து விடும். பின் அது வணங்கும் மக்களுக்குத் துணை புரியும்.

இதனால் தான் மக்கள் போருக்குச் செல்லும் பொழுது நடுகற்களை வணங்கி, பலி கொடுத்து, நடுகல் ஆவிகளது துணை பெற்றுச் செல்வதாக நம்பினார்கள்.

நடுகற்களில் பழமையானவற்றில் வீரன் போரில் பகைவர் அம்பாலோ, வேலாலோ புண் பட்டு நிற்கும் நிலை மட்டும் தான் செதுக்கப் படுகிறது.[24] இங்கு அவன் இவ்வுலக வீரனாக, குழுவிற்காக உயிர் கொடுத்த ஓர் மேலோனாகக் காட்டப்பட்டுள்ளான்.

அதற்குப் பிற்காலத்தில், கீழே மேற்குறிப் பிட்டபடி ஓர் புடைப்புச் சிற்பமும், அதற்கு மேல் மேலோர் உலகச் சித்திரமும் செதுக்கப்பட் டுள்ளன. அதில் வானமங்கையர் அவனை மாலை யேந்தி மேலோர் உலகில் வரவேற்பது போலச் சித்திரங்கள் காணப்படுகின்றன. இது 'மேலோர் உலகு' என்ற கருத்தைச் சித்தரிப்பதாகும்.

புலப்பள்ளியில் நடுகல்லில் மூன்றடுக்குகள் உள்ளன. முதலிரண்டு அடுக்கில் வீரன் புண் பட்ட நிலையில் காட்டப்பட்டுள்ளான். இரண் டாவது அடுக்கில் வானமடைந்தையர் வரவேற் கிறார்கள். மூன்றாவது அடுக்கில் ஒரு சிவலிங்க மும், நந்தியும் இருக்குமிடத்தில் அவன் வணங்கி நிற்கிறான்.[25] நாயன்மார்கள் காலத்திற்குப் பின் சைவம் பொது மக்களிடையே பரவிய காலத்தில் வீரர் சுவர்க்கத்திற்கு மேல் சிவ லோகம் என்றோர் உலகம் உண்டென்ற கருத்துத் தோன்றியது. அதன் பின் மேலோர் உலகிற்குச் சென்ற வீரன், இறுதியில் சிவ லோகம் சேர்வான் என்ற நம்பிக்கை உண்டாயிற்று.

வீரன் எவ்வுலகம் சென்றாலும், அவனோடு தொடர்பு கொண்டிருந்த மக்கள், அவனுக்குக் கல் நாட்டி, அவன் ஆவியைக் கல்லுக்கு வரவழைத்து, அதனிடம் உலகியல் பயன்களையே பெற விரும்பினர். ஆவி செல்லிமிடம் மேலோ ருகிலிருந்து சிவலோகமாயிற்றே தவிர, வழிபடும் மக்களின் பயன்பாட்டு நோக்கம் மாறவில்லை.

---

## NOTES AND BIBLIOGRAPHY


1 J. G. Frazer — The Golden Bow — Chapter on Disembodied Souls — beliefs.

2 J. G. Frazer — The Same chapter — Divisible soul — Next chapter — Divisible soul in Folk tales.

3 Ibid. — Divisible soul.

4 Any book on cultural anthropology — Belief in magical properties of water.

5 Sankar Sengupta — Indian Folklore — Chapter on water in ritual.

6 Verrier Elwin — The religion of a tribe — Refences to sacrifical food and feasts.

7 Editor — R. Nagaswamy — Chengam hero stones. செங்கம் நடுகற்கள். In Tamil.

8 9, 10, 11. Texts from Chengam hero stones.

12 Ibid. Do

13, 14, 15, 16. Ibid Do

17 Ibid. Do

18 Hamlyn Series of myths and mythology — Africa.

19 Ibid.

20 R. N. Majumdar — Castes and peoples of India — Chapter on prestige and values.

21 Chengam hero stones — Text

22 Robert Graves— Greek myths.

23 Kailasapatly — Heroic poetry —mentions Elysium, Walhalla and similar worlds, paradise.

24 Chengam hero stones—pictures

25 Pulappalli hero stones — picture. Aaraaichi - Vol. III, 2.

----

# வருமான வரி செலுத்துவோர்களே!

வரி செலுத்துவோர் ஒவ்வொருவருக்கும்




ஒன்றை வருமான வரி இலாகா கொடுத்திருக்கிறது. வரி செலுத்துவோர் அனுப்பும் சலான்கள், வருமான வரி கணக்குகள் (ரிடர்ன்ஸ்), இதர கடிதங்கள் முதலியவற்றை சீராகப் பதிவு செய்து தொகுத்து வைப்பதற்காக இந்த நம்பர் கொடுக்கப்பட்டிருக்கிறது.

தவறுதலாக உங்களுக்கு இரண்டு நிரந்தர கணக்கு நம்பர்கள் கொடுக்கப்பட்டிருந்தாலோ, நம்பர் ஏதும் கொடுக்கப்படாமல் இருந்தாலோ தயவு செய்து மதிப்பீடு செய்யும் உங்கள் வருமான வரி அதிகாரியுடனோ, வருமான வரிக் கமிஷனருடனோ தொடர்பு கொள்ளுங்கள். இரண்டு நம்பர்கள் கொடுக்கப்பட்டிருந்தால் ஒன்றை ரத்து செய்யும்படி கோருங்கள்; நம்பர் கொடுக்கப்படாமலிருந்தால் நம்பர் ஒன்றைக் கொடுக்கச் சொல்லுங்கள்.

வருமான வரி இலாகா உங்களுக்கு நன்கு சேவை செய்வதற்கு ஏதுவாக உங்களுடைய வருமான வரி கணக்குகள் (ரிடர்ன்ஸ்), சலான்கள் முதலியவற்றில் உங்களுடைய நிரந்தர கணக்கு நம்பரை மறவாமல் சரியாகக் குறிப்பிடுங்கள்.

davp 73/167

# தமிழ் வரலாற்று நாவல்கள்

எஸ். தோதாத்திரி, M. A.

[தமிழ் வரலாற்று நாவல்களின் முக்கியமான போக்கினை இக்கட்டுரையில் தோதாத்திரி ஆராய்கிறார். கல்கியிலிருந்து ரா சு. நல்லபெருமாள் வரை பழமையான வரலாற்றையோ, தற்கால வரலாற்றையோ எத்தகைய கண்ணோட்டத்தில் காண்கிறார்கள், எவ்வாறு வரலாற்று மனிதர்களையும், நிகழ்ச்சிகளையும் தமது இலக்கியம்படைப்புகளில் சித்திரிக்கிறார்கள் என்பதை சுட்டிக் காட்டுகிறார். ஒவ்வொருவரும் பழைமையை பயன்படுத்தும் போக்கையும், அப்போக்குகளில் காணப்படும் வேறுபாடுகளையும் சுட்டிக்காட்டுகிறார். மொத்தத்தில் ஒரேவிதமானபோக்கின் பல்வேறு அழுத்தங்கள்தான் நம்து வரலாற்று நாவலாசிரியர்களின் வரலாற்று நோக்குகளின் வேறுபாடுகள் என்று இவ்வாய்வாளர் கருதுகிறார்.

நா. ப. போன்ற 'காந்தியவாதி' களிள் வரலாற்று நோக்கு, நாவல் அழகியல் நோக்கு இவற்றை அண்ணாத்துரை, கருணாநிதி போன்ற திராவிட இயக்கத்து நாவலாசிரியர்களது வரலாற்று நோக்கு அழகியல்நோக்குகளோடு ஒப்பிட்டு விரிவாக ஆராய்தல் வேண்டும். எங்கே ஒற்றுமை, எங்கே வேற்றுமை என்பது விரிவாகச் சுட்டிக்காட்டப்படவேண்டும்.

நா. வா.]

0·1 தமிழகத்து வாசகர்கள் கைக்கு இன்று ஏராளமான வரலாற்று நாவல்கள் கிடைக்கின்றன. கடந்த பத்தாண்டு காலத்தில் எண்ணிக்கை அளவில் பெருகியுள்ள இந்த வரலாற்று நாவல்களை இளைஞர் முதல் முதியவர் வரை பலதரப்பட்ட வாசகர்கள் விரும்பிப்படிக்கின்றனர். இந்த நாவல்களின் வரலாறே குறுகிய காலத்திற்குட்பட்ட தாயினும், இவற்றினூடே ஒருநியதி இருப்பதைக் காண முடிகிறது.

0·2 இந்த நாவல்கள் கல்கி காலத்திற்கு முன்பு ரஜபுத்திர வீரர்களைப் பற்றிய கதைகளாக இருந்தன. பின்பு தமிழக வரலாற்றின் பல்வேறு காலங்களைச் சித்தரிக்கும் நாவல்கள் ஏராளமாக வெளிவந்துள்ளன. ஆனால் கல்கி தான் தமிழ் வரலாற்று நாவல்களுக்கு ஒரு வடிவம் கொடுத்தவர், அவருக்குப் பின்பு அவர் மரபில் வரலாற்று நாவல்களை சாண்டில்யன், அகிலன், ஜெகசிற்பியன், கோ. வி. மணிசேகரன், விக்ரமன், அரு. ராமநாதன், நா. பார்த்தசாரதி, போன்றோர் ஜனரஞ்சகமாக எழுதி வருகின்றனர். இவர்கள் நீங்கலாக, கல்கி எவ்வாறு தேச விடுதலை இயக்கத்தின் கருத்துக்களுக்குச் சாதகமாக பழைமை உணர்வைப் பயன்படுத்தினாரோ, அதே போன்று திராவிடர் என்ற இனவெறி உணர்வை, வடவர் எதிர்ப்புக் கொள்கைக்குப் பொருத்தமாக உபயோகப்படுத்தி ஏ. வி. பி. ஆசைத்தம்பி, சி. பி. சிற்றரசு, கே. ஜி. இராதா மணாளன், கலைஞர் கருணாநிதி, அறிஞர், அண்ணாத்துரை ஆகியோர் ஏராளமான வரலாற்றுக் கதைகளை எழுதியுள்ளனர். இதை இங்கே ஆராயப்படுகின்றன.

1·0 தமிழ் வரலாற்று நாவல்களின் தன்மையை ஆராய்வதற்கு முன் நிலையாக, கல்கி வரலாற்று நாவல்கள் எழுதத் தொடங்கிய காலத்தில் அவருக்குச் சாதகமாக இருந்த இலக்கிய, சமூகச் சூழ்நிலைகளைச் சுருக்கமாகக் காணவேண்டும்.

1·1 விளைநிலத்தைப் பொருத்து பயிர் அமையும் என்பது நியதி. புறவயமான சுற்றுச் சார்பு, வளரும் பயிரின் தன்மையை எவ்வாறு நெறிப்படுத்துகிறதோ, அதேபோன்று இலக்கியப் பயிரும், அது பிறக்கும் சமூகச் சூழலில் இருந்து வேறுபட முடியாது.[1] தமிழ் நாவலுக்கும் இந்த விதி பொருந்தும். ஆண்டாண்டு காலமாக நிலவுடைமைத் தேக்க

நிலையில் இருந்து வந்த தமிழகத்தில் வெள்ளையர் வரவால் புதிய உறவுகளால், எழுந்த சமுதாய, பொருளாதார அமைப்பு மாறத் தொடங்கியது. புது அமைப்பு தமிழக மக்கள் சிந்தனையை மாற்றத் தொடங்கியது. இம்மாறுதலின் விளைவாகப் பிழையை சமூகத் அமைப்பின் சிந்தனைக் கூற்றின் ஒரு பகுதியாக விளங்கிய இலக்கியத் துறையில், இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் தோன்றியது தமிழ் நாவல் ஆகும். இது ஆரம்ப காலத்தில் இருந்தே அன்றையை மத்தியதர வர்க்கத்தினரால் வளர்க்கப்பட்டது.[2]

1·2 இவ்வாறு வளர்க்கப்பட்ட தமிழ் நாவலில் ஆரம்ப காலத்தில் மனிதன் மனிதனுக வர்ணிக்கப்பட்டான். சமூக மாறுதல்களில் தோன்றும் சமூக சிந்தனைகளுக்கும், தனி மனிதனது சிந்தனைகளுக்கும் இடையே ஏற்படும் உறவுகளைச் சித்தரிப்பதாகவே ஆரம்பத் தமிழ் நாவல்கள் அமைந்தன. முதல் தமிழ் நாவலாசிரியரான இராஜம் அய்யர் 'தனிநபர் குண வேறுபாடுகளை வெளிப் படுத்துவதே' அவரது நோக்கம் என்று கூறுகிறுர்.[4] இத்தகைய பண்பைக் கொண்ட தமிழ் நாவல் 1900த்திற்குப் பின்பு விரைவாக அதன் பண்பிலிருந்து விலகியது. தனிநபர் சமூகத்தை குண வேறுபாடுகளைச் சித்தரிக்கும் போக்கிலிருந்து அது திசை மாறியது. யதார்த்தத்தை விட்டுத் தப்பியோடும் பண்பு இக்காலத்தில் தலைதூக்கலாயிற்று. துப்பறியும் கதைகளும், மொழி பெயர்ப்பு நாவல்களும், தழுவல் நாவல்களும் நாவல் உலகில் பெருகின. இவற்றிற்கு அந்தக் கால மத்தியதரவர்க்கத்து வாசகர்களிடையே—குறிப்பாக பெண் வாசகர்களிடையே—பெரும் வரவேற்பு இருந்தது. பிரபலமாக இருந்தாலும், இந்த நாவல்கள் யாவும், தமிழ் நாவல்களின் தடத்தை மாற்றிவிட்டன; நாவலைத் தேய்வு நிலைக்கு இட்டுச் சென்றன என்பதில் ஐயமில்லை.

1·2 இவ்வாறு தேய்ந்து வரும் தமிழ் நாவலை திசை திருப்ப ஷண்முகசுந்தரம், சங்கராம், வேங்கடரமணி போன்றவர்கள் முயற்சி செய்த பொழுதிலும் 1930க்குப் பிறகு தோன்றிய மணிக்கொடி இயக்கம் சிறுகதைகளுக்கு அதிக இடமளித்தது. இதைச் சார்ந்தவர்கள், 'கலை கலைக்காகவே' என்ற சமூக உணர்விற்குப் புறம்பான கொள்கையை வெளியிட்டனர் இதனுல் நாவல் தேய்ந்து, சிறுகதைகள் அதிகமாயின. இக்காலத்தில் நாவல்கள் இல்லை என்ற வெற்றிடத்தை நிரப்பியவர் கல்கி. அவருக்குச் சாதனமாக அமைந்தது 'ஆனந்த விகடன்' பத்திரிகை.

1·3 'ஆனந்த விகடன்' அதன் தோற்ற காலத்திலிருந்து, அந்தக் காலத்தில் பிரபலமாக இருந்த "ஆனந்த போதினி" "குணபோதினி" போன்ற பத்திரிகைகளின் பணியைத் தொடர்ந்தது, மணிக்கொடி குழுவினர் இலக்கிய வேள்வி புரிந்து கொண்டிருக்கையில் விகடன் ஜனரஞ்சகமான கதைகளையும் துணுக்குகளையும் வெளியிடத் தொடங்கியது 'ஆனந்த விகடன்'. அதன் நோக்கம் மக்களை "இன்பத்தில்' ஆழ்த்த வேண்டும் என்பதுதான்.

1·4 கல்கி 'ஆனந்த விகடனில்' 'தியாக பூமி' என்ற சமூக நாவலை எழுதினுர். இந்த நாவல் விரிவாக ஆராயப்பட வேண்டிய ஒன்று. இது தீண்டாமைக் கருத்தை மையமாகக் கொண்டு எழுதப்பட்டது. பிராமணக் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் ஹரிஜனங்களுக்கு ஆதரவாக இருந்ததன் காரணமாக, அந்தணர்கள் எவ்வளவு கொடூரமாக அவரிடம் நடந்து கொள்கின்றனர் என்பதை இந்த நாவல் காட்டுகிறது. இது காந்தியத்தின் செல்வாக்கிற்கு உட்பட்ட நாவல் இருந்தாலும், நாவலின் தீண்டாமைக் கருத்து அதன் யதார்த்த பூர்வமான பண்புகளுடன் கையாளப் படாததால் இது கலையம்சத்தில் குறைபாடுடயதாகவே காட்சி தருகிறது, நாவலின் பின்பகுதி திடீர்த்திருப்பங்கள் நிறைந்த தாய் மர்ம நாவலைப் போன்று இருக்கிறது. கல்கி அவருடைய முதல் நாவலில் அவர்கால சமூகத்தை நேரிடையாகத்தான் சந்திக்கிறுர். இந்த நாவலில் மட்டுமல்லாமல் கட்டுரைகள் மூலமாகவும், அரசியல் தலையங்கங்கள் மூலமாகவும், சிறுகதைகள் மூலமாகவும் சமூகப் பிரச்சினைகளை அணுகினுர். ஆனுல் இவை எல்லாவற்றிலும், காந்தியத்தின் தாக்கத்தையும், சமூக சீர்திருத்த உணர்வையும்தான் கல்கியிடம் காண முடிகிறது.

1·5 கல்கி திரு. வி. க.விஞலும், இராஜாஜி யாலும் உருவாக்கப்பட்ட எழுத்தாளர். அவர் இலக்கிய உலகிற்கு அறிமுகப்படுத்தப்பட்ட நேரம் தேசவிடுதலைப் போராட்டம் தீவிரமாக நடந்து கொண்டிருந்த காலம். காந்தியடிகள் ஏற்கனவே மகாத்மாவாக மாறிவிட்டிருந்த காலம். தேசவிடுதலைப் போராட்டத்தின் தலைமையே இந்திய தேசிய பூர்ஷ்வாக்களிடமும், அவர்களைச் சார்ந்த அறிவாளி வர்க்கத்தினரிடமும் இருந்தகாலம். இவர்கள் வெள்ளை முதலாளிகளுக்கு எதிராகப் போராடியகாலமும் இதுவே. இதன் வெளி அமைப்பான விடுதலைப் போர் அரசியல் அரங்கில் வெள்ளையர்களுக்கு எதிராக நடந்து கொண்டிருக்கும் பொழுது, அதன் அடித்தளத்தில் இந்திய முதலாளிகள், வெள்ளை அரசாங்கத்திட மிருந்து சலுகைகள் பெறும் போராட்டத்தில் ஈடுபட்டிருந்தனர். இந்தப் போராட்டத்தின் பிரதிபலிப்புகளில் ஒன்று வெள்ளை அரசாங்கம் நடைமுறைக்குக் கொண்டு வந்த "பாதுகாப்பு வர்த்தகச் சட்டங்கள்" ஆகும். இந்தத் தலைமை வர்க்கத்தினர், அந்நியனுக்கு எதிரான போராட்டத்தில் தனித்து நிற்காமல், சகல அரங்குகளிலும், தொழிலாளிகளையும், விவசாயிகளையும், தாழ்த்தப்பட்டவர்களையும் இணைத்துச் சென்றனர்.

1·6 இத்தகைய போராட்ட காலத்தில், வெள்ளையர்கள் இந்தியர்களுக்குக் கலாச்சாரம் அற்றவர்கள், நாகரீகம் இல்லாதவர்கள், காட்டுமிராண்டிகள் என்று பேசியும், எழுதியும் வந்தனர். J. S. மில் என்பவர் எழுதிய இந்திய வரலாறு அக்காலத்து ஐ. சி. எஸ். அதிகாரிகளுக்கு கற்பிக்கப்பட்டது. அந்த நூல் இந்தியர்களைத் தாழ்ந்தவர்களாகப் படம் பிடித்துக் காட்டும் புத்தகம் ஆகும். இந்தப் போக்கு வெள்ளையர்களது நலன்களுக்கு உகந்ததாக இருந்தது, இவர்களுக்கு மாற்ருக விடுதலைப் போராட்டத்தைத் தலைமை தாங்கி நடத்தியவர்கள், தங்கள் நலன்களுக்குத் தகுந்தபடி தொன்மை உணர்வை ஏற்படுத்த முயற்சி செய்தனர். திலகரும், வ. உ. சியும் இந்தியப் பழைமை பேசினர். வ. வே. சு. அய்யர் கம்பன்' உலகமகாகவிகளில் ஒருவர் என்று நிருபிக்க முற்பட்டார். பழைமையை விடுதலைப் போராட்ட கால உணர்வுடன் மறு பரிசிலனை செய்யும் முயற்சியிலும், அதை அந்நியர்களது ஆதிக்கத்திற்கு எதிரான ஆயுதமாகவும் நம் தலைவர்களில் பலர் பயன்படுத்தினர். இந்தத் தொன்மை உணர்வை தேசிய வெறியோடு பாரதி உரத்த குரலில் பின்வருமாறு வெளியிடுகிருன்.

"தனுவுண்டு காண்டிபம் அதன் பேர்"

இந்தத் தொன்மை உணர்வு முதலில் சமகாலத்தைப் பற்றி 'தியாகபூமி' என்ற நாவலாக எழுதப் புகுந்த கல்கியை பழைமை நோக்கித் திரும்பச் செய்தது. கல்கி வரலாற்றை நிலைக் களனுகக் கொண்டு கதை புனைவதற்கு இந்த உணர்வு ஒரு ஊக்குவிக்கும் சக்தியாக விளங்கியது.

1·7 கல்கி வரலாற்று நாவல் எழுதுவதற்கு மற்ருெரு சூழ்நிலையாக அமைந்தது அவர் காலத்தில் தோன்றிய வரலாற்று உணர்வு. இந்திய வரலாற்று ஆசிரியர்கள் இந்தக்காலத்தில் தான் நம் நாட்டின் வரலாற்றை எழுதத் தொடங்கினர். தமிழ்நாட்டு வரலாறு பற்றிய புத்தகங்கள் 1900-ம் ஆண்டிலிருந்து 1940-ம் ஆண்டிற்குள்ளாக ஏராளமாக வெளிவந்தன. வரலாற்று இருண்மை நீங்கி தமிழ் நாட்டின் பழைமை பற்றிய விவரங்கள் வெளிவரலாயின. கனகசபைப் பிள்ளையின் "1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்" தமிழர் நாகரீகத்தின் பழைமையை உணர்த்தியது. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியின் "சோழர் வரலாறும்" "பாண்டியர் வரலாறும்" தமிழ் மன்னர்கள் பற்றிய செய்திகளை வெளிக் கொணர்ந்தன. K. G. சேஷ அய்யர் சேரர் வரலாறு எழுதினர். K. N. சிவராஜபிள்ளை தமிழர் காலத்தை நிர்ணயிக்க முயற்சி செய்தார். P. T. ஸ்ரீனிவாச அய்யங்கார் 'தமிழர் வரலாற்றை (1929) எழுதினர். வின்செண்ட் ஸ்மித்தின் "பண்டைக் கால இந்தியா", "இந்திய வரலாறு" ஆகிய நூல்கள் தோன்றியதும் இக்காலத்திலேதான். M. ஸ்ரீனிவாச அய்யங்கார் "Tamil Studies" (1914) என்ற நூலை எழுதினர். பேராசிரியர் S. கிருஷ்ணசுவாமி அய்யங்கார் "Evolution

of Hindu Administrative Institutions'' என்ற நூலை 1929-30ல் வெயிட்டார். V. R. ராமச் சந்திர திட்சிதர் ''Studies in Tamil Literature And History'' (1933) என்ற நூலை எழுதினர்.

1·8 இந்த வரலாற்று விவரங்கள் அன்றைய பத்திரிகைகளிலும், மேடைகளிலும் கையாளப் பட்டன. இவை யாவும் கல்கியின் தொன்மை உணர்வை உரமிட்டு வளர்த்தன.

1·9 கல்கி அவருடைய சமகாலச் சமூகத் தைச் சந்திக்காமல், பின்னேக்கத் திரும்பியதற்கு முக்கியக் காரணங்களில் மற்ருென்று அவர் காலத்துப் பொருளாதார நெருக்கடிகள் ஆதும். இதன் பயனுகத் தப்பி ஓடும் மனப்பான்மை பெற்ற கல்கி பழைமை நோக்கித் திரும்புகிருர். இதே போன்ற ஒருவித மனப்போக்கை ஆங்கில வரலாற்று நாவல்களின் தோற்ற காலத்திலும், அமெரிக்க வரலாற்று நாவல்களின் ஆரம்ப காலத்திலும் காண முடிகிறது. ஆங்கில வரலாற்று நாவல்களுக்கு ஒரு வடிவம் கொடுத்த வால்டர் ஸ்காட், அவர் காலத்தில் பெரிதாக வளர்ந்திருந்த தொழிற்புரட்சியின் விளைவுகளைக் கண்டார். பணத்தின் சக்தியால் மனித உறவு கள் சிதைவதையும் கண்டார். இத்தகைய சமூகச் சீரழிவு ஸ்காட்டை பழைமை நோக்கித் திரும்பச் செய்தது. இது போன்ற தொரு சூழ் நிலை காரணமாக அமெரிக்க வரலாற்று நாவல் கள் எழுந்தன என்று ஒரு விமரிசகர் கூறுகிருர். ''1930களில் அமெரிக்க எழுத்தாளர்களில் பலர் வரலாற்று நாவல்களை எழுதியதன் காரணம் அவர்களால் சமகாலப் பொருளாதார நெருக்கடி யைச் சந்திக்க முடியாததே ஆகும்.''4

1.9 இது தமிழகத்திற்கும் பொருந்துவதை நாம் காணமுடிகிறது. 1929ம் ஆண்டில் தோன்றிய உலகப் போருளாதார நெருக்கடி இந்தியப் பொருளாதாரத்தையும் பாதித்தது என்பதில் ஐயமில்லை. அதுமட்டுமல்லாமல் தமிழகத்தில் இக்காலத்தில் முதலாளித்துவ முறை வேருன்றிவிட்டிருந்தது. விவசாயம் செவ்வனே நடைபெறவில்லை. விவசாய உற்பத்தி படிப்படியாகக் குறைந்து கொண்டே வந்தது. 1937ல் இடம் பெற்ற இந்தியப் பொருளாதார வீழ்ச்சி, சிறு கம்பெனிகளையும், மத்தியதர நிறுவனங்களையும் சிதைவடையச் செய்தது.5 இவற்ருல் இந்தியப் பொருளாதார அரங்கில் குழப்பம் மிகுந்த நிலை இருந்தது

2·0 கல்கி வரலாற்று நாவல் எழுதுவதற்குச் சாதகமாக இருந்த சூழ்நிலைகள் இவை எனக் கூறலாம். இவை தமிழ் வரலாற்று நாவல் எழுவதற்குரிய சூழ்நிலைகளாகவும் அமை கின்றன.

2,1 இத்தகைய சூழ்நிலைகளில் கல்கி படைத்த வரலாற்று நாவல்கள் மிகப் பிரபலம் அடைந்தன. அவருடைய 'பார்த்திபன் கனவு' ''சிவகாமியின் சபதம்'' ''பொன்னியின் செல்வன்'' ஆகிய வரலாற்று நாவல்கள் ஒரு குறிப்பிட்ட தன்மையை உடையவை. இவற்றை வரலாற்று கால வரையறைப்படி கண்டால் ''சிவசாமியின் சபதம்'' முதலாவதாகவும், ''பார்த்திபன் கனவு'' இரண்டாவதாகவும், 'பொன்னியின் செல்வன்' மூன்ருவதாகவும் இடம் பெறுகின்றன. இந்த மூன்று நாவல் களில் 'சிவகாமியின் சபதம்' என்பது விடுதலைப் போராட்டத்தின் தாக்கத்தால் ஏற்பட்ட தலைப்பு. 'பார்த்திபன் கனவு', நிகழ்காலச் சிக்கல்களுக்கு மாற்ருக எழுந்த பழங்காலக் கனவு போன்று தோற்றமளிக்கிறது. ''பொன்னியின் செல்வன்'' மகாபுருடனுன இராஜ இராஜனின், வரலாற்று வாழ்வைக் கூருமல், சரித்திரத்தில் இடம் பெருத அவனது இளமைக் காலத்தைப்பற்றிய கற்பனைக் கதையாக உள்ளது.

2·2 இந்த நாவல்களில் பழைமை பற்றிய ஒரு உலகு வாசகர்களுக்கு எடுத்துக் காட்டப் படுகிறது. பழைமை ஒரு பொற்காலக் கனவாக கல்கிக்குக் காட்சி தருகிறது. தமிழ் நாட்டின் பழைமையை கல்கி மகோன்னதமான கால மாகக் காண்கிருர். தமிழ் நாட்டின் வரலாறு மட்டுமல்ல, சங்கீதம், நாட்டியம், இலக்கியம் எல்லாமே அவருக்கு முழுமை பெற்றவையாகக் காட்சி தருகின்றன. கர்நாடக சங்கீதம் பற்றிய கல்கியின் விமர்சனங்களும், திரைப்படம் பற்றிய அவரது கருத்துக்களும் இதற்குச்

சான்று பகர்கின்றன. கல்கியின் கண்ணோட்டத்தில் பழந் தமிழகம் முழுமையானது (classic) பிரம்மாண்டமானது. இதை அவர் "சிவகாமியின் சபதம்" முன்னுரையில் பின் வருமாறு எழுதுகிறார்.

"அப்படியென்றால் அந்தக் காலத்தில் தமிழகத்தின் பண்பாடும், சமூக வாழ்க்கையும் எவ்வளவு மேம்பட்டிருக்க வேண்டும். அத்தகைய மேம்பாட்டை ஒரு சமூகம் அடைய வேண்டுமானால் அதற்கு எத்தனை நூற்றாண்டுகளுக்கு முன்னாலிருந்து அச்சமூகத்தில் கலையும், கல்வியும் நல்லரசாட்சியும், நல்லொழுக்கமும் வளர்ந்து வந்திருக்க வேண்டும். இதையெல்லாம் நினைக்க, நினைக்கப் பண்டைத் தமிழ் நாட்டில் வாழ்ந்த நம் மூதாதையர்களிடம், பக்தியும், மரியாதையும் பெருகி வளர்ந்தன. தமிழகத்தின் பழம்பெருமையைப் பற்றிக் கேள்விப்பட்டதெல்லாம் உண்மை என்பது மட்டுமல்ல, இதுவரை உண்மையை ஓரளவு குறைத்துச் சொல்லியே வந்திருக்கிறார்கள் என்று தோன்றியது."6 "பார்த்திபன் கனவு" என்ற நாவலில், 'பார்த்திபன் தன் மகன் விக்ரமனுக்கு, தனது சித்திரசாலையைக் காட்டுகிறான். அதில் உள்ள சிற்பங்கள், சித்திரங்கள் எல்லாமே முழுமையாவை, தெய்வீகத்தன்மை வாய்ந்தவை என்று கல்கி வர்ணிக்கிறார். சிவகாமி பரதக் கலையில் முழுமையானவள். ஆயனர் சிற்பக் கலையில் முழுமையானவர் மாமல்லன் போர்க் கலையில் முழுமையானவன் இத்தகைய கனவு கல்கியின் எல்லா வரலாற்று நாவல்களிலும் பரவிக்கிடப்பதைக் காணலாம்.

2·3 இவ்வுதாரணங்கள் ஒரு சில கருத்துக்களை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது. முதலாவது கல்கி பழங்காலத்தை, வர்க்க முரண்பாடுகளற்ற, பொன்யுகமாகக் கனவு கண்டார். காதல் புரிவதில்கூட, அடியவர்களுக்கும், வினைவலர்களுக்கும் உரிமை மறுக்கப்பட்ட காலம் அது என்பதை அவர் மறந்துவிட்டார். இது விஞ்ஞானரீதியான வரலாற்றுக் கண்ணோட்டத்திற்கு முரண்பட்டதாகும். இரண்டாவது மேலைநாட்டு வரலாற்று ஆசிரியர்களும், வடமொழிப் பற்று மிகுந்தவர்களும் தமிழ்நாட்டின் தொன்மை பற்றி எதுவும் கூறுமல் இருந்தனர். அல்லது குறைத்தே கூறினர். நாம் மேலே குறிப்பிட்ட வரலாற்று ஆசிரியர்களில் பலர் அத்தகையவரே. இவர்களை மனதில் கொண்டே கல்கி "இதுவரை உண்மையை ஓரளவிற்கு குறைத்தே சொல்லி வந்திருக்கின்றனர்." என்று மேலே குறிப்பிடுகிறார்.

2·4 இவ்வாறு பழங்காலத்தைப் பொன்யுகமாக வருணிப்பது தேக்க நிலையில் உள்ள எல்லாச் சமூகங்களுக்கும் பொருந்துமானாலும், தமிழ் நாட்டில் கல்கிக்கு இதுதவிர மற்றொரு முக்கிய சக்தியும் உறுதுணையாக இருந்தது. அது விடுதலைப் போராகும். விடுதலைப் போராட்டத்தால் உந்தப்பட்ட கல்கி பழமையிலும், போராட்டம் மிகுந்த காலத்தை — சோழ சாம்ராஜ்யம் உருவான காலத்தை — தன் நாவல்களுக்கு நிலைக்களனாக தேர்ந்தெடுக்கிறார். 'பொன்னியின் செல்வன்' பெரியதொரு சாம்ராஜ்யம் உருவாகும் இலக்கணங்கள் பொருந்திய சோழ அரசைச் சித்தரிக்கிறது. "பார்த்திபன் கனவு" பல்லவர்களுக்கு அடிமைப் பட்டுக்கிடந்த சோழ சிற்றரசர்கள் பல்லவ ஏகாதிபத்தியத்தியத்திற்கு எதிராகப் போராடுவதைக் காட்டுகிறது. "சிவகாமியின் சபதம்" பல்லவ சாம்ராஜ்யத்தின்மீது படையெடுத்த சாளுக்கியர்களுக்கு எதிராகப் பல்லவர்கள் போராடியதைக் காட்டுகிறது. போராட்ட காலம் கல்கியின் சூழ்நிலைக்குப் பொருத்தமாக இருந்தது ஆகையினால். அவர் பழைமையின் இந்தக் குறிப்பிட்ட பகுதியை நோக்கித் திரும்பினார்.

2·5 கல்கி பழங்காலத்தைச் சமகாலத்தின் நோக்கிலிருந்து கண்டார் என்பதையும், அதைப் பொற்காலமாக வர்ணித்தார் என்பதையும், கண்டோம். அந்த பொற்காலத்தை, வரலாற்று காலத்தை, எத்தகைய கண்ணோட்டம் கொண்டு அணுகினார்? அல்லது அவரது வரலாற்றுக் கண்ணோட்டம் என்ன? என்பதை இனி ஆராய்தல் வேண்டும். கல்கியின் கதாநாயகர்கள்

எல்லோருமே மாபெரும் வீரபுருடர்களே. அருள் மொழிவர்மனும், கரிகாலனும், மகேந்திரனும், பரஞ்சோதியும் செயற்கரும் செயல் புரியும் வீரர்கள். உலகம் உய்யத் தோன்றிய உத்தமர் கள். பார்த்தி சோழன் காணும் கனவு நாட்டு மக்கள் பற்றியதல்ல; அவனது சோழர் குலப் பெருமையை நிலைநாட்ட சாம்ராஜ்ய விஸ்தரிப்பு பற்றிய கனவு. 'சிவகாமியின் சபதம்' மாற்று அரசன் இரண்டாம் புலிகேசியின் தலைநகரை அழைப்பதிலே தான் இருக்கிறது. பெரும் போர்க்களங்கள் இதில் வர்ணிக்கப்படுகின்றன. 'பொன்னியின் செல்வன்' முழுவதுமே இராஜ இராஜன் இளமைப்பருவ நிகழ்ச்சிகளின் கற்பனைக் கதையாக உள்ளது. இந்த நாவலி லும், பல போர் வர்ணனைகள் இடம் பெறு கின்றன. இந்த மூன்று நாவல்களிலும் மன்னர் கள் வீரபுருடர்களாகக் காட்டப்படுகிறார்கள். அவர்களது துணைவர்களான வந்தியத்தேவனும், பரஞ்சோதியும், பல்துறைத் திறன் பெற்ற பெருவீரர்களாக வருகின்றனர். மதவாதிகள் அரசியலில் பங்கு பெறுகின்றனர். நாகநந்தி என்ற ஜைனபிட்சு புலிகேசியின் அரசியலில் முக்கியப் பங்கேற்கிறார், ஆழ்வார்க்கடியான் என்ற வைணவன் ஒற்றுவேலை பார்க்கிறான். பார்த்திபன் கனவில் மகேந்திரவர்மனின் சிவனடியார் வேடமே மதம் எவ்வாறு அரசிய லுக்குப் பயன்படுகிறது என்று எடுத்துக் காட்டு கிறது.

2.6 இவற்றில் இருந்து நாம் கல்கியின் வரலாற்றுக் கண்ணோட்டம் பற்றி பின்வரும் முடிவுகளுக்கு வரலாம். கல்கியின் கண்ணோட் டத்தில் வரலாற்றுக் காலம் பொன்மயமானது; வரலாறு என்பது பெரிய போர்க்களங்களிலும், வீரபுருடர்களின் செயல்களிலும், மதத்தின் செல்வாக்கிலும் உள்ளது என்பது தெளிவாகிறது. இது போன்று வீரபுருடர்களாலும், பெரு நிகழ்ச்சிகளலாலும் வரலாறு உருவாகிறது என்பது ஆங்கில எழுத்தாளரான கார்லைல் என்பாரது வரலாற்றில் அற்புதக் கண்ணோட்டத் தைப் போன்று உள்ளது.[7] கார்லைல் தமது நூல்களில் அலக்ஸாந்தர், சீசர், போன்ற பெரு வீரர்கள் தாம் வரலாற்றைத் தீர்மானிக்கும் சக்திகள் என்று எழுதியுள்ளார். அவரது வரலாற்று சக்திகளில் சாமன்யர்கள் இடம் பெற வில்லை. கல்கியும் இதே கண்ணோட்டம் உள்ளவர் என்பது அவரது நாவல்களில் இருந்து தெளிவாகிறது. இப்பார்வை, வர்க்கப் போராட் டம்தான் வரலாற்றின் உந்து சக்தி என்ற விஞ்ஞான ரீதியான போக்கிற்கு முற்றிலும் புறம்பானதாகும். பொருள் உற்பத்தியில் ஈடு படும் மனிதன், பல்வேறு உறவு நிலைகளைப் பெறுகிறான்; இந்த உறவு நிலைகள் சமூகத்தின் பொருளாதார அமைப்பாக இருக்கிறது; இவ்வ மைப்புகள் நாம் வரலாற்றின் அடித்தளமாக விளங்குகிறது என்ற மார்க்ஸின் நோக்கிற்கு கல்கி முற்றிலும் புறம்பானவர். இந்த விஞ்ஞான ரீதியான வரலாற்றுக் கண்ணோட்டம் கல்கியிடம் இல்லாமையினால் அவர் அற்புதங்களையும், வீரச் செயல்களையும் தமது வரலாற்று நாவல்களுக்கு அடித்தளமாக அமைக்கிறார்.

3.0 கல்கியால் துவக்கப்பட்ட தமிழ் வரலாற்று நாவல்கள், கல்கியின் காலத்திலும் அவருக்குப் பின்பும் மிகப் பிரபலமான நாவல் களாக ஆயின. இவற்றின் செல்வாக்கு காரண மாக தமிழ் நாட்டில் துப்பறியும் கதைகள் மேலை நாட்டில் வளர்ந்துள்ளதைப் போல் இங்கு உருவாகவில்லை எனலாம்.

3.1 கல்கியின் காலத்திருந்தே வரலாற்று நாவல்களை எழுதிவருபவர் சாண்டில்யன். கல்கி யின் மறைவிற்குப் பிறகு மி. ப. சோமசுந்தரம், அகிலன், விக்ரமன், கோ. வி. மணிசேகரன், அ. இராமநாதன், நா. பார்த்தசாரதி போன்ற ஆசிரியர்கள் ஏராளமான வரலாற்று நாவல்களை எழுதியுள்ளனர், எழுதியும் வருகின்றனர்.

3.2 வரலாற்றுக் கொள்கை, நாவல் எழுதும் முறை, கதாபாத்திரப் படைப்பு ஆகியவற்றில் கல்கிக்கும் இவர்களுக்கும் பல ஒற்றுமைகள் உள்ளன, பல வேற்றுமைகளும் காணப்படு கின்றன.

3.3 கல்கியின் நாவல்கள் டிக்கன்ஸ், ஸ்காட் போன்றவர்களின் நாவல்களைப்போன்று அளவில் மிகப் பெரியவை அவரது பொன்னி

யின் செல்வன் ஆயிரத்திற்கு மேற்பட்ட பக்கங்கள் கொண்டது. சிவகாமியின் சபதமும் அத்தகையதே, 'அலை ஓசையும்' இந்தப் பண்பைப் பெற்றுள்ளது. கல்கியின் இந்தப் பண்பை 'கடல்புறா' 'யவன ராணி' ஜெகசிற்பியனது 'பத்தினிக் கோட்டம்' அகிலனது ''வேங்கையின் மைந்தன்'' ஆகிய நாவல்களில் காணலாம். இது கல்கி காட்டிய வழியாகும்.

3·4 வரலாற்றுக் கண்ணோட்டத்திலும் இவர்கள் யாவரும் கல்கியுடன் ஒன்றுபடுகின்றனர். இவர்கள் கல்கியைப் போன்றே வரலாற்றில் அற்புத நோக்குடையவர்கள் ஆவர். கல்கியைப் போன்ற தப்பியோடும் மனோபாவம் இவர்களிடம் ஆழமாகப் பதிந்திருப்பதை இவர்களது வரலாற்று நாவல்களில் காணலாம். அகிலன் கல்கி விட்டுச்சென்ற சோழர் காலத்தை நிலைக்களனாகக் கொண்டு 'வேங்கையின் மைந்தனை எழுதியுள்ளார். ''திருச் சிற்றம்பலம்'' என்ற ஜெகசிற்பியனது நாவல் இலக்கியத்தில் பெருந்தலைவரான சேக்கிழார் பெரிய புராணம் எழுதியதைப் பற்றியது. அவரது மற்ற நாவல்கள் பல்லவர் காலத்தைப் பற்றியவை. சோமுவின் 'கடல் கண்ட கனவு' பல்லவர்களது தோற்றத்தைப் பற்றியது, நா. பார்த்தசாரதி சங்க காலம், பாண்டியர் காலம், காந்திய யுகம் என்ற போக்கில் வரலாற்று நாவல்களைப் படைத்துள்ளார். சாண்டில்யன், ஹூணர்களைப் பற்றியும், ரஜபுத்திரர்களைப் பற்றியும், அரேபியர்களைப் பற்றியும், சோழர்கள், பாண்டியர்கள் ஆகியோரைப் பற்றியும் நாவல்கள் எழுதியுள்ளார். அரு. ராமனுதன் சிதைவடையும் சோழப் பேரரசு பற்றி எழுதியுள்ளார். விக்ரமன் நாயக்கர்களைப் பற்றி எழுதியுள்ளார். கோ. வி. மணிசேகரன், தமிழ் நாட்டின் வரலாற்றின் பல கட்டங்களைக் குறித்து கதைகளும், நாடகங்களும் எழுதியுள்ளார்.

இந்த நாவல்கள் எல்லாவற்றிலும், வீரபுருடர்களின் சாகசங்களும், அவர்களது சதியாலோசனைகளும், சாம்ராஜ்ய விஸ்தரிப்புக் கனவுகளும் வர்ணிக்கப் படுகின்றன. வீரத்திற்கு அடுத்தபடியாகக் காதல் இடம் பெறுகிறது. 'மணிபல்லவம்' என்ற நாவலில் சங்க காலத்தில் ஆளப்பட்டோரின் வாழ்க்கை பற்றிக் கூறப்போகிறேன் என்ற பீடிகையுடன் ஆசிரியர் கதையைத் தொடங்குகிறார். ஆனால் கதை முழுவதும் சுரமஞ்சரி, இளங்குமரன் காதல் பற்றியதாகவும், பெருந்நிதிச் செல்வரின் ரகசியங்கள் பற்றியதாகவும், நகைவேழம்பரின் கொடுரங்கள் பற்றியதாகவும் உள்ளது. சாண்டில்யனது கதாநாயகர்கள் ''மலை வாசலில்'' இருந்து தொடங்கி இன்றைய 'குமுதம்' தொடர்கதை வரை அழகு, இளமை, அமானுஷ்யமான செயல்கள், தந்திரம், அறிவு, காதல் ஆகிய எல்லாவற்றிலும் தன்னிகரில்லாத்தலைவர்களே. இவர்கள் எல்லோரும் மார்க்கண்டேயர்கள், சிரஞ்சீவிகள், உதாரணமாக ''கடல்புறா''வின் கதாநாயகன் இளயபல்லவன் யவனர்களால் கடலில் எறியப்படுகிறான். அவன் ஒழிந்தான் என்று யவனர்கள் மகிழ்ச்சியடைகின்றனர். ஆனால் அவன் தப்பிவிடுகிறான். அகிலனின் 'வேங்கையின் மைந்தனும்'' இத்தகைய கதாநாயக நிலையில் இருந்து எழுதப்பட்டதே. தீயில் விழுந்தாலும் உயிர் பிழைக்கும் கதாநாயகியும், முதலையுடன் போர்புரிந்து வெற்றி வாகை சூடும் டார்சான்களும் வரலாற்று வீரர்களாக இந்த நாவலில் வருகின்றனர். நாவல் முழுவதுமே பாண்டியர் மகுடத்தை எப்படிப்பெறுவது என்பது பற்றியதாகும். மக்கள் கண்ணோட்டத்தில் இருந்து எழுதப்பட்டது என்று கூறப்படும் 'வீரபாண்டியன் மனைவி'யும் ஜனநாதன் போன்ற படைத்தலைவர்களாய் ஆளப்படும் உலகையே படம் பிடித்துக் காட்டுகிறது. இதே போன்ற வீரபுருடர் நிலை வரலாற்றை மற்ற எல்லாத் தமிழ் நாவல்களிலும் காணலாம். இந்தப் பெரு வீரர்கள் கல்கியின் வந்தியத்தேவன் பரஞ்சோதி, அருள்மொழிவர்மன் ஆகியோரின் பரம்பரையினர் ஆவர். இந்த விவரங்கள் கல்கிக்குப்பின்பு வரலாற்று நாவல்கள் எழுதியவர்கள் அவரைப் போன்றே வரலாற்றில் அற்புத நோக்குடையவர்கள் என்பதற்குப் போதுமான ஆதாரங்களாக விளங்குகின்றன.

3·5 ஆனால் பழைமை போற்றும் பண்பிலும் காதலைப் பயன்படுத்துவதிலும் கல்கியிடமிருந்து பிந்தைய வரலாற்று நாவலாசிரியர்கள் வேறு

படுகின்றனர். கல்கி பழைமையை ஒருவித கம்பீரமான தன்மையில் சித்தரிக்கிறார். அவர் தமிழ்நாட்டின் தொன்மையை வரட்டுத்தனமாக புகழவில்லை. அவர் சுய புகழ்ச்சியில் இறங்க-வில்லை. ஆனால் கல்கிக்குப் பின்பு வரலாற்றை எழுதிவருபவர்கள் சுயப் புகழ்ச்சியிலும், தமிழ் இனத்தைப் பாராட்டுவதிலும் இறங்கியுள்ளனர். இந்த ஆசிரியர்களது வரலாற்றுக் கண்ணோட்டத்தை பிறரைப் பழிக்கும் அளவிற்கு வளர்ந்துள்ள செங்குட்டுவப் பண்பு (chauvinism) அளவிற்கு அதிகமாகப் பாதிக்கிறது. தமிழ் பெருமை பேசுவதில் இவர்கள் ஒருவருடன் ஒருவர் போட்டியிடுகின்றனர்.

3·6 நா. பார்த்தசாரதி எழுதுகிறார்.[8] நம் முந்தை ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து முடிந்த பழைமையை நினைக்கும் பொழுது எவ்வளவு பெருமிதமாக இருக்கிறது.'' அகிலன் கூறுகிறார்[9] "ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இந்த தமிழ்நாடு பெற்றிருந்த பேற்றை நினைக்கும் பொழுது நம்முடைய மனம் பொங்கி பூரிக்கின்-றது; நெஞ்சு பெருமிதத்தால் விம்முகிறது.'' "தமிழ் திருநாட்டை மீண்டும் பொன்விளையும் பூமியாக, புகழ்பெருக்கும் தாயகமாக, அன்பும் அறிவும் அருளும் மலரும் கலைச்சோலையாக உருவாக்க வேண்டுமென்ற ஆவலை வாசகர்கள் சிலரிடமாவது இந்தக்கதை தூண்டிவிடுமானால் அதுவே என் நோக்கத்தின் பயனாகும்.'' இந்த மேற்கோள் கல்கியிடம் இருந்து அகிலன் எவ்வளவு தூரம் விலகியுள்ளார் என்பதைக் காட்டுகிறது. தமிழனின் பழங்காலத்தைப் பொற்காலமாகக் காட்டி அதற்கு மீண்டும் புத்துயிர் கொடுக்க வேண்டுமென்ற இந்த ஆர்வம் அகிலனை தற்கால நெருக்கடிகளுக்கு மாற்றாக ஒரு பொற்காலப் பிரமையை உரு-வாக்கச் செய்கிறது. ஜெகசிற்பியன் எழுதுகிறார்,[10] "மறுபிறவியில் எனக்கு நம்பிக்கை உண்டு. அதிலும் அப்படிப் பிறந்தால் தமிழ் நாட்டில் தமிழ் கற்ற தமிழனாகத்தான் பிறப்பேன் என்ற நம்பிக்கையும் எனக்கு உண்டு. நான் மறு பிறவி எடுத்த பின் படிப்பதற்காக இந்த நாவலை எழுதி முடித்திருக்கிறேன்.'' (நந்திவர்மன் காதலி) ஜெகசிற்பியனது இக்கூற்று அளவிற்கு அதிகமான தமிழ் உணர்வை காட்டுகிறது. இவ்வுணர்வு தமிழ்நாட்டு மக்களைத்தவிர, மாற்றாரை பழிக்கும் உணர்வாக இன வெறியாக சாண்டில்யனிடம் மாறுகிறது. இவர் 'கடல்புறாவில்' கலிங்கர்கள், தமிழர்களை விடத் தாழ்ந்தவர்கள் என்ற கருத்தை வெளியிடுகிறார். "யவன ராணி''யில் இளஞ்செழியன் தனது யவன வேலையாளிடம் "அறிவு கிழக்கே உதயமாகிறது; மேற்கே அஸ்தமிக்கிறது'' என்று கூறுகிறான். அதாவது தமிழனுக்கு அறிவு உதயமாகிக் கொண்டே இருக்கும், கிரேக்கனுக்கு அது அஸ்தமித்துக் கொண்டே இருக்கும் என்பது இதன் பொருள். இளஞ்செழியன், கருணாகரன் ஆகியோர் இனவெறி மிகுந்த தமிழர்களாகக் காட்சி தருகின்றனர். இத்தகைய அதீதப் புகழ்ச்சிப் போக்கை ரா. கணபதி என்பவர் பின்வருமாறு விமரிசிக்கிறார்.[11] "வெறுங் கற்பனைக் கதைகளாகவே பார்த்தோமேயானால் இக்கதைகள் அற்புதமானவை என்று தோன்றலாம். ஆயினும் சரித்திரக் கண்ணோட்டத்தின் சத்தியத்தை வைத்துப் பார்த்தால் சிறிது குறைபாடு தோன்றவே செய்கிறது. தமிழ்நாட்டிடம் கதாசிரியர்களுக்கு உள்ள பற்று, அவர்களிடம் சரித்திரக் கண்ணோட்டத்திற்குரிய பற்றின்மையை உண்டாக்குவதற்கு சிறிதே தடையாகிவிடுகிறது..... தமிழ் மன்னர்களை உயர்த்திச் சொல்லவேண்டும் என்பதற்காக, தமிழ்நாட்டின்மீது படையெடுக்கும் மன்னர்களைக் காட்டுமிராண்டிகளாக்கிவிட வேண்டியதில்லை. தமிழ் மன்னர்கள் அயல் நாடுகளில் படையெடுத்து, கங்கை கொண்டாலும், கடாரம் கொண்டாலும் அது மாவீரம் என்றும், வடபுலத்து மன்னர் தமிழகத்தின்மீது படையெடுத்தால் அது மண்ணாசை என்றும் சித்தரிக்க வேண்டியதில்லை.''

3·7 இத்தகைய மிகைப் புகழ்ச்சி திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த எழுத்தாளர்களது வரலாற்றுக் கதைகளில் பிரச்சாரத் தன்மையுள்ளதாக மாறியுள்ளதைக் காண்கிறோம். சி. என். அண்ணாத்துரை, கலைஞர் கருணாநிதி, ஏ. வி. பி. ஆசைத்தம்பி, சி. பி. சிற்றரசு, கே. ஜி. இராதாமணாளன், பூங்கோதை ஆகியோர்

எழுதியுள்ள வரலாற்றுக் கதைகள் கலையம்சம் குறைந்தவை. வடவர் எதிர்ப்பு, பிராமணர் எதிர்ப்பு, ஆரியர் எதிர்ப்பு ஆகிய பிற இன வெறுப்பின் அடிப்படையில் அமைந்தவை. இவர்களது படைப்புக்கள் அவற்றின் சமூக அடித்தளத்துடன் ஆராயப்பட வேண்டியவை. இருப்பினும் ஓரிரு உதாரணம் காட்டி அவற்றின் பொதுத் தன்மையை விளக்கலாம். அண்ணாத்துரையின் "கலிங்க ராணி" என்ற நாவல் குலோத்துங்க சோழனின் கலிங்க வெற்றியைப் பின்னணியாகக் கொண்டு எழுதப்பட்டது. இந்த நாவலில் ஆசிரியருக்கு வரலாற்று நிகழ்ச்சி முக்கியமல்ல. அவர் சார்ந்திருக்கும் இயக்கக் கருத்துக்கள் நாவலின் எல்லாக் கட்டங்களிலும் பளிச் சென்று விளங்கும் படியாக இருத்தல் வேண்டும். இந்த நோக்கில் நாவல் எழுதும் ஆசிரியர் தமிழன் கலாச்சாரம் முழுவதும் ஆரியர்களால் அடிக்கப்பட்டு விட்டது என்று கூறுகிறார். குலோத்துங்கன் அரண்மனையில் இருந்து சதி செய்பவர்கள் ஆரியர்கள்; மலர்புரி அரசி மருதவல்லியை ஏமாற்றுபவன் ஆரியன். தமிழன் அதற்கு ஒரு கருவியாகப் பயன்படுகிறான். அம்மங்கைக்கும், நடனவிற்கும் உள்ள நட்பை முறிக்கச் சதி செய்பவள் ஆரியப் பெண்மணியான கங்கபாலா. ஆரியர் ஆதிக்கத்தைப் பற்றி குலோத்துங்கன் வாய் மொழியாகவே ஆசிரியர் கூறுகிறார்.12

"பெரியவரே! அஞ்சாதீர்! அவர்களின் (ஆரியர்கள்) கலை, நீர்மேல் எண்ணெய்போல் தமிழகத்திலே மிதப்பதை நானும் கண்டேன். நாளாவட்டத்தில் அதை நீக்குவோம். இது உறுதி; ஆரியர் தமிழகத்திலே தமது ஆதிக்கத்தைப் புகுத்தினர். புகுத்த முயன்றால் கனக விசயர் கண்ட கதியே காண்பர்" (கலிங்கராணி பக். 23 திராவிடப்பண்ணை) இது போன்ற கூற்றுக்களை இந்த நாவல் முழுவதிலும்—ஏன் வரிக்கு வரி—காணலாம். இவ்வாறு ஆசிரியர் கருத்தை வரலாற்று மாந்தர்கள் சிந்தனையில் ஏற்றிச் செல்லும் போக்கு வரலாற்றையே தடம் புரளச் செய்யும் இனவெறிப் போக்காகும்.

3·8 இத்தகைய மிகைப் புகழ்ச்சிக்குக் காரணம் என்ன?

சமூக வளர்ச்சி அடிப்படையில் நோக்கினால், 1917ம் ஆண்டிற்குப் பின்பு வலுப்பெற்றது சுயமரியாதை இயக்கம். இவ்வியக்கம் அதன் ஆரம்பகாலத்திலிருந்தே காங்கிரஸ் இயக்கத்திற்கு எதிராகவே இருந்தது. காங்கிரஸ் இயக்கத்தை தேசிய முதலாளிகளும், அந்தக் காலத்து அறிவாளி வர்க்கத்தின் பெரும்பான்மையினரான பிராமணர்களும், இந்திய நிலவுடைமையாளர்களும் ஆதரிக்கையில், அதற்கு மாறாக, தமிழ்நாட்டு பெருங்குடி வணிகர்களும், நிலவுடைமையாளர்களும் நீதிக்கட்சியின் சார்பில் நின்றனர். இதன் வழியாகத் தோன்றிய சுயமரியாதை இயக்கமும், திராவிடர் இயக்கமும், பிராமணர் எதிர்ப்பை முக்கிய கோஷமாக வைத்து சமூக சீர்திருத்தம் செய்ய முற்பட்டன. பழுத்த தேசிய வாதியான திரு. வி. க, வ. உ. சி. போன்றவர்கள் கூட இவ்வியக்கத்தின் கொள்கைகளால் தாக்குண்டனர். விடுதலைப் போராட்டம் வலுப்பெற்றிருந்த காலத்தில் (1930—42) அகில இந்திய அடிப்படையில் தான் காங்கிரஸ் கட்சியும், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும் அவற்றின் பார்வையைச் செலுத்தின. அவை பிரதேச மனப் பான்மைக்கு இடம் கொடுக்க வில்லை. தேச விடுதலைப் போராட்டம் தீவிரமாக இருந்த காலத்தில் மக்களும் பிரதேச மனப்பான்மைக்கு இடமளிக்கவுமில்லை. ஆனால் மேலே குறிப்பிட்ட இயக்கங்கள் விடுதலை லட்சியம் நிறைவேறியவுடன் பலம் பெறலாயின. வடவர் எதிர்ப்பு, ஆரியர் எதிர்ப்பு, தனித் தமிழ் இயக்கம் ஆகியவை மத்தியதர வர்க்கத்தினரின் சிந்தனையை வெகுவாகப் பாதித்தன. எந்த மத்தியதர வர்க்கம் காங்கிரஸின் முதுகெலும்பாக விளங்கியதோ அது விடுதலைக்குப் பின்பு திராவிடர் இயக்கத்தின் பால் சரியத் தொடங்கியது. இத்தகைய சமூகப்—பொருளாதார இயக்கங்களின் ஒரே கூறாகத் தோன்றியது தான் தமிழ்நாட்டை அளவிற் அதிகமாகப் புகழும் போக்கு.

3·9 இப்போக்கு கல்கியின் காலத்திற்குப் பின்பு வரலாற்று நாவல் எழுதியவர்களை அதிகமாகப் பாதித்தது. அத்துடன் மட்டுமல்லாமல் வரலாற்று ஆசிரியர்களையும், அவர்களது வரலாற்றுப் பார்வையையும் பாதித்தது. கல்கி

காலத்தில் தமிழக வரலாறு எழுதிய பேராசிரியர்கள் தமிழ் நாட்டின் தொன்மை பற்றிய விவரங்களைச் சேகரிப்பதிலேயே ஈடுபட்டிருந்தனர். தமிழ் நாட்டின் வரலாற்றை அவர்கள் நாட்டுப் புகழ்ச்சி நிலையில் நின்று நோக்கவில்லை. ஆனால் இக்கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்டுள்ள வரலாற்று ஆசிரியர்களுக்குப் பின் தோன்றியவர்கள் இப்புகழ்ச்சி நிலையில் நின்று வரலாற்றை எழுதலாயினர். பாலூர் கண்ணப்ப முதலியார் எழுதுகிறார்[13] "பழங்காலம் பொற்காலம் ஆகும். அக்காலத்து மக்கள் நனி நாகரீகராய் வாழ்ந்தனர். தங்கள் வாழ்வை இயற்கையோடு இணைத்து வாழ்ந்தனர். இலக்கிய வளத்தில் சிறந்து விளங்கினர் "தென்னகப்பண்பு" என்ற நூலில் ஒரு காலத்தில் திராவிட முன்னேற்றக் கழகத்தின் தத்துவ ஆசிரியராக விளங்கிய கா. அப்பாத்துரைப் பிள்ளை, தமிழ் நாட்டுத் தென்றல் வட நாட்டுக் காற்றைவிடச் சிறந்தது என்று கூறுகிறார்[14] தமிழர் நாகரீகத்தை அதே ஆசிரியர் உலக நாகரிகத்திற்கே அடிப்படையானது என்று புகழ்கிறார்[15] வடவர் ஆதிக்கம் எவ்வாறு தென்னகப் பண்பை அழித்தது என்று ஆசிரியர் கூறுகிறார்[16]. "சென்ற ஆயிரம் ஆண்டுகளாக வடதிசை வாடைப் பண்பும், சென்ற இருநூறு ஆண்டுகளாக அவ்வடதிசை வாடைப் பண்புடன் அதனை ஓரளவு வளர்க்க உதவிய மேல்திசை கோடைப் பண்பும் வீசித் தென்னகத் தென்றல் பண்பு தளர்ந்து மருகும்படி செய்துள்ளன...... அயல் பண்புகள் இரண்டிலும் வடதிசை வாடைப் பண்பே தென்றலுக்கு முற்றிலும் முரண்பட்டதாய் விளங்கியது", சமீபத்தில் Phd பட்டம் பெற்ற ஒரு அறிஞர் தமிழ் நாட்டு வரலாறு சங்க காலத்துடன் முடிவடைந்து விட்டதால் தமிழ் நாட்டு வரலாறு தேவையில்லை என்று கூறியுள்ளார்.[17] இந்தப் போக்குகளால் பாதிக்கப்பட்ட நம்து நாவலாசிரியர்கள் அதே தற்புகழ்ச்சி நிலையில் இருந்து நாவல் எழுதுகின்றனர்.

4·0 கல்கியிடமிருந்து, அகிலன், சாண்டில்யன், அரு. ராமனுதன் ஆகியோர் வேறுபடும் மற்றொரு இடம் காதல் உணர்வை வர்ணிப்பது ஆகும். கல்கி காதல் உணர்வை வெளிப்படுத்துவதில் நாகரீகமான முறையைப் பின்பற்றுகிறார். அவர் மென்மையான முறையில் அவ்வுணர்வைச் சித்தரித்துக் காட்டுகிறார். வந்தியத் தேவன்— குந்தவை காதல், பொன்னியின் செல்வன் முழுவதிலும் இழையோடினாலும், அதில் சிறிதளவேனும் விரசமோ, ஆபாசமோ இல்லை. வந்தியத்தேவன் முதன் முதலாக குந்தவையைச் சந்திக்கும்பொழுது ஏற்படும் பிரமிப்பு நிறைந்த காதல் உணர்ச்சி படிப்பவர்களை மெய்சிலிர்க்க வைக்கிறது. நரசிம்மவர்மன் சிவகாமியின்மீது காதலை வெளிக்காட்டும் நாணயமும், நாகரீகமும் மிக அருமையாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. கல்கி தீட்டும் காதல் சித்திரங்களில் ஒழுக்க மேன்மையைக் காண்கிறோம். ஆனால் மற்ற வரலாற்று நாவல் ஆசிரியர்களிடம் காதல் காமமாகக் காட்சி தருகிறது. ஊர்மிளா—வீரசேகரன் காதல் இத்தகையது. சாண்டில்யன் இந்தக் காம உணர்வை சக்திவாய்ந்த ஆயுதமாகத் தந்நாவல்களில் பயன்படுத்துகிறார். உபாத்தியாயன்—காமினி உறவு, காஞ்சனா — இளையபல்லவன் உறவு, இளஞ் செழியன் — பூவழகி உறவு யவன ராணியை வர்ணிக்கும் முறை ஆகிய எல்லாவற்றிலுமே காம முத்திரை பளிச்சிடும் படியாக உள்ளது. உதாரணத்திற்கு ஒன்றை எடுத்துக்கொள்வோம் "யவனராணி" யில் பூவழகியை பற்றி ஆசிரியர் வர்ணிக்கிறார்.[18] "இடை ஆடையை இறுக்கி நிறுத்தத்தான் அந்த வேளிர்குல பாவைக்கு ஆபரணம் தேவையாக இருந்ததே ஒழிய இடைக்குமேலே தாவிச் சென்ற ஆடைப் பகுதியைத் தடுத்த நிறுத்த இயற்கையே செழுமையான வசதியைச் செய்து கொடுத்திருந்தது...... நன்ருகச் செருகப்பட்டிருந்த போதிலும் இடைக்குமேலே பருத்து எழுந்த அழகின் விளைவாக கழுத்துப் புறத்தில் சேலை ஓரளவு இடைவெளி கொடுத்தேயிருந்ததால் சங்குக் கழுத்தும் அதில் பூவழகி அணிந்திருந்த இரத்னுபரணமும் நன்ருகத் தெரிந்தன. தவிர அந்த ஆபரணம் கீழே இறங்கி ஒளித்த ஆடைப்பகுதியில் இருந்த வனப்பின் திண்மையைப் புலப்படுத்தும் முறையில், சற்று மேலே தெரிந்த பிறை வடிவமான விளிம்புகள் கண்களை மட்டுமின்றி கருத்தையும் அள்ளிச் சென்றன."

இது மிகத் தெளிவாக கல்கியிலிருந்து வேறு பட்ட நிலை என்பதைக் காணமுடிகிறது. இந்த ஆசிரியர்களது நாவல்களில் இதன்மூலமாக ஏற்பட்டுள்ள ஒழுக்க வீழ்ச்சியையும் காண் கிறோம்.

4·1 இந்தப் பால் உணர்வை தங்கள் கொள்கை விளக்கத்திற்காக பலம் பொருந்திய கருவியாக திராவிட முன்னேற்றக் கழக எழுத் தாளர்கள் பயன் படுத்தினர். அவர்களது வரலாற்று நாவல்களில் தமிழ் புகழ்ச்சி, ஆரியர் எதிர்ப்பு ஆகியவற்றிற்குச் சமமாக இடம் பெறு வது காதல் வர்ணனை. அண்ணாத்துரையின் 'கலிங்க ராணியில்' இருந்து ஒரு உதாரணம் காணலாம். கதா நாயகியான நடனாவும், கதா நாயகன் வீரமணியும் ஒரு சோலையில் தனித்து இருக்கின்றனர். ஆசிரியர் அதை வர்ணிக் கிறார்.[19] குலோத்துங்க சோழன் அரண்மனைப் பூங்காவிலே நடந்த காதல்காட்சி நாம் மேலே தீட்டியது. அந்தப் புரத்திலே, அரசிளங்குமரி அம்மங்காதேவியின் ஆருயிர் போன்ற தோழி, தன் காதலனைக் காண பூங்கா புகுந்தாள், அவனுக்காக மாமரத்தடியில் காத்துக்கிடந்த வீரன், தென்றல் கண்டவன் போல் தாவிக் குதித்தெழுந்து தையலை ஆரத் தழுவினான். கையிலிருந்த பூக்கூடலை தரையில் விழ, கூந்தல் சரிய, கோதை குதூகலமாகத் தன் காதலனைக் கட்டித் தழுவிக் கொண்டாள். அவர்கள் கிளப்பிய "இச்" சொலி கேட்ட பறவைகள், மரக்கிளைவிட்டு மற்றோர் கிளைக்குத் தாவின" (பக், 7) இதே போன்ற போக்கை சிற்றரசு, இராதாமணாளன் போன்றவரின் வரலாற்று நாவல்களிலும் காணலாம்.

5·0 ஆங்கில வரலாற்று நாவல்களைப்பற்றி எழுதுகையில் P. N. பர்பாங்க் என்ற விமரிசகர் பின் வருமாறு எழுதுகிறார்.[20] இந்த வகை நாவல் எழுதுபவர்கள் ஒரு குறிப்பிட்ட சூத்திரம் அல்லது திட்டத்திற்கு ஏற்ப எழுதுகிறார்கள்" இந்த சூத்திர அமைப்பு எல்லா வரலாற்று நாவல்களிலும் உள்ளதைக் காணலாம். ஒரு உதாரணமாக சாண்டில்யனது "யவன ராணி" என்ற நாவல் இளஞ்செழியன் என்ற படைத் தலைவனது வீரச்செயல்களைக் கூறுவதாகும். இளஞ் செழியன் யவன ராணியைப் பிடிப்பது, டைபீரியஸ்ஸைத் தன் தந்திரத்தால் பிரமிக்க வைப்பது, கப்பலில் இருந்து தப்பியது, அடுலிஸ் நாட்டில் இரதப்போட்டியில் வெற்றி பெறுவது, போன்றவை ஒரு சூத்திர அமைப்பைப் போன்று அடுத்தடுத்து வருகின்றன. ஆசிரியரது 'கடல்புறாவில்' இளையபல்லவன் இளஞ்செழியன் செய்த இதே செயல்களைப் பாலூர்ப் பெருந் துறையில் செய்கிறான். இதே போன்ற ஒரே தன்மையான அமைப்பை கல்கியின் மூன்று நாவல்களிலும் காணலாம். பார்த்திபன் கனவில் விக்ரமனும், பொன்னியின் செல்வனில் வந்தியத் தேவனும், சிவகாமியின் சபதத்தில் வரும் பரஞ்சோதியும் ஒரே வீரச்செயல்களைப் புரியும் வெவ்வேறு நபர்களே. "வேங்கையின் மைந்த" னில் இளங்கோவும், "வீரபாண்டியன் மனைவி" யில் வீரசேகரனும், பார்த்தசாரதியின் "இளங் குமரனும்" வெவ்வேறு ஆசிரியர்களது கற்பனை என்றாலும், செயல் அளவில் சம தன்மை பெற்ற வர்களேயாவர்.

5·1 இந்த சூத்திரம் போன்ற அமைப்பின் மற்றொரு பகுதி இவர்கள் அரண்மனைச் சதியா லோசனை, ரகசிய வழிகள், மந்திரதந்திரம், அரசியல் கொலைகள் மர்மங்கள் ஆகியவற்றை அதிகமாகக் கையாளுவதாகும்.

5·2 இவற்றை எல்லாவற்றையும் பயன் படுத்துவதற்கு இவர்களுக்கு, வரலாற்றுச் சூழ் நிலை ஒன்று வேண்டும். அதை உருவாக்கும் பொழுது வாசகர்களை நம்பச் செய்ய வேண்டும் அதற்காக இந்த வரலாற்று நாவல் ஆசிரியர் கள் வரலாற்று நூல்களையும் அறிஞர்களையும் துணைக்கு இழுத்துக் கொள்கின்றனர். இதன் மூலம் ஒரு போலி வரலாற்று உணர்வை ஏற் படுத்துகின்றனர். உதாரணமாக சாண்டில்யன் "உதயபானு" என்ற வரலாற்று நாவலின் முன்னுரையில் கூறுகிறார்.[21]

1741-வது ண்டில் ராஜபுதனத்தின் தெற்குப் பிராந்தியத்தில் நடந்த யுத்தத்தில் சேனாதிபதி எதிரிகளைப் பூரணமாக முறியடித் தான் என்பதற்கு சரித்திர ஆதாரம் இருக்கிறது. நூர் அலி என்பவனின் அசானி ராஜகுமாரிகளைத் தூக்கிச் சென்றான் என்பதற்கும், அபலசிம்மன் என்ற பட்டி ராஜகுமாரன் நூர் அலியைக் கொன்றான் என்பதற்கும் சான்று இருக்கிறது. (Reference — Annals And Antiquitres of Rajasthan by Lientenant-Colonel James Tod Part II Chapter VII Pp. 408-9) இந்த விவரங்களைக் கொண்டு "உதயபானு" எழுதப்பட்டது. உதய பானுவுக்கும், அசானி ராஜகுமாரிகளில் ஒருத்திக்கும் ஒரு சிறு தொடர்பை உண்டாக்கி, சிலசிக்கல்களைப் படைத்து உதயபானுவை உருவாக்கினேன்." (பக், 22 ரா. மு. பதிப்பு). ஆசிரியர் வரலாற்றின் சிறு சம்பவம் ஒன்றி லிருந்து கதாநாயக, நாயக்கரின் பெயர்களை இரவல் வாங்குகிறார். மீதி முழுவதும் அவரது கற்பனை. வரலாற்றில் இடம் பெறாத "சிக்கல்களை"ப் படைத்துக் கொள்ளுகிறார். மனக்குதிரை பறக்கிறது. கதை உருவாகிறது. இதே போன்று கல்கி பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியையும், சதாசிவப் பண்டாரத்தாரையும் துணைக்கு அழைத்துக் கொள்கிறார். கல்வெட் டுக்களை மேற்கோளாகக் காட்டுகிறார். நாவல் முழுவதும் கல்கியின் கற்பனையே. அகிலன் கல்கி படைத்த வத்திய தேவரை தன் முன்

மாதிரியாகக் கொண்டு இளங்கோ, என்ற கற்பனைப் பாத்திரத்தை மையமாகக் கொண்டு கதையைக் கூறிவிடுகிறார். நா. பா.வும் ஜெகசிற்பியனும், கோ. வி. மணி சேகரனும் இதே போன்று வரலாற்று நூல்களை மேற்கோள்களாகக் காட்டி தாங்கள் எழுதுவது வரலாற்று நாவல்தான் என்று நிறுவ இவர்களது மேற்கோள்களுக்கு, நாவலுக்கும் முற்படுகின்றனர். தொடர்பு கிடையாது இவர்கள் வாசகர்களிடையே உண்மையில் போலி வரலாற்று உணர்வையே தோற்றுவிக்கின்றனர்

6·0 இதுவரை நாம் கண்ட வரலாற்று நாவல்களில் தமிழக வரலாற்றின் மேலோட்டமான நிகழ்ச்சிகள் சங்ககாலம் தொடங்கி நாயக்கர்கள் காலம்வரை பின்னணியில் பின்னணியாகப் பயன்படுத்தப் பட்டுள்ளன. இந்நிகழ்ச்சிகள் யாவும் தற்காலத்திருந்து விடுபட்டு விலகியுள்ள பழைமையைச் சார்ந்தவை (distant past) இவற்றின் தாக்கம் தற்காலத்தின்மீது மிகக் குறைவாகவே இருக்கும். இருப்பினும் தமிழ்நாட்டின் சமூக அமைப்பில் உள்ள தேக்க நிலை காரணமாக, தூரத்து பழைமையை புனர் நிர்மாணம் (Revivalism) செய்யும் முயற்சி இந்த நாவல்களில் நடைபெறுவதை நாம்காண முடிகிறது. ஆனால் தூரத்துப் பழைமையை விட தற்காலத்தின் சிந்தனையை அதிகமாகப் பாதிப்பது சமீபத்திய பழைமையாகும். (recent past) சமீபத்திய பழைமையின் கூறுகளாகிவிட்ட விடுதலைப் போராட்ட நிகழ்ச்சிகள், இலக்கிய பரிசோதனைகள், அரசியல் சிந்தனைகள், பொருளாதாரக் கொள்கைகள், ஆகியவை இன்னும் நம் மக்கள் உள்ளத்தில் ஒரு நிழற்படமாக இருப்பது நமக்கு நன்கு தெரிந்த செய்தியே. இதை இன்னும் விளக்கமாகக் கூறினல், பாரதி அமைத்த தடத்திலேயே தமிழ் கவிதை இன்றும் சென்று கொண்டிருக்கிறது ராஜம் அய்யர் உருவாக்கிய வழியிலேயே இன்னும் தமிழ் நாவல் சென்று கொண்டிருப்பதையே நாம் காண்கிறோம். ஆங்காங்கே புதிய பரிசோதனைகள் நிகழ்ந்து கொண்டுருந்தாலும், அவை ஒரு இயக்கமாக இன்னும் மாறிவிடவில்லை. காந்தியம் இன்னும் நம் எழுத்தாளர்கள், பேச்சாளர்கள் ஆகியோர் நினைவுத் திரையினின்றும் மறைய வில்லை. இவை யாவும் நமது சமூக நினைவின் அங்கங்களாக மாறி இன்றைய சமூக - பொருளாதாரக் கருத்துக்களைப் பாதிக்கின்றன.

6 1 இத்தகைய சமீபத்திய பழைமையின் பெரும்பகுதியாக விளங்கிய விடுதலைப் போராட்டத்தை தற்காலத் தமிழ் எழுத்தாளர்கள் அணுகியுள்ளனர். நா. பார்த்தசாரதியின் "ஆத்மாவின் ராகங்கள்", ர. சு. நல்லபெருமாளின் "கல்லுக்குள் ஈரம்" போன்றவை அண்மை நிகழ்ச்சிகளைப் பின்னணியாகக் கொண்ட வரலாற்று நாவல்கள் ஆகும். வரலாற்று நாவல்கள் என்பன வை மன்னர்களைப் பற்றியும், சுரங்க வழிகளைப் பற்றியும், அரண்மனைகளைப் பற்றியும், எழுதப்பட வேண்டும் என்பது விதியல்ல. வரலாறு என்பது தொடர்ச்சியான ஒன்று சமூகத் தோற்றகாலம் தொட்டே வரலாறும் தோன்றிவிட்டது. அது சமூக மாறுதலுக்கு ஏற்ப மாறிக் கொண்டே இருக்கிறது. அது முன்னேறிக்கொண்டே இருக்கிறது. இத்தகைய கண்ணோட்டத்தில் காணும்பொழுது சமகால வரலாற்று நிகழ்ச்சிகளைப் பின்னணியாக எழுதப் படுவதும் வரலாற்று நாவல்களே. 'அலை ஓசை' இத்தன்மையது. ஆனல் 'அலை ஓசை' கல்கியின் சமூக நாவல்கள் வரிசையில் வைத்து ஆராயப் படவேண்டிய ஒன்று. ஏனெனில் அதில் வரலாற்று நிகழ்ச்சிகளும், சமகால சமூக சிந்தனைகளும் பின்னிக் கிடக்கின்றன. எனவே 'அலை ஓசை'யைத் தவிர்த்து விட்டு, தற்கால எழுத்தாளர்கள் சமீபத்திய பழைமையை எவ்வாறு காண்கின்றனர் என ஆராய்வோம்.

6·2 'ஆத்மாவின் ராகங்களின் ஆசிரியர் நா. பார்த்தசாரதி' "இது ஒரு காந்திய சகாப்த நாவல்" என்று அவருடைய முன்னுரையைத் தொடங்குகிறார். காந்திய வாதியான, காந்தி ராமன் என்று அழைக்கப்பட்ட, ராஜா ராமனின் கதை இது. ராஜா ராமன் என்ற தனி நபர் ஆத்மா நாட்டு விடுதலைக்காக ஏங்குகிறது. மதுரம் என்ற தனிநபர் ஆத்மா ராஜாராமனுக்காக ஏங்கி நாட்டுக்காகத் தியாகம் செய்கிறது. இந்தத் தனித்துவ ராகங்களுக்குப் பொருத்த மில்லாத பின்னணியாக விடுதலைப் போராட்ட

நிகழ்ச்சிகள் நாவலில் அமைக்கப் பட்டுள்ளன. ஆசிரியரே தன் கதையின் அடித்தளத்தைக் கூறுகிறுர்.22 ‘‘உலகறிய ஊரறிய நாட்டுக்குத் தியாகம் செய்த ஒருவரும், உலகறியாமல், ஊரறியாமல், அந்தரங்கமாக அதருக்காகத் தியாகம் செய்த ஒருத்தியும், அவர்களுடைய ஆத்மராகங்களும் இந்த நாவல் முழுவதும் சுருதி சுத்தமாக ஒலிக்கின்றன. இவ்வாறு காந்தியத்தைப் பற்றி எழுந்துள்ள இந்த வரலாற்று நாவலை ஆசிரியர் எழுதப் புகுந்ததற்குக் காரணம் காந்தி மறைந்த பிறகு உள்ள வளரும் இந்தியாவை நா. பார்த்தசாரதி காண்பதே யாகும். ஐந்தாண்டுத் திட்டங்களால் ஏற்பட்ட பொருளாதாரக் குழப்பம், எதையுமே அரை குறையாகச் செய்யும் நமது அரசாங்க நிர்வாகத்தின் போக்கு, ஏழை பணக்காரன் வேறுபாடு அதிகரித்துக் கொண்டு வருதல், வேலையின்மை, பிரிவினைமனப்பான்மை மொழிவெறி, இனவெறி ஆகியவை நிரம்பியுள்ள புதிய இந்தியாவின் சமூகச் சீரழிவு ஆசிரியருக்கு நேர் உள்ள பிரத்தியட்ச யதார்த்தமாகும். இவற்றைச் சந்திக்கும் ஆசிரியர் இவற்றின் மாற்று மருந்தாக காந்தியத்தைக் காட்டுகிறுர். நாவலின் கடைசியில் காந்தியம் பற்றிய விவாதம் ஒன்று இடம் பெறுகிறுர். அதில் பார்த்தசாரதி மறைமுகமாவேனும், காந்தியத்தை நோக்கி திரும்புவதற்குக் காரணம் கூறுகிறுர்.23 ‘‘பன்னூறு மகான்களால் எண்ணற்ற தியாகங்களை அஸ்திவாரம் போட்டுக் காட்டிய சுதந்திர மாளிகையில் தூசுகள் அடையத் தொடங்கியிருந்தன- அன்பும், கருணையும் சத்தியமுமாகிய சிறந்த மொழிகளின் பொருளை உணர்ந்த நாட்டில் பேசும் மொழிகளால் வேறுபாடுகள் பிறந்துவிட்டன. அரசியல் வாதிகளிடையே தியாக மனப்பான்மை போய் விட்டது தேர்தல்களில் ஜயிப்பதும், ஜயித்த பின் உடனே அடுத்த தேர்தலில் ஜயிக்கும் வழிவகைகளை யோசிப்பதுமாக மாறிவிட்டார்கள். வறுமையை, பசியை, அறியாமையை ஜயிக்க வேண்டுமென்று சுதந்திரம் பெறுமுன் இருந்த தாகம் சுதந்திரம் பெற்றபின் தேர்தல்களில் ஜயிக்கும் வெறும் ஆசையாக மட்டுமே வந்து மீந்தது. பணமுள்ளவர்களே தேர்தல்களில் நிற்க முடியுமென்று ஆயிற்று’’

6·3 இத்தகைய சமகாலத்தில் இருந்து விலகும் பொழுது, சமீபத்திய பழைமையான காந்தியம் நா. பா. அவர்களுக்கு மாற்று மருந்தாகப் பயன்படுகிறது. அது வீர வணக்கத்திற்குரியதாகி விடுகிறது. காந்தியத்தைப் புகழத் தொடங்கிவிடுகிறுர். காந்தி இல்லாத இந்தியாவை கற்பனை செய்து பார்ப்பதே கடினமாக இருக்கிறது என்கிறுர். நாவலில் வரும் கதாபாத்திரமான பிரகதீஸ்வரன் வாயிலாக ஆசிரியர் கூறுகிறுர் 24 ‘‘ காந்தி மகானைப் போல் ஆத்ம பலத்தை நம்பிச் செயலில் இறங்குகிறவர்களும் இல்லாமற்போய், சுபாஷ்சந்திரபோஸைப்போல் மனவலிமையும் உடல் வலிமையையும் நம்பிச் செயலில் இறங்குகிறவர்களும் இல்லாமல்போய் விட்டால் நாளைய இந்தியாவை என்னுல் நினைக்கவே முடியவில்லை—’’ இத்தகைய நிலையில் ஆசிரியர் மனக்காட்சியில் காந்தி மகா புருடராக, மகாமுனிவராக, அவதார புருடராக மாறிவிடுகிறுர். ‘‘வேத காலத்திற்கு மட்டும்தானு முனிவர்கள் தேவை? நவீன இந்தியாவுக்கும் சுய நலத்தைத் துறந்து பலகோடி மக்களுக்காகத் தங்களை வருத்திக் கொண்டு தவம் புரியும் பல்லாயிரம் சத்தியாக்கிரக முனிவர்கள் தேவைதான். அவர்களின் முதல் அவதாரமாகவே காந்தி தோன்றியிருக்கிறுர் காந்தியைத்தொடர்ந்து இன்னும் பல்லாயிரம் முனிவர்கள் தேசத்துக்கு வேண்டும்............காந்தியம் நாளைய வாழ்நாளுக்கு ஓர் அகில இந்திய ஆசாரமாக அமைய வேண்டும்’’ (ராஜா ராமனின் பிரதிக்ஞை) இது காந்தியத்தின் மீது ஆசிரியருக்குரிய அசைக்க முடியாத நம்பிக்கையையும், காந்தியை அவதார புருடராக வீரவணக்கம் செய்யும் பாங்கையும் எடுத்துக்காட்டும் என்பதில் ஐயமில்லை. இந்த வீரபுருட நிலை வரலாற்றுப் பார்வையை இந்த ஆசிரியரது மற்ற வரலாற்று நாவல்களான ‘மணிபல்லவம்’, ‘கபாடபுரம்’ ‘வஞ்சிமாநகர்’ ‘பாண்டிமாதேவி’ ஆகியவற்றில் காணப்படுகிறது என்று மேலே கண்டோம். ‘‘மணிபல்லவ’’க் கதாநாயகன் இளங்குமரன் கத்தி கேடயம் தாங்கி புரட்சி பேசுகிறுன் என்றுல் காந்திராமன் கரந்தீயம் பேசிப் புரட்சி செய்கிறுர். மணிபல்லவக் கதாநாயகன் வீர புருடன் என்றுல், காந்திராமன் வீரவணக்கம்

செய்யும் ஆசிரமவாதி, இத்தகைய வரலாற்றுப் பார்வையில் பார்த்தசாரதி, கல்கி, அகிலன், ஜெகசிற்பியன் ஆகியோருடன் ஒன்றுபடுகிறார்.

6·4 இதே போன்ற காந்திய சகாப்த நாவல்தான் ர. சு. நல்லபெருமாளின் "கல்லுக்குள் ஈரம்" நா. பார்த்தசாரதியைப் போன்று நல்லபெருமாள் அவர்களும் காந்தியத்தில் நம்பிக்கை உள்ளவர். காந்தியம் தான் இந்தியாவிற்கு விடுதலை வாங்கிக் கொடுத்தது என்ற நோக்கம் உள்ளவர். இந்த நம்பிக்கையுள்ள ர. சு. நல்லபெருமாள் முன்பு நாம் விவரித்த சமகால நெருக்கடிகளில் காந்தியம் புறக்கணிக்கப்படுவதையும், நேருவின் கொள்கைகள் ஆலைக்கரும்பாக அரைபடுவதையும், காண்கிறார். ஆசிரியர் மனதில் ஒருலேசான ஐயம் எழுகிறது. இந்தச் சமகாலத் தாக்கம் காரணமாக சமீபத்திய பழைமையின் பகுதியான விடுதலைப்போராட்டத்தை ஆசிரியர் அணுகுகிறார். காந்தியத்தை எல்லாவற்றிற்கும் அடிப்படையாக ஆக்கக்கூடிய அளவில் நல்ல பெருமாள் பார்த்தசாரதியின் வரலாற்றுப் பார்வையுடன் ஒன்றுபடுகிறார். கதையின் போக்கு இதற்குச் சான்றுபகர்கிறது. பகத்சிங்கின் பாதையைப் பின்பற்றும் ரங்கமணி (கதாநாயகன்) தீக்ஷிதரும், திரிவேணியும் பல தடவை கூறியும் காந்தியத்தை ஒப்புக் கொள்ள மறுக்கிறான். தனது பாதைவேறு காந்தியின் பாதை வேறுஎன்று அடித்துக் கூறுகிறான். இந்தியப் புரட்சி இயக்கத்தின் உறுப்பினன் ஆகிறான். வ. உ. சி.யும், திலகரும் தன் குரு என்று கூறுகிறான். இத்தகைய ரங்கமணி திரிவேணி சுடப்பட்டு இறந்த பின்பு காந்தியின் மார்க்கத்தில் சேருகிறான். காந்தியை விட்டு இனி விலகப் போவதில்லை என்று, எந்த தீக்ஷிதரிடம் மகாத்மாவைப் பழித்தானோ, அவரிடமே கூறுகிறான். கதையின்படி புரட்சி இயக்கத்தைச் சேர்ந்த ரங்கமணி அஹிம்சாவாதியாக, காந்திய வாதியாக மாறுகிறான். இத்தகைய கதைப் போக்கு ஆசிரியர் காந்தியத்தை இந்தியாவின் எல்லா இயக்கங்களுக்கும் அடிப்படைச் சக்தியாகக் காண்பதை எடுத்துக் காட்டுகிறது

6 5 அதே சமயத்தில் விடுதலைப்போராட்ட காலத்தில் காந்தியின் தலைமைக்கு எதிராக எழுந்த விமரிசனங்களை ஆசிரியரால் புறக்கணிக்க முடியவில்லை. காங்கிரஸ், சோஷலிஸ்டுகள், சுயராஜ்யக் கட்சியினர், இந்திய புரட்சி இயக்கத்தினர் ஆகியோர் காந்தியின் தலைமையிலிருந்து மாறுபட்டனர். இந்த காலமான வரலாற்று உண்மையை நல்லபெருமாள் தன் நாவலில் விவரிக்கிறார். ரங்கமணி காந்தியத்தை விமரிசனம் செய்வதெல்லாம் மேலே கூறியவற்றின் பிரதிபலிப்பே. ரங்கமணியின் ஆதரவாளர்களாக வரும் கதாபாத்திரங்களில் காந்தியம். காந்திய மறுப்பு ஆகிய இரு கருத்துக்களின் அடிப்படையில் இருவேறு அணியினராக உள்ளனர். சர்தார் சொக்கலிங்கம் என்ற குருநாதன் நெல்லையில் புரட்சி இயக்கத்தின் தலைவர் காந்தியை எதிர்ப்பவர் அவர் ரங்கமணியிடம் அதிக நம்பிக்கையுள்ளவர். ரெங்கமணியின் காதலியும், சொக்கலிங்கம் பிள்ளையின் வளர்ப்பு மகளுமான திரிவேணி தீவிரமான காந்தியவாதி அம்பாசமுத்திரம் கோமதிசங்கர தீட்சிதரின் சாயலாகப் படைக்கப்பட்டுள்ள தீக்ஷிதர் காந்தியவாதி. ரங்கமணி தன் ஆதர்ச புருஷர்களாக ஒப்புக் கொள்ளும் வரலாற்றுப் பாத்திரங்கள் திலகர், பகத்சிங், பாரதி, வ. உ. சி. ஆகியோர் மற்றொரு கோடியில் உள்ளவர் காந்தி. இந்தக் கருத்து மோதலில் காந்தியம் வெற்றி பெறுகிறது என்று ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார். இந்த அளவிற்கு காந்தியத்தை விமரிசனக் கண்ணோட்டத்தில் கண்டு, ஆனால் அதுதான் முடிவான சக்தி என்று முடிவுகட்டும் தன்மையில் பார்த்தசாரதியிடமிருந்து, நல்ல பெருமாள் வேறுபடுகிறார். முன்னவர் காந்தீயத்தின் சக்தியில் ஐக்கியமாக அத்வைத நிலை எய்தியவர். பின்னவர் காந்தியத்துடன் ஒன்றியும், ஒன்றாத விசிஷ்டாத்துவைத நிலையினர். இந்த இருநிலைகளும் புறத்தே வேறுபட்டுத் தென்பட்டாலும், அடித்தளத்தில் ஒன்றேயாகும். அவ்வாறாயின் நல்லபெருமாள் அவர்களும் கல்கியைப் போன்ற அற்புத நிலை வரலாற்றுக் கண்ணோட்டத்தைக் கொண்டவரே ஆவர்.

7.0 இந்த வரலாற்று நாவல்கள் தவிர ஏராளமான வரலாற்றுச் சிறுகதைகளும் அவை யாவும் இதே தன்மை பெற்றவையாகவே உள்ளன. தமிழ் வரலாற்று நாவல்கள் எல்லா

வற்றையும் படித்து முடிக்கும் சிந்திக்கத்தெரிந்த ஒருவனது மனதில் நிற்கும் கேள்வி இது தான். இவற்றை ஏன் எழுதுகிறுர்கள்? சிறிதளவேனும் நடப்பியல் நோக்கும், கலைப்பண்பும் இல்லாத படி, பழங்காலம் என்ற கல்லறையைத் திறந்து பார்த்து, அங்கு கட்புலனுகும் பொருள்களை வைத்துக் கொண்டு முழுக்க முழுக்க ஒரு பொய் யான உலகைத்தான் இவை உருவாக்கிக் காட்டு கின்றன. வரலாற்றை தற்காலத்திற்கு யதார்த்த மாக சித்தரித்துக் காட்டுவதை விட்டு விட்டு வரலாற்றை வீரபுருட நிலையிலிருந்துதான் இவை அணுகுகின்றன. கல்கியிடமிருந்து தொடங்கி நல்லபெருமாள் "கல்லுக்குள் ஈரம்" வரை இதே போக்கைக் காண முடிகிறது. வரலாற்றுக்காலம் என்பது காதலும் வீரமும் என்ற ஒரு தவறுதலான கண்ணேட்டம் காரணமாக காதல் தற்கால நியதிக்கு ஏற்றபடி காமமாக ஆக்கப் பட்டு வாசகர்களை கனவு உலகிற்கு இவை அழைத்துச் செல்கின்றன. சாண்டில்யன் இதில் சக்கிரவர்த்தியாக விளங்குகிருர். குறுகிய நாட்டுப் புகழ்ச்சியும், இன அல்லது தேசிய வெறியும் இந்த வரலாற்று நாவல்களில் மிகுதியாக காணப்படுகின்றன. இன வெறியையும், தமிழ் வெறியையும் தூண்டிவிடும் உரையாடல்களும், கருத்துக்களும் இந்த நாவல்களில் மலிந்து காணப்படுகின்றன. இந்த நாவல்கள் யாவும் தமிழ் நாவலின் மனிதநேயக் கண்ணேட்டத்திற்குப் புறம்பாகவே விளங்குகின்றன.

7·1 அமைப்புடைப் படையில் இவற்றைக் கண்டாலும், இந்த வரலாற்று நாவல்கள் எதிலுமே கலை நுட்பப் புரட்சி (Technical Revolution) இல்லை. கல்கி ஆசிரியர் போக்கில் அதை கூறும் முறையைக் கையாளுகிருர். அவர் அடிக்கடி தலையிட்டு விளக்கங்களும், வரலாற்று ஆதாரங்களும் கூறுகிருர். இதே முறையை சாண்டில்யன், அகிலன், ஜெகசிற்பியன், நா. பார்த்தசாரதி, அரு. ராமநாதன், விக்ரமன், கோ. வி. மணிசேகரன், சி. என். அண்ணுத்துரை, ஆகியோரது நாவல்களில் காணலாம். இது இந்த ஆசிரியர்களது தத்துவ வறட்சியையும், உள்ளடக்கக் குறைபாட்டையுமே காட்டுகிறது.

7·2 இவை யாவற்றையும் ஒரு சேரக் கண்டால் தமிழ் வரலாற்று நாவல்கள் யாவுமே பாழ்வெளியில் வெறுங்கையால் சிலம்பம் சுழற்றுவது போன்று உள்ளது.

-----

## REFERENCES


1 W. H. Hudson — "A Short History of English Literature" — Introduction.

2 Dr. கைலாசபதி—"தமிழ்நாவல் இலக்கியம் — முதல் அதிகாரம்.

3 ராஜம் அய்யர் — "கமலாம்பாள் சரித்திரம் — பின்னுரை.

4 E. Wagenknecht. "A Cavalcade of the American Novel" — Page 425.

5 P. P. H "Contemporary History of India" Page 278.

6 கல்கி "சிவகாமியின் சபதம்" —முன்னுரை.

7 P. Mayer "A History of Modern Philosophy — P. 501,

8 நா. பார்த்தசாரதி "மணிபல்லவம்" — முன்னுரை.

9 அகிலன் "வேங்கையின் மைந்தன்" பக். 4.

10 ஜெகசிற்பியன் "நந்திவர்மன் காதலி" — முன்னுரை.

11 விக்ரமன் "பாமினிப் பாவை" முன்னுரை.

12 சி. என். அண்ணுத்துரை "கலிங்கராணி" பக்கம் 23.

13 Dr கைலாசபதி "ஒப்பியல் இலக்கியம்" Q. பக்கம் 123.

14 கா. அப்பாத்துரை, M. A., L. T., "தென்னகப் பண்பு" பக்கம் 11.

15 Ibid .............. பக்கம் 13.

16 Ibid .............. பக்கம் 13.

17 "ஆராய்ச்சி" ஜுன் 71 பக்கம் 242.

18 சாண்டில்யன் "யவனராணி" பாகம் 1; பக்கம் 853.

19 சி. என். அண்ணாத்துரை "கலிங்கராணி" பக்கம் 7.

20 The Pelican Guide to English Literature. Vol. 7. பக்கம் 440.

21 சாண்டில்யன் "உதயபானு" (ராணிமுத்து) பக்கம் 22.

22 நா. பார்த்தசாரதி "ஆத்மாவின் ராகங்கள்" முன்னுரை.

23 Ibid .............. பக்கம் 264.

24 Ibid .............. பக்கம் 254.

25 Ibid .............. பக்கம் 250.




# மகாகவி பாரதியாரது கவிதை நடையின் சில விஷேசத் தன்மைகள்


Dr. ஸ்வெத்லானு துருப்னிகோவா


[துருப்னிகோவா மாஸ்கோவில் அயல்மொழிப் பயிற்சி நிலையத்தில் பணியாற்றுகிருர். மாஸ்கோவில் தமிழாய்வாளர்கள் பாரதி கவிதைகளை சமுதாயக் கண்ணேட்டத்தில் ஆராய்கிருர்கள். பேராசிரியர் செலிஷேவ் உலகத்தமிழ் மாநாட்டு ஆராய்ச்சிக் கருத்தரங்கில் பாரதி பற்றி ஓர் கட்டுரை படித்தார். துருப்னிகோவா தற்காலத் தமிழ் இலககியம் பற்றிப்பல கட்டுரைகள் எழுதியுள்ளார். நா. வ.]

"தமிழ் மறுமலர்ச்சியின் விடி வெள்ளி" என்று இந்தியர்களால் பாராட்டப் பெறும் பாரதியின் பெயர் இந்தியாவிலும், அதன் எல்லைக்கப்பாலும் மிகவும் பிரபலமாக உள்ளது. அவருடைய மிகச் சிறந்த கவிதைகள் தமிழ் மக்களின் ஆன்மிகச் செல்வத்தையும் அதன் சிறப்பையும் எடுத்துக் காட்டுகின்றன. தமிழ் நாட்டின் உள்ளத்தை கொள்ளை கொள்ளும் இயற்கைக் காட்சிகளை அறிந்து கொள்ளவும், தமிழ் மக்களின் பண்பாட்டையும் ஆன்மீகப் பண்புகளையும் உணர்ந்து கொள்ளவும் பாரதியின் கவிதைகள் உதவுகின்றன.

வங்காளக் கவிதையில் நஸ்ருல் இஸ்லாமைப் போலவும், இந்திக் கவிதையில் நிராலாவையும், தின்கரையும் போலவும், உருதுக் கவிதையில் ஜோஷ் மலிகாபதியைப் போலவும், இந்திய இலக்கியத்தில் பாரதி ஒரு புரட்சிகர அதித கற்பனை மரபைத் தோற்றுவித்துள்ளார். அவருடைய கவிதைகளில் நாட்டின் மீதும், நாட்டு மக்களின் மீதுமுள்ள பற்றுச் சிறந்து சாணப்படுகிறது,

பாரதி இலக்கிய உலகில் புகுந்த நேரம் "இந்தியா ஒரு சமூகக்கலாசாரப் பொருளாதாரப் புரட்சியை நடத்திக்கொண்டிருந்த காலகட்டம்;' இலக்கியத்தில் புதிய உருவங்கள் வளர்ந்து கொண்டிருந்தன. தற்கால உரைநடை முறை நிலை பெறவும் புதிய சிறந்த கருத்துக்களால் இலக்கியம் செழுமை அடையவும் ஆரம்பித்தது. அதே நேரத்தில் பல கவிஞர்கள் பழைய மரபை ஒட்டிய பொருள்களில் திருப்தி கொண்டிருந்த பொழுது, பாரதி பல புதிய சமூக லட்சியங்களை எடுத்துக் கூறினர். அவருடைய கவிதைகள் தேசிய விழிப்பையும், சாதாரண மக்களின் தன்னுணர்வையும் தட்டியெழுப்பின என்று புகழப்படுகின்றன. பாரதியின் பாடல்களுக்கும் மக்கள் வாழ்வுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பும், பாரதியின் பாடல்களில் வலியுறுத்திக் கூறப்படும் மனிதாபிமானப் போக்கும் அவருடைய கவிதைகளின் நடையிலும் மொழியிலும் அடிப்படையான மாறுதல்களை உண்டாக்கக் காரணமாக இருந்துள்ளன.

பாரதி தமிழ் இலக்கியத்தில் பல சிறந்த புதிய கருத்துக்களையும், புதிய கவிதை வடிவங்களையும் அன்ருடம் வாழ்க்கையில் காணும் பாத்திரங்களையும் படைத்தார். அவருடைய கவிதைகள் சாதாரண மக்களுக்காகப் படைக்கப்பட்டவை. ஆகவே அவரால் செயற்கை மொழி எழுத முடியவில்லை. அவரது படைப்புக்களில் படாடோபமும் பகட்டும் இல்லை. எல்லாமே தெளிவாக, எளிமையாக இருக்கிறது. பாரதியின் படைப்புக்கள் சாதாரண வாசகர்களுக்குப் புரியும்படியாக இருக்கின்றன. ஏனென்ருல் அவர் பொருள் செறிவுடன் கருத்து மிக்க மொழியில் சாதாரண மக்கள் புரிந்து கொள்ளககூடிய அவரவர்களுடைய பேச்சு மொழியில் எழுதினர்.

தன்னுடைய பாடல்களில் மக்களுக்கு தொடர்புள்ள தேசிய பிரச்னைகளை எடுத்துக் காட்டும் போது அவர் சாதாரண மக்களின் பேச்சு மொழியிலுள்ள எளிய சொற்களை உபயோகித்துள்ளார். தமிழ் நாட்டில் மிகவும் பரவலாக இருந்த சில வட சொற்களை மட்டும் அவர் உபயோகித்துள்ளார்.

கோபால கிருஷ்ண பாரதி, ராமலிங்க ஸ்வாமிகள் போன்ற கவிகள் பாரதிக்கு முன்பு ஓரளவு தங்களது கவிதைகளில் மக்கள் மொழியையும் பேச்சு வழக்கையும் கையாண்டுள்ளார்கள். ஆனால், பாரதியாரின் கவிதைகளில்தான் தமிழக நாட்டுப் பாடல்களின் குணம்சங்களைக் கொண்ட புதிய செய்யுளமைப்பு முறையையும், பேச்சு வழக்கல் உள்ள நாடோடிக் கதைப் பொருள்களையும் நாம் முழுமை பெறக் காண்கிறோம்.

பாரதியின் ஆரம்பகாலக் கவிதைகளில் பழைய மரபுப்படி செய்யுளாக்கும் முறையையும் இலக்கிய வரம்புக்கு உட்பட்டு சொற்களை உபயோகப்படுத்தும் பாணியையும் நாம் காண்கிறோம்.

பாரதியின் முதல் கவிதையில் ஒன்று ன "தனிமை இரக்கம்" 1904 ஆம் ஆண்டு மதுரையில் வெளியாயிற்று. இந்தப் பாடலிலுள்ள வினைச் சொல் வடிவங்கள் பழைய இலக்கியத்தைச்சேர்ந்து வழக்கொழிந்ததாகவும், தற்போது வழக்கில் இல்லாததாகவும் உள்ளன. பாரதியே பல சொற்களுக்கு விளக்கம் கொடுக்க வேண்டி வந்துள்ளது. வினைச்சொல் வடிவமான "இயம்புவாள்" போன்றதான தற்போது இலக்கியத்திலும் பேச்சு வழக்கிலும் இல்லாத சொல்லை உபயோகித்து உள்ளார்.

பாரதியின் கவிதைத் திறமை வளர வளர அவருடைய கவிதைகள் வாழ்வுக்கு நெருங்கியும் கவிதை மொழிகள் எளிமையாகவும் புரியும்படியாகவும் மாறியது. பாரதி தன்னுடைய கவிதைகளில் மறைபொருள் கூற்றையும், கவிதையைப் புதிராக மாற்றும் போக்கையும் தவிர்க்க மிகவும் முயன்றுள்ளார்.

சமூகக் கருத்துக்களைக் கொண்ட பாடல்களுடன, பாரதி வேதாந்த பாடல்களையும் பாவ உணர்ச்சி உள்ள பாடல்களையும் எழுதியுள்ளார், பண்டைய இந்தியாவின் புராண இதிகாச விஷயங்களை தனது கவிதையில் கையாண்டுள்ளார். ஆனால் இவைகள் பாரதியின் கவிதைகளில் புதிய சமூகக் கருத்துக்களை பிரதிபலிப்பதாகவும், இவைகளில் உபயோகப்படுத்தப்பட்டுள்ள சொற்கள் பொருள் செறிந்த தற்கால நிலைமையை எடுத்துக்காட்டுவதாகவும் உள்ளன. உதாரணமாக பாஞ்சாலி சபதத்தில் இந்திய மக்களின் வாழ்க்கை நிலைமையையும் பழக்க வழக்கங்களை தெளிவாகக் காண்கிறோம். பொருள் வளமும் அழுத்தமும் கொண்ட மொழியில் இது எழுதப்பட்டு உள்ளது. நடைமுறையில் உள்ள பேச்சு மொழிச் சொற்களையும், தமிழக நாட்டுப் பாடலின் இசையையும் இந்தப் பாடல்களின் கட்டமைப்பில் காண முடிகிறது. பாரதி தைரியமாக தன்னுடைய பாடலில் மக்கள் அன்றடம் வழங்கும் சொற்களையும், சொற்றொடர்களையும் அவைகள் சாதாரனமாகப் பேசப்படும் முறையிலேயே கையாண்டுள்ளார். உதாரணமாக பகடை விளையாட்டு நடப்பதை விவரிக்கும் இடத்தில் இலக்கியச் சொல்லான "போயிற்று" என்பதற்குப் பதிலாக பேச்சு வழக்கிலுள்ள "போச்சுது" என்பதைக் கையாண்டுள்ளார்.

பேச்சு வழக்கிலுள்ள "போச்சுது" என்ற சொல்லை உபயோகித்திருப்பது நிலைமையின் சாதாரணத் தன்மையை அழகாக எடுத்துக் காட்டுவதுடன், சிக்கலான உணர்ச்சிபாவத்தையும் எடுத்துக் காட்டுகிறது.

சொற்றொடர்களை வேகமும் விறுவிறுப்பும் கொண்டதாக தீவிரப்படுத்துவதற்கு வாசகங்களில் வார்த்தைகளை அமைக்கும் முறையில் வேண்டுமென்றே பாரதி பேச்சு வழக்கில் உள்ளது போன்று மாற்றுகிறார்.

தனது பாடலின் கருத்தாழத்தை முழுமையாகவும், ஆணித்தரமாகவும் வெளிப்படுத்துவதற்கு பாரதியார் மொழியை அடக்கி ஆள்கிறார்.

"போச்சுது ! போச்சுது பாரத நாடு !
போச்சுது நல்லறம் ! போச்சுது வேதம் !

இவ்வரிகளில் அவர் வினைச் சொல்லை எழுவாய்க்கு முன் வைக்கிறார். ஒரே வார்த்தையை திரும்பத் திரும்ப கையாள்வதால் பாடலின் ஒலி அழகு சிறப்புப் பெறுகிறது. அவ் வார்த்தை பாடலின் பொருளையும் சிறப்பித்துக் காட்ட உதவுகிறது.

பாரதியார் தன் பாடல்களுக்கு சொற்களைத் தேர்ந்தெடுப்பதில் விசேஷ கவனம் செலுத்தியிருக்கிறார். சாதாரண மக்களின் பேச்சு மொழியையும் வழக்குகளையும் 'மறவன் பாட்டில்' கையாண்டிருப்பதை ஒரு சிறந்த உதாரணமாகச் சொல்லலாம்,

கடுமையான சொற்களையும், பல் பொருள்களுள்ள சொற்றொடர்களையும் ஒதுக்கிவிட்டு, பழக்கத்திலுள்ள எளிய "காசு" போன்ற சொற்களை அவர் கையாண்டுள்ளார். தமிழ் மொழியின் பேச்சு வழக்குகளுக்கு பாரதி எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கிறார் என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. இலக்கிய வழக்கிலுள்ள வினையெச்சமான "பிய்த்து" என்ற சொல்லிற்குப் பதிலாக பாரதி "பிச்சு" என்ற சொல்லை கையாள்கிறார் "புதிய கோணங்கி" என்ற பாடலில் தமிழ் மொழியில் சொல்வடிவியல், சொல் ஒலி இயல் தன்மைகளுக்கும் இணையாக பாரதி ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரின் பேச்சு மொழியை உபயோகிக்கிறார். இப்பாடலில் மேல் வகுப்பினரின் பேச்சு முறையில் காணப்படும் வட மொழிச் சொற்கள் கையாளப்படவில்லை. வழக்கொழிந்த ஒலி இயல் தன்மைகளும், விசேஷ பிரதி பெயர் சொற்களும் வினைச் சொற்களும் கையாளப்படவில்லை, இதில 'சாமியார்' என்ற பெயர் சொல் சாதாரண வழக்குச் சொல் என்ற முறையிலும் வட்டாரச் சொல் என்ற முறையிலும் உபயோகப்படுத்தப் பட்டுள்ளது.

போகுது, வருகுது, வளருது, சேருது. தெரியுது, பெருகுது போன்ற பேச்சு வழக்குக்கே உரித்தான வினை வடிவங்களை பாரதிக்கு முன்பு இலக்கிய வழக்கில் மிகச்சிலரே உபயோகப் படுத்தியுள்ளார்கள்.

தமிழக நாட்டுப் பாடல்களில் செய்யுள் வடிவமைப்புக்களை தனது பாடல்களில் பாரதி கையாண்டதால் அவருடைய பாடல்கள் பெரும்பான்மையான மக்களிடையே புகழ்பெற்று விளங்குகிறது. மக்களின் தமிழ் மொழியின் அழகையும், சிறப்பையும் முழுமையாகக் காட்டுவதற்கும், பேச்சு மொழிக்கும் இலக்கிய மொழிக்கும் உள்ள வேற்றுமைகளைக் குறைப்பதற்கும், உள்ள முயற்சியில் பாரதி பல்வேறு வழிமுறைகளைக் கையாண்டுள்ளார். அவர் எந்த பகுதி மக்களுக்காக பாடுகிறாரோ அதைப் பொறுத்து இருந்தது அவரது பாடலின் செய்யுள் வடிவம், அந்தப் பாடலின் வடிவமைப்பைப் பொறுத்திருந்தது அவர் தேர்ந்தெடுத்த சொற்கள்.

பொதுவாக அவருடைய வசன நூல்களில் அவருடைய பாடல்களைவிட கடினமான சொற்களைக் கொண்டதாகவும், அதிகமான வடமொழிச் சொற்களைக் கொண்டதாகவும், மக்கள் பேச்சு மொழிக்கு அப்பாற்பட்டதாகவும் இருக்கிறது ஆனால் சில பாடல்களில் பாரதி பழைய மரபுப் படியான செய்யுள் வடிவில் எழுதினார் ஆசிரியப்பா போன்ற பாடல்களில் அவரது மொழி மிகவும் கடினமாகவும், "உயர்ந்த" இலக்கியத் தன்மையுடன் கூடியதாகவும் உள்ளது. பிரதிப் பெயர் சொல் "நான்" என்பதற்குப் பதிலாக "யான்" என்றும் (கண்ணன் — என் சீடன்) நாம் என்பதற்குப் பதிலாக "யாம்" என்றும் (தமிழ் ஜாதி) வழக்கொழிந்த வினை அமைப்புக்களான "விரும்பேல்", "செய்திடேல்", "கற்றிடேல்" எங்கள் நாடு) என்றும் பாரதி கையாண்டுள்ளார்.

ஆனால் பாரதியின் பாடல்களின் மொழி, சொல் வடிவமைப்பில் பேச்சு மொழிக்கு தொலைவில் இருந்த இடங்களில்கூட அவை எளிமையாகவும், அழகாகவும், தெளிவாகவும் உள்ளன. இதற்கு உதாரணமாக அவரின் "கண்ணன் பாட்டுக்களை"க் கூறலாம். பாரதிக்கு முன்பு எத்தனையோ கவிகள் "கண்ணனை"ப் பற்றி பாடியுள்ளனர் அவைகளில் மாயாவாதத்தின் சாயல்கள் படிந்திருப்பதைக் காணலாம். ஆனால் பாரதியின் பாடல்களில், சாதாரண மனிதனின் உணர்ச்சிகளும், அனுபவங்களும் தான் காணப்

படுகின்றன. பாரதியின் கண்ணன் ஒரு உல்லா சப்பேர் வழியாகக் காட்டப்படவில்லை. ''அறிவுள்ள குறும்புக்காரனுக, சூர்தாஸின் மகிழ்ச்சிகரமான, பாலதுருவைப் போல தோன்றுகிருன். கண்ணன் ஒரு குறும்புக்கார குழந்தையாக அல்லது காதலனுக, சிறு பெண்ணுகத் தோன்றுகிருன். இந்தக்கண்ணன் பாட்டுக்கள் பலவற்றிலும் பாரதி எளிய பேச்சு மொழியையே கையாண்டுள்ளார்.

மொழிமின் இசை நயம் பாரதியின் பாடலான 'மழை'யில் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது எளிய பேச்சு மொழியையே கையாண்டுள்ளார்.

மொழியின் இசை நயம் பாரதியின் பாடலான 'மழை'யில் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. எளிய பேச்சு மொழியின் உதவியால் கவி மழை பெய்யும் சித்திரத்தை வாசகர்களின் உள்ளத்திலே நன்கு சமைத்துக் காட்டுகிருர். ''பாயுது'', ''சாயுது'' என்ற பேச்சு வழக்கிலுள்ள வார்த்தைகள் ஒலி அழுத்தத்தையும் ஓசை நயத்தையும் அளித்து அதன் சிறப்பான லயம் திரும்பத் திரும்ப வரும்போது மழை பெய்வது போன்ற ஒர் உணர்ச்சியைக் கொடுக்கிறது, ''தக்கத் ததிம்தரிகிட'', ''சட்டச் சடசட்ட சடதட்ட'' என்ற சொற்கள் ஒலி அழகை சிந்தனையில் நிறுத்தி வைக்க உதவுகின்றன,

இந்திய மக்களின் தேசியப் பண்பையும், அவர்களது ஆன்மீக இயல்புகளையும், தமது இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் பற்றிய அவர்களது எண்ணங்களையும் சிறப்பாக உணர்ந்து கொள்வதற்கு பாரதியின் கவிதைகள் உதவுகின்றன. தமது தாயகத்தின் அழகையும் பண்பையும் சாதாரண மனிதனின் மாண்பையும், ஏற்றிப் போற்றும் பாரதியின் கவிதைகள், எமது தாயகத்தை நாங்கள் உண்மையிலேயே புரிந்து கொள்ளவும், கவிதைப் பண்புடன் இனங்காணவும், வழிவகுத்த புஷ்கின், லெர்மந்தோவ், நெக்ராசவ் போன்ற ரஷ்ய கவிஞர்களின் படைப்புக்களை எங்களுக்கு நினைவூட்டுகின்றன.

------

---

# மொழி வளர்ச்சியில் புதுமையாக்கம்

டாக்டர் சே. வை. சண்முகம்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

[ மொழி வளர்ச்சியில் புதுமையாக்கம் பற்றிய கட்டுரை அறிவுவளர்ச்சியின் காரணமாக, அதனை வெளியிடும் மொழியில் ஏற்படும் புதுமையான வெளிப்பாடுகளை மொழியியல் கண்ணோட்டத்தில் வரையறுத்துக்காட்ட முயலுகிறது. தமிழ்மொழியைப் பொறுத்த மட்டிலும் கடந்த 70 ஆண்டுகளாகப் புதிய விஞ்ஞான அறிவின் வாகனமாக வளர்ச்சி பெற்று வருகிறது. மொழி இயல் ஆய்வுகள் வளராத காலத்திலிருந்தே, இதழகளும், நூல்களும் புதிய புதிய சொற்கள், சொற்றொடர்களை ஆக்கிப்பயன்படுத்திவருகின்றன. பல புதிய சொற்கள் கருத்துக் குழப்பங்களை விளைவித்த போதிலும் முன்னேற்றம் தடைபடவில்லை. புதிய புதிய அறிவுத்துறைகளில் அறிவு ஒரு மக்களிடையே பரவும் பொழுது அவற்றை வெளியிடும் அளவுக்கு மொழி தன்னைத் தகுதியாக்கிக் கொள்ளவேண்டும். உரையாடலில் ஏற்படும் மொழி-சொல் வளர்ச்சியைவிட, அறிவியல் துறைகளில் வளர்ச்சியின் விளைவுக்கேற்றபடி புதுமையாக்கம் நிகழ வேண்டியது அவசியம். பண்டைக்காலச் சொற்களஞ்சியம் புதிய புதிய அறிவுத்துறைகளான விண் அறிவியல், இயைபு ரசாயனம், உயரியல் கட்டுமான அறிவியல் போன்ற அரசு வளர்ச்சி பெற்றுவரும் விஞ்ஞானக் கருத்துக்களை வெளியிடச் சிறிதும் தகுதியற்றவை.

எனவே நமதுமொழி இயலாதம். புதிய அறிவியல் துறை விஞ்ஞானிகளும், புதிய சொல்லாக்க முறைகளைக் கண்டுபிடித்தல் அவசியம்.

இலக்கியம், பண்பாடு, கலை முதலியவற்றை விட புதுமையாகப் பிரச்சினை அறிவியல் கருத்துலகிலேயே தீவிரமாக உள்ளது. தற்போது தமிழில் உள்ள அறிவியல் சொற்களஞ்சியம், சொற்றொடர் முறை, கிளவியாக்க முறைகள் ஒளிவேகத்தில் வளர்ந்துவரும் அறிவியல் கருத்துக்களை வெளியிடப் போதுமானவையல்ல. பழமைக்குத் திரும்பும் முறையில் இப்பிரச்சினையைத் தீர்க்க இயலாது. பிறமொழிகள், நமது மொழியைப் போல வளர்ச்சி பெற்றிராத மொழிகள் 50 ஆண்டுகளில் எப்படி விஞ்ஞான வெளியீட்டு மொழிகளாகியுள்ளன அவற்றின் புதுமையாக்க முறைகள் யாவை என்பதை அறிந்து, நாமும் நமது மொழிக்கேற்ற புதுமையாக்க முறைகளை விரைவில் உருவாக்கிக் கொள்ள வேண்டும். வை. சண்முகம் நிலைமையை ஆராய்ந்து சிலபரிகாரங்கள் கூறியுள்ளார். இது இன்னும் பரவலாகவும் (wiclth) ஆழமாகவும் (depth) ஆராயப்படுதல் வேண்டும். அண்ணாமலை மொழியிலாளர் இப்பிரச்சினையை ஆராய்வார்கள் என்று நம்புகிறேன்.

நா. வா. ]

மொழி காலந்தோறும் மாறுபட்டு வருவது இயற்கை. இதுவே மொழி வரலாறு என்று மொழியியலார் ஆராய்வது. ஆனால், அண்மைக் காலத்தில் மனித சமுகத்தில் ஏற்பட்ட விஞ்ஞான முன்னேற்றம், தொழில்துறை, முன்னேற்றம் ஆகியவை காரணமாக உலகமொழிகள் பலவற்றிலும் பல மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இதுவே புதுமையாக்கம் (Modernization) எனப்படும். புதுமையாக்கத்தால் சில மொழிகள் எழுத்து உருவம் பெற்றன, சில மொழிகள் செம்மைபடுத்தப்பட்டன; வேறுசில புதிய கிளை மொழியைப் பொது மொழியாகக் கொண்டன. மொழியின் பயனும் விரிவுபடுத்தப்பட்டது. செய்யுள் இலக்கியத்திற்கே எழுத்து மொழி பயன்படுத்தப்பட்டது போய் உரைநடை தோன்றி பல புதிய பொருள்களைப் பற்றி எழுதப்பட்டன புதுப்புது கருத்துக்களைத் தெரிவிக்கும் சொற்கள் உண்டாக்கப்பட்டன. எனவே இயல்பான வளர்ச்சியோடு செயற்கையாகவும் மொழியியல் பல மாற்றங்கள் புகுந்தன. இவற்றையே மொழி வளர்ச்சியில் புதுமையாக்கம் என்று அழைக்கின்றனர். புதுமையாக்கத்தால் ஏற்பட்ட மாற்றம் ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொருவிதமாக அமைந்துள்ளது. இதற்குக்

காரணம் அவ்வம்மொழி பேசுவோரின் பண்பாட்டிற்கும் உளநிலைக்கும் வரலாற்று நிலைக்கும் ஏற்ப அமைவதே ஆகும். எனவே புதுமையாக்கத்தால் ஏற்படும் மொழிவளர்ச்சியை சமூக மொழியியலார் (Sociolinguist) ஆராய்ந்து வருகின்றனர்.

## புதுமையாக்க மொழி வளர்ச்சி .

புதுமையாக்கத்தால் ஏற்படும் மொழி வளர்ச்சியை பெர்கூசன் (Ferguson) என்பார் (1) எழுத்தாக்கம் (graphization) (2) பொது மொழியாக்கம் (Standardization) (3) சொல்லாக்கம் (Development of vocabulary) (4) நடையாக்கம் (Development of style) என நால் வகையில் ஆராயலாம், என்று கூறியுள்ளார். நாம் (5) உள்நிலைமாற்றம் என்ற மற்றொரு வகையும் சேர்த்துக்கொள்ளலாம்.

எழுத்துருவம் இல்லாத மொழிகள் எழுத்துருவம் பெறுவது எழுத்தாக்கம் ஆகும். எழுத்துருவம் பெற்ற மொழிகள் அச்சு, தட்டுப்பொறி, தொலைஅச்சு போன்றவற்றிற்கு எளிதாகப் பயன்படும் முறையில் செய்யப்படும் எழுத்து சீர்திருத்தம் (Script reform) இதன் ஒரு பகுதியே. அவ்வாறே ஒரு சொல்லிற்குரிய எழுத்துக்களைப் பற்றிய மொழியாக்க சீர்திருத்தமும் (spelling reform) எழுத்தாக்கத்தின் இன்னொரு பகுதியாகும். ஒரு மொழிச் சொற்களைப் பிறமொழியில் எழுத்துத் தவறாது எழுதப்பயன்படுத்தும் எழுத்து பெயர்ப்பு முறையும் (transliteration system) மற்றொரு பகுதியாகக் கொள்ளலாம். எனவே எழுத்துருவம் பெற்ற மொழிகளில் எழுத்தாக்கம் என்பது எழுத்து சீர்திருத்தம், மொழியாக்கச் சீர்திருத்தம், எழுத்து பெயர்ப்பு முறை அமைத்தல் ஆகிய மூவகையும் குறிப்பிடும்.

பேச்சு மொழியாக இருக்கும் எந்த மொழியும் பலகிளை மொழிகளை உடையதாக இருக்கும். ஒருமொழி எழுத்துருவம் பெறும்போது ஒரு கிளை மொழியே பயன்படுத்தப்பட்டு அதுவே பொது மொழித் தன்மையைப் பெற்றுவிடும். புதுமையாக்கத்தால் வேறு ஒரு கிளை மொழியும் பொது மொழியாக ஏற்றுக்கொள்ளப்படும். உள்ள பொது மொழியிலும் சில மாற்றங்கள் ஏற்படலாம். இவையனைத்தும் பொது மொழியாக்கத்தின் கீழ் ஆராயலாம்.

சொல்லாக்கம் புதுப்புது கருத்துக்களைக் கூறுவதற்காகச் சொற்களைப் படைத்துக்கொள்ளும் முறையைக் குறிக்கும். பொதுவாகக்கடன் வாங்குதல் (Borrowing) மூலமாகவும் உள்நிலை ஆக்கம் (Internal creation) மூலமாகவும் புதுக் கருத்துக்களைக் கூறும் சொற்களை ஆக்கிக் கொள்ளலாம். ரயில் என்ற சொல்லையே அப்படியே தமிழில் பயன்படுத்தினால் அது கடன் வாங்குதல் ஆகும்; புகைவண்டி என்று கூறினால் அது உள்நிலை ஆக்கம் ஆகும், உள்நிலை ஆக்கம் என்பதும் பல முறையில் ஏற்படலாம். ஒன்று கடன் மொழி பெயர்ப்பு (loan translation) எனப்படும். மூல மொழியிலுள்ள சொற்களை நேருக்குநேர் மொழி பெயர்த்து ஆக்கிக் கொள்வதாகும். டெலிபோன் என்பதைத் தொலைபேசி என்றும் டெலிஸ்கோப் என்பதைத் தொலைநோக்கி என்றும் உண்டான சொற்கள் ஆங்கிலச் சொற்களை மொழி பெயர்த்ததால் (tele = தொலை; phone = பேசி; scope = நோக்கி) உண்டானவையாகும். கடனாக்கம் (loan creation) என்பது புதுப்பொருளைக் குறிக்க தன்னுடைய மொழியில் உள்ள சொற்களைக் கொண்டு, தொகைச் சொற்களாகப் புதுச்சொற்களைப் படைத்துக் கொள்ளுவது ஆகும். Loud Speaker என்பதைக் குறிக்க ஒலிபெருக்கி என்ற சொல் உண்டானது, இம்முறையில் எழுந்ததாகும். கடன்விரிவு (loan exfension) என்ற மற்றொரு முறை தன்னுடைய மொழியில் ஏற்கனவே உள்ள சொல்லைப் புதுப்பொருளில் கையாளுவதைக்குறிக்கும், மின் என்ற சொல் முன்னர் ‘ஒளிவிடுதல்’ மின்னல் என்ற பொருளில் பயின்று வந்தது, இப்பொழுது ‘electricity’ என்ற புதுப் பொருளில் பயன்படுத்துவது கடன்விரிவு முறையைப் பின்பற்றுவதாகும்.

உள்நிலைமாற்றம் என்பது தன் நாட்டின் பழமையும் பெருமையும் உணர்ந்து கொள்வதால் மொழித்தூய்மை இயக்கம் போன்றவை ஏற்பட்டு மொழியில் பிறமொழித் தாக்குதல் இன்றித் தானே எழும் மாற்றமாகும், மேலும் மொழி

யைப் பரவலாகப் பலரும் பயன்படுத்துவதால் ஏற்படும் மாற்றங்களும் உள்நிலை மாற்றத்தின் கீழ் அடங்கும்.

தமிழில் புதுமையாக்கம் ஏற்பட்ட முறையும் புதுமையாக்கத்தால் ஏற்பட்ட வளர்ச்சியும் அவ்வளர்ச்சிக்குக் காரணமான சமூக பண்பாட்டுச் சூழ்நிலையும் இக்கட்டுரையில் விளக்கப்படும்.

## தமிழில் புதுமையாக்கம்:

தமிழில் மேலைநாட்டுச்செல்வாக்கு பதினாறும் நூற்றாண்டிலிருந்து ஏற்பட்டிருக்க வேண்டும். அதனால் தமிழுக்கு இருபெரும் நன்மைகள் உண்டாயின. ஒன்று தமிழ் நூல்கள் அச்சிடப் பேற்றது, மற்றொன்று உரைக்கு மட்டுமே பெரும்பாலும் பயன்பட்ட உரைநடை தனி இலக்கிய வகையாக மலரத் தொடங்கி பல பொருள் குறித்து உரைநடை நூல்கள் எழுதப்பட்டன. எனினும் புதுமையாக்கத்தின் முழுப்பயனும் இந்நூற்றாண்டு துவக்கத்திலேயே தான் ஏற்பட்டது என்று வரலாற்று ஆசிரியர்கள் கருதுகிறார்கள். ஏனெனில் தமிழின் முதல் செய்தித்தாள் கி. பி. 1899-இல் துவங்கப்பட்டது. விஞ்ஞானக் கருத்துக்களைத் தமிழில் எழுதுவதற்கு அடிப்படையான கலைச் சொற்களைத் தயாரிக்க 1916-இல் தமிழ்க் கலைச்சொல்லாக்க கழகம் அமைக்கப்பட்டது. அதே ஆண்டிலிருந்து அரசியல் பிரசாரத்திற்குத் தமிழ் பயன்படுத்தப்பட்டது. வானொலி, திரைப்படம் போன்றவற்றிலும் பயன்படுத்தப்பட்டது முதல் கால்நூற்றாண்டை ஒட்டி இருக்கலாம். 1956-ல் இருந்து நாட்டு ஆட்சி மொழியாகத் தமிழ் ஆக்கப்பட்டது. 1960-ஆம் ஆண்டு முதல் கல்லூரிகளிலும் மாற்றுப்பாட மொழியாகக் கையாளத் துவங்கப்பட்டது. இத்தகைய பல்வேறு செழுச்சிகளால் தமிழின் சொல் வளம் மட்டுமின்றி வேறுபல துறைகளிலும் மாற்றம் ஏற்பட்டன. அவற்றை விரிவாகக் கீழே காண்போம்.

## எழுத்தாக்கம்:

எ, ஏ என்ற இரு எழுத்துக்களும் வேறுபடுத்தி எழுதுகிற இன்றைய முறை 18-ம் நூற்றாண்டில் வீரமாமுனிவர் தோற்றுவித்தார் என்று பரவலாக உள்ள கருத்து தவறு என்றும் வேறு யாரோ இந்த வேறுபாட்டை ஏற்படுத்தியிருக்க வேண்டும் என்று மயிலை சீனிவேங்கடசாமி குறிப்பிட்டுள்ளார்.

கூட்டெழுத்தாக சிலவற்றை எழுதும் முறை (த்து என்பதை து என்று எழுதுவது போன்றது) சென்ற நூற்றாண்டுவரை பயிற்சியில் மிகுதியாக இருந்தது; இன்று குறைந்துள்ளது. இதற்கு அச்சு (printing) ஒரு காரணமாக இருக்கலாம்.

தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் என்று உயிர் மெய் எழுத்துக்களில் காணப்படும் சில ஒழுங்கீனங்களை நீக்கப் பலரும் பாடுபட்டனர். அச்சுப் பொறி, தட்டுப்பொறி, தொலைஅச்சு (teleprinter) போன்றவற்றிற்கு எளிய முறையில் பயன்படும் வகையில் சீர்திருத்தம் செய்ய 1947-இல் அன்றைய தமிழ்நாடு அரசு ஒரு குழு நியமித்தது. அதில் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் பங்கு ஏற்று நல்ல பரிந்துரைகளை வழங்கியுள்ளார். எனினும் அரசு ஏற்று நாடு முழுமையும் ஏற்றுக் கொள்ளும்படி செய்யாதது ஒரு குறையே. சுதேசமித்திரன் நாளிதழும் இத்துறையில் சில திருத்தங்களைக் கையாண்டு வந்தது. கொஞ்சநாளில் அம்முறையை விட்டு விட்டது. இன்னும் விடுதலை நாளிதழ்தான் சில எழுத்துக்களை புது முறையில் (லை—லை; ணா—ணா) எழுதுவதை விடாப்பிடியாகக் கையாண்டு வருகின்றது.

தமிழில் புதிய எழுத்துக்களை உண்டாக்கும் முயற்சியும் நடைபெற்றுவருவது புதுமையாக்கத்தின் ஒரு விளைவே. பா. வே. மாணிக்கவேலு நாயக்கர் இந்நூற்றாண்டு துவக்கத்தில், f, x போன்ற ஒலிகளைத் தமிழில் ஆய்த எழுத்தையும் வல்லெழுத்தையும் சேர்த்து எழுதுவதன்மூலம் குறிப்பிடலாம் என்று கூறினார். 'f' என்பதை ஃப் என்றும் 'x' என்பதை ஃக் என்றும் அம்முறைப்படி எழுதவேண்டும்.

இன்று சில பத்திரிக்கைகள் 'b' போன்ற ஒலிப்புடைய வல்லின ஒலிகளை (voiced stop sounds) எழுதத் தடித்த எழுத்துக்களைப் பயன்படுத்தி வருகின்றது. இவற்றுள் 'b' என்ற

ஒலியைக் குறிக்க 'ப' என்று எழுதும் பழக்கமே மிகுதியாகக் காணப்படுகிறது. இவையெல்லாம் அனைவராலும் ஒத்துக்கொள்ளப்படாத நிலையில் உள்ளன. புதுமையாக்கத்தால் ஏற்பட்ட மாற்றங்களில் பெரும்பாலரராலும் ஒத்துக்கொள்ளப்பட்டது. கால்புள்ளி, அரைப்புள்ளி, முற்றுப் புள்ளி இட்டு எழுதும் முறையேயாகும். இம் முறை இந்திய மொழிகள் எல்லாவற்றிலும்கூட புதுமையாக்கத்தால்தான் பயிற்சிக்கு வந்தது.

எழுத்தாக்க மரபில் இன்று நடைபெற்று வரும் பிரட்சி ஷ, ஹ, ஸ, க்ஷ, ஜ போன்ற கிரந்த எழுத்துக்களை நீக்கிவிட்டு அதற்கு இணையான தமிழ் எழுத்துக்களைப் போட்டு எழுதுவது தான். இதனால்தான் வரதராஜன் என்பது வரதராசன் என்றும் மீனாக்ஷிசுந்தரம் என்பது மீனாட்சிசுந்தரம் என்றும் இன்று எழுதப்படுகின்றன.

தமிழ் மொழிச் சொற்களை ரோமன் எழுத்தில் எழுதற்குரிய எழுத்து பெயர்ப்பு முறையைப் பலரும் பலவாருகப் பயன்படுத்துவது மொழி ஆராய்ச்சிக்கு ஒரு தடையேயாகும். சென்னை பல்கலைக்கழகத்தார் தமிழ் அகராதியில் குறிப்பிட்ட முறையே தமிழ் மொழி வரலாற்று ஆராய்சியாளரும் திராவிடமொழி ஒப்பிலக்கண ஆராய்ச்சியாளரும் கையாண்டு வருகின்றனர். ஆனால் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் வேறு ஒருமுறையைப் பின்பற்றி வருகின்றனர். இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது ஒரு புதிய முறை வற்புறுத்தப்பட்டது. இவ்வாறு பல முறையும் இருந்து வருவது தமிழ்க் கல்வியாளருக்கும் ஆராய்ச்சியாளருக்கும் குழப்பம் தரும். எனவே சரியான எழுத்து பெயர்ப்பு முறையை அமைத்து அனைவரும் ஏற்றுக்கொள்ளும்படி செய்ய வேண்டும்.

### பொது மொழியாக்கம் :

தமிழின் இன்றைய பொதுமொழி பற்றி கருத்து வேறுபாடு அதிகம் இல்லை. ஆயினும் சிற்சில துறையில் மாறுபட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன; மாறுபட்ட முறையும் காணப்படுகின்றன.

இன்றைய பொது மொழி எந்த பேச்சு மொழியையும் அடிப்படையாகக் கொண்டு எழுந்தது அல்ல. எனினும் இப்பொழுது மொழி தனக்கென பல மரபுகளை ஏற்படுத்திக்கொண்டு தமிழ்மொழி வரலாற்றில் ஒரு தனிநிலையை அடைந்துவிட்டது.

புணர்ச்சியைப் பொறுத்தவரையில் இரண்டு சொற்களுக்கு இடையே புணர்ச்சி இல்லாமல் எழுதும் முறை பரவி வருகிறது. இதனால் உடம்படுமெய் இட்டு எழுதும் முறை குறைந்து வருகிறது. சான்றாக பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் எழுதிய 'கடற்கரையிலே' என்ற நூலில் 'சும்மா இரு' (சும்மா விரு), 'செலுத்த இசை' (செலுத்த விசை) என்ற பல உதாரணங்களைக் காணலாம். அவ்வாறே குற்றியலுகர ஈற்றுச் சொற்கள் உயிர் முதல் மொழியாக வரும்போது குற்றியலுகரத்தைக் கெடுக்காமல் அப்படியே எழுதும் பழக்கம் வளர்ந்து வருகிறது. 'அதற்கு அளித்தேன்' (அதற்களித்தேன்) போன்ற பலவற்றை அந் நூலில் காணலாம். புணர்ச்சி இல்லாமல் எழுதும் முறை பழந்தமிழ் நூல்களைப் பதிப்பிக்கும்போதும் கையாளப்படுகிறது. அண்ணாமலைப் பல்கலைக் கழகமும் கம்பராமாயணத்தின் ஆராய்ச்சிப் பதிப்பு வெளியிட்டபோது பாடல்களைச்சந்தி பிரித்து ஒரு முறையும் சந்தியோடு ஒரு முறையும் அச்சிட்டுள்ளது. தமிழ் இலக்கியக் கல்வி தமிழைச் சிறப்பாகப் பயிலும் பட்டதாரிகளுக்கு மட்டுமே உரியது என்பது போய் தமிழ் அறிவு குறைவாக உள்ளவருக்கும் உரியதாக மாறிய நிலையை இது காட்டுகிறது. இதுவும் புதுமையாக்கத்தின் விளைவாகும்.

இன்றைய வாக்கிய அமைப்பு பலவற்றில் ஆங்கில மொழிச் செல்வாக்கு உண்டு. அதனால் பல புதிய முறை வாக்கியங்கள் பயிற்சியில் உள்ளன. எனவே இன்றைய எழுத்துத் தமிழின் இலக்கணம் தனித்தன்மை உடையது என்பதில் ஐயமில்லை.

### சொல்லாக்கம் :

தமிழில் பெரும்பான்மையும் உள்நிலை ஆக்கமே சொல்லாக்கத்திற்குப் பயன்படுகிறது.

அங்கும் தமிழ்ச் சொற்களையே அடிப்படையாகக் கொள்ளப்படுவது தமிழின் தனிச்சிறப்பாகும். மாறாக கன்னடம், மலையாளம், போன்ற பிற திராவிட மொழிகள் வடமொழிச் சொற்களைப் பெரிதும் சொல்லாக்கத்திற்குப் பயன்படுத்திக் கொள்கின்றன. இந்திய அரசு, 'ரேடியோ' என்ற ஆங்கிலச் சொல்லிற்குப் பதிலாக இந்திய மொழியில் பரவலாகப் பயன்படும் ஆகாஷ்வானி என்பதைப் பொதுச் சொல்லாகத் தேர்ந்தெடுத்தது, ஆனால் தமிழ்நாடு அரசு அதை ஏற்றுக் கொள்ளாது வானொலி என்ற சொல்லே பயன்படுத்தப்படவேண்டும் என்று கூறிவிட்டது. ஆகவேதான் இன்று ஆல் இந்தியா ரேடியோ திருச்சி வானொலி நிலையம் என்ற திருச்சி வானொலி நிலையம் ஒலி பரப்புகிறது.

கலைச் சொற்களில் காணப்படும் மற்றொரு சிறப்புப் பண்பு சங்கத் தமிழ்க் கூறுகளைப் பயன்படுத்துவது. இதைச் செந்தமிழ் ஆக்கம் (Classifiiisation) என்று கூறலாம். பேராசிரியர் வரதராசனுர் சங்கத்தமிழுக்கும் பிற்காலத் தமிழுக்கும் காட்டிய வேறுபாடு செந்தமிழ் ஆக்கத்திற்கான காரணம் கூறுவதுபோல அமைந்துள்ளது. சங்கத் தமிழ் தொகைநிலை (synthetic) யாக உள்ளது என்றும் பிற்காலத் தமிழ் விரிநிலை (analytic) வகையாக உள்ளது என்றும் சுட்டிக் காட்டியுள்ளார்கள். கலைச் சொற்கள் கூடியவரையில் ஒரு சொல்நீர்மைத்தாக அதாவது தொகைநிலையாக (unit term) இருத்தல் சிறப்புடையது என்பர் மொழியியலார். இவவுண்மையை மனதில் கொண்டே பல்வேறு சங்கத்தமிழ் கூறுகள் கலைச் சொல்லாக்கத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன. உதாரணமாக எதிர்மறை (Negative) பெயரெச்சத்தைப் பயன்படுத்தும்போது இன்று பேச்சுத்தமிழிலும் எழுத்துத் தமிழிலும் உள்ள-ஆத என்ற எதிர்மறை பெயரெச்ச விகுதியைக் கையாளாமல் சங்கத்தமிழில் உள்ள-ஆ என்ற விகுதியைக் கையாளுதலைச் சுட்டிக்காட்டலாம். மாறாச் செலவு 'constant cost' பற்றாக்குறை 'deficit' திறன் பெறாத் தொழிலாளி 'unskilled labourer' முதலிய கலைச் சொற்களில் அவ்வுண்மையைக் காணலாம். அவ்வாறே வினைச் சொல்வடிவையும் பெயர்ச் சொல்லையும் சேர்த்து உண்டாக்கும் வினைத் தொகை என்று இலக்கண ஆசிரியர்கள் அழைக்கும் தொகைச் சொல் இன்று பயிற்சியில் மிகுதியாகக் கையாளுவதில்லை. ஆயினும் உயர்கவி 'high waqe' குறைந்து செல்விளைவு 'diminishing return' போன்ற பல கலைச்சொற்கள் வினைத் தொகையாக அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். சில சமயங்களில் இன்றைய வழக்கிலுள்ள சொற்களுக்குப் பதிலாகப் பழந்தமிழ்ச் சொற்களைக் கலைச் சொற்களாகக் கையாளும் பழக்கமும் காணப்படுகிறது. உதடு என்பதை இதழ் என்றும் நடுநிலைமையை நொதுமல் என்றும் பிச்சைக்காரர் என்பதை இரவலர் என்றும் வழங்கப்பட்டுள்ளன.

தமிழில் சொற்கள் பெரும்பான்மையும் கடனாக்கம், கடன்மொழி பெயர்ப்பு என்ற இருமுறையே மிகுதயும் கையாளப்பட்டு வருகின்றன. நிழல் படம் 'Photo' பல்கலைக்கழகம் 'University' காசோலை 'cheque' பேருந்து 'motor' முதலிய பல சொற்கள் கடனாக்கத்தால் ஏற்பட்டவை. செய்தித்தாள் 'Newspaper' நூல் அஞ்சல் 'Book Post' பதிவாளர் 'Register' பணவிடை Money-order' போன்றன கடன் மொழி பெயர்ப்பால் உண்டானவை. நாள்தோறும் பரவலாகப்பயன்படுத்தப்படும் பொருள்களைக் குறிக்கக் கடனாக்கமும் விஞ்ஞான, தொழில் துறையைச் சேர்ந்த பொருள்களைக் குறிக்க கடன் மொழி பெயர்ப்பும் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகின்றன.

கல்வெட்டிலும் பழைய இலக்கியத்திலும் காணப்படும் சொற்களைக் கடன விரிவாகப் புதுப் பொருள்களைக் குறிக்கப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்று சிலர் அடிக்கடி வற்புறுத்தி வருகின்றனர். எனினும் அம்முறையில் இன்றைய தமிழில் புகுந்த சொற்கள் குறைவே, அண்மையில் 'Board' என்ற சொல்லைக் குறிக்க வாரியம் (குடிசை மாற்று வாரியம், குடிநீர் வாரியம்) உண்டாவது கடன் விரிவு முறையில் ஏற்பட்டதாகும். வானொலி, பேராசிரியர் போன்ற சில சொற்கள் கொஞ்ச காலத்திற்கு முன்னிருந்தே பயன்படுத்தப்பட்டு வருவது இம்முறையில் எழுந்ததாகும்.

கன்னடம், மலையாளம் ஆகிய பிறமொழிகளைப்போல நிறைய சொற்களைக் கடன்

எங்காவிடினும் 'கடன் வாங்கல்' தமிழுக்குப் புதியதல்ல. கிலோ, லிட்டர் என்பன மிக அண்மையில் கடன் வாங்கப்பட்ட சொற்க ளாகும்.

கடன் வாங்குதல் மூலம் மொழித்தூய்மை கெட்டுவிடும்; மொழி புது மொழியாக மாறி விடும் என்ற பரவலான கருத்து தமிழகத்தில் இருந்து வருகிறது. உலக மொழிகள் பலவற் றையும் பார்க்கும்போது அவை தவறு என்பது புலனாகும். பிறமொழியாளரோடு தொடர்பு ஏற்படும்போது கடன் வாங்குதல் இயற்கை. அவசியமான பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்குவதில் தவறு இல்லை.

நடையாக்கம் :

தமிழ் எழுத்து நடையில் பல மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. பத்து பதினைந்து வரி வரை யுள்ள பெரிய வாக்கியங்களை போய் இரண்டு மூன்று வரிக்கு மேற்படாத சிறுசிறு வாக்கியங் களே இன்று மிகுதியாக பயன்படுத்தப்படு கின்றன. மிக அண்மையில் ஏற்பட்ட மற்றொரு மாற்றம் எதுகை மோனையோடுகூடிய அடுக்கு மொழிநடை 1940 முதல் 1960 வரை பெற்றி ருந்த செல்வாக்கை இழந்து விட்டதாகும்.

ஆராய்ச்சிக் கட்டுரை எழுத தனி முறை ஒன்று உருவாகி வருவதும் குறிப்பிடத்தக்கது. பத்தியெண், சிறுசிறு உட்தலைப்பே கொடுத்தல், அடிக்குறிப்பு, மேற்கோளைக் கூறும் முறை போன்ற புதிய பழக்கங்கள் ஆராய்ச்சிக் கட்டு ரையின் சிறப்புப் பண்புகளாகக் கருதப்பட்டு வருகின்றன.

உரைநடை வளர்ச்சி விரிவான ஆராய்ச் சியே இன்னும் பல புதிய மாற்றங்களை அறிந்து கொள்ள உதவும்.

'எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்' என்ற புதிய கோட்பாட்டால் தமிழ்மொழி அமைப்பிலும் சொல்வடிவத்திலும் சொல் தொகுதியிலும் பிற மொழிச் செல்வாக்கு இன்றியும் மாற்றம் ஏற்பட்டு வருவது புதுமையாக்கத்தின் விளைவு எனலாம்.

புணர்ச்சி முறையில் இரண்டு மாற்றம் ஏற்பட்டதில் ஒன்று ஏற்றுக் கொள்ளப்பட்டு மற்றது மறுக்கப்பட்ட நிகழ்ச்சி குறிப்பிடத் தக்கன. மதராஸ் என்றிருந்த நம் நாட்டின் பெயர் தமிழ்நாடு என்று மாற்றப்பட்டது. அச் சொல்லைப் பெயரடையாகப் பயன்படுத்திய போது தமிழ்நாடு என்றே (தமிழ்நாடு அரசு, தமிழ்நாடு மின்வாரியம்) உள்ளது, தமிழ் இலக்கண முறைக்கே மாறுபட்டதாகும். ஏனெனில் நாடு என்ற சொல் பெயரடையாக அமைய 'நாட்டு' என்று மாற்றிக் கொள்ள வேண்டும். அப்படி மாற்றம் ஏற்படாத போதும் கருத்து மாறுபாடுஇன்றி ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது ஆனால் குடும்பக்கட்டுப்பாடு பிரசார மொழிகளில் ஒன்றான 'அளவோடு பெற்று வளமோடு வாழ்வோம்' என்பது மாற்ற வேண் டிய சூழ்நிலை ஏற்பட்டது, ஏனெனில் மகர ஈற்றில் முடியும் சொற்கள் வேற்றுமை ஏற்கும் போது அத்து சாரியை கட்டாயமாக பெற வேண்டும் (மரம், மரத்தை, மரத்தோடு). இன்றைய தமிழின் ஒரு புணர்ச்சி விதி. அதன்படி வளமோடு என்பது வளத்தோடு என்று இருக்க வேண்டும் என்று பத்திரிக்கைகளில் பலர் கடிதம் எழுதியதால் தமிழ்நாடு அரசு இன்று 'அள வாகப் பெற்று வளமாக வாழ்வோம்' என்று மாற்றி எழுதி வருகிறது. ஆனால் ஒடு/ஓடு என்ற மூன்றும் வேற்றுமை உருபிற்கு முன் அத்துச் சாரியை இல்லாமலே நெஞ்சமொடு (தொல். 1059) காலமொடு (தொல். 683) போன்றவை பெரு வழக்காக உள்ளது. எனவே சாரியை இல்லாமல் முழுவதும் இலக்கண வழு என்று சொல்ல முடியாது. சங்க இலக்கிய மரபை யாரும் சுட்டிக் காட்டி 'வளமோடு' என்பது யாரும் வாதிடாததே வளமோடு என்பது தவறான வழக்கு என்று அரசும் கருதி அளவாக ......வளமாக என்று மாற்றும்படி ஆகிவிட்டது.

தனித்தமிழ் இயக்கம் என்பது தமிழில் ஏற்கனவே உள்ள பிறமொழிச் சொற்களை நீக்கவேண்டும் என்று பாடுபட்டது. இதற்கு

முதலில் தமிழில் உள்ள பிற மொழிச் சொற்களை எல்லாவற்றையும் கண்டு பிடிக்கவேண்டும். அதற்கு ஒப்பிலக்க அறிவும் வரலாற்று மொழி அறிவும் வேண்டும். அந்நிலையிலும் கருத்து வேறுபாட்டாலும் சிலவற்றை எந்த மொழியைச் சார்ந்தது என்று அறுதியிட்டுச் சொல்ல முடியாமல் போகலாம். எனவே அது ஒரு அரிய முயற்சியே. எனினும் தனித்தமிழ் இயக்கத்தின் செல்வாக்கால் தேவையற்ற நிலையில் வழங்கிய பல சொற்கள் மறைந்து விட்டமை அவ்வியக்கத்தின் பெருமையாகும். அக்கிராசனர், சிரம், ஜலம் போன்ற சொற்கள் போய் முறையே தலைவர், தலை, தண்ணீர் என்ற நல்ல தமிழ்ச் சொற்கள் உயிர் பெற்றன. பேராசிரியர் சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் இந்நூற்றாண்டின் துவக்கத்தில் எழுத்துத் தமிழில் 50 விழுக்காடு பிறமொழிச் சொற்கள் பயன்படுத்தப் பட்டதாயும் 50 ஆண்டுக்குப் பிறகு 20 விழுக்காடாகக் குறைந்து விட்டதாயும் குறிப்பிட்டுள்ளார். கடந்த பத்து ஆண்டுகளில் பிறமொழிச் சொற்களின் விழுக்காடு இன்னும் குறைந்திருக்கும் என்பதில் சற்றும் ஐயமில்லை. ஆனால் மொழித்தூய்மை எல்லா நிலையிலும் ஒரே முறையில் கடைப்பிடிக்கப்பட்டு வருவதாகக் கூற முடியாது. செய்தித்தாள்கள், வார, மாதப் பத்திரிக்கைகளில் ஓரளவு அதிகமான பிறமொழிச் சொற்கள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. சில பத்திரிக்கைகள் மொழித் தூய்மையில் முழுதும் ஈடுபடாமலும் உள்ளன; சில தயக்கமும் காட்டி வருகின்றன. 'கலைமகள்' சில ஆண்டுகளுக்கு முன்னால் தலையங்கத்தின் தலைப்பில் 'நமஸ்காரம்' என்ற சொல்லைப் பயன்படுத்தியதை நிறுத்திவிட்டது; ஆயினும் நமஸ்காரத்திற்கு இணையான வணக்கம் என்ற சொல்லைக் கையாளாது இன்று தலையங்கச் செய்திக்கேற்ற முறையில் புதுப்புதுத் தலைப்பு கொடுத்து வருகிறது.

1967இல் தி மு, க. அரசு பதவிக்கு வந்த போது Express Bus என்பது முதலில் 'துரித வண்டி' என்று மாற்றப்பட்டதும் பொதுமக்களில் சிலர் துரித என்பது வடமொழிச் சொல் என்று சுட்டிக் காட்டியதால் 'விரைவு வண்டி' என்று மாற்றியமைக்கப்பட்டதும் பலருக்கு நினைவு இருக்கலாம். இந்நிகழ்ச்சி தனித்தமிழ் இயக்கம் இன்றும் உயிர் ஊட்டம் உடையதாக இருந்து வருகிறது என்பதற்குச் சான்று ஆகும்.

மொழித் தூய்மை இருவகையாக நடைபெறுகிறது. பிறமொழிச் சொற்களை நீக்கும் போது இணையாக தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துதல் ஒருமுறை, பரிக்ஷை—தேர்வு, மந்திரி —அமைச்சர், சுவாசி—மூச்சுவிடு போன்றவை இம்முறையைச் சார்ந்தவை. மற்ெறாரு வகை பிறமொழிச் சொல்லிற்கு இணையாகப் புதுதொகைகளை அமைத்துக் கொள்வது. சர்வகலாசாலை—பல்கலைக்கழகம்; மனோதத்துவம்—உளவியல், பிராணவாய்வு—உயிர்க்காற்று போன்றவை இவ்வகையை ஒட்டி எழுந்தது.

உள்நிலை மாற்றத்தினால் வழக்கிலுள்ள சில தமிழ்ச் சொற்களுக்குப் பதிலாக வேறு தமிழ்ச் சொற்கள் பயன்படுத்தப்படுவதும் குறிப்பிடத் தக்கது. இதற்கும் நாம் சில காரணங்களைக் கற்பிக்கலாம்.

முன்னர் உள்ள சொல்லிலிருந்து அதனோடு பொருள் தொடர்பு உடைய வேறு சொற்களை உண்டாக்க முடியாத போது அச்சொல்லை நீக்கி வேறு சொல்லைப் பயன்படுத்துகின்றனர். எடுத்துக்காட்டாக Libraryஐ குறிக்க நூல்நிலையம் என்ற சொல்லே பெருவழக்காக உள்ளது. இச்சொல்லிலிருந்து librarian, library science ஆகிய சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களை உண்டாக்குவது சற்று கடினம். எனவே இப்போது 'நூல் நிலையம்' என்பதற்குப் பதிலாக 'நூலகம்' என்ற சொல் பயிற்சிக்கு வந்தது. இதிலிருந்து நூலகர் 'Librerian', நூலக இயல் 'Library science' ஆகிய சொற்களை எளிதில் படைத்துக் கொள்ள முடியும் என்பதால்தான்.

மற்றொரு காரணம் ஒரு சொல்லிலிருந்து தொடர்பான பொருளைக் குறிக்கும் சொற்களை உண்டாக்கக்கூடிய வரையில் ஒரே முறையைப் பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கம் ஆகும். ஏறக்குறைய மூன்று ஆண்டுகளுக்கு முன் வரை

யில் சாலைகளில் 'travellers bunglow' என்பது பயணிகள் விடுதி என்று குறிக்கப்பட்டு வந்தது. இப்போது பயணர் விடுதி ஆகிவிட்டதைப் பலரும் கவனித்திருக்கலாம். இதற்குக் காரணம் மருத்துவம்—மருத்துவர், வீரம்—வீரர் என்பது போன்று பயணம் என்ற சொல்லிலிருந்து உண்டாக்கப்படும் சொல்லும் பயணர் என்று இருப்பது எளிதாக அமையும் என்பதே ஆகும். இவ்வாறே 'science' என்பதைப் பெரும்பாலும் 'இயல்' என்று குறிக்கவேண்டும், என்பது கருதி இன்று பல புதிய சொற்கள் அமைக்கப்பட்டு வருகின்றன. விலங்குநூல்—விலங்கியல்; மொழிநூல்—மொழிஇயல்; உளநூல்—உளவியல் என்ற மாற்றமும் இவ்வுண்மையை வலியுறுத்தும்.

மூலச் சொல்லின் சரியான பொருளையே உண்டாக்கப்பட்ட சொல்லும் குறிக்கவேண்டும் என்று கருதுவதும் சொல் மாற்றத்திற்கு இன்னொரு காரணம் ஆகும். 'Police statlon' என்பது முதலில் காவலர் நிலையம் என்று தமிழாக்கப் பட்டது. இப்போது காவல் நிலையம் என்று ஆக்கப்பட்டுள்ளது. ஏனெனில் 'Police' என்ற ஆங்கிலச் சொல்லின் முதற்பொருள் காவல் துறையையே குறிக்கும்; துணைநிலையில்தான் காவலரைக் (Policemen) குறிக்கும். இதை உணர்ந்ததால் காவலர் நிலையம் என்பது காவல் நிலையம் என்று மாற்றப்பட்டது. விஞ்ஞான கலைச்சொற்களிலும் இம்முறையால் பல சொற்கள் மாற்றப்பட்டுள்ளன. ஜலவாயு (hydrogen) என்பது நீர்க்காற்று என்று தமிழ்ச் சொல்லால் மாற்றப்பட்ட பின்னரும் நீரகம் என்று குறிப்பிடுவதற்குக் காரணம் hydrogen என்பதன் சரியான பொருள் நீரை உண்டாக்கும் சக்தியை உடையது என்பதேயாகும்.

சில சொற்களைச் சுருக்கமாகச் சொல்லும் முறையும் உள்நிலை மாற்றத்தின் விளைவு எனலாம். செயலாளர்—செயலர்; பொருளாளர்—பொருளர் என்பது இவ்வகையைச் சார்ந்தவை.

இவ்வாறு தமிழில் இன்று புதுமையாக்கத்தால் மொழியில் பல மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. அவற்றை ஒழுங்குபடுத்த வேண்டும்; மொழியைச் சற்று எளிமைப் படுத்த வேண்டும். தமிழ்நாட்டு மொழியில் அறிஞர்கள் இன்றைய எழுத்துத் தமிழில் கருத்து செலுத்த வேண்டும். மொழிபற்றிய பலசிக்கல்களை மொழியியலாரும் கல்வியாளரும் ஆட்சித்துறையினரும் விஞ்ஞான தொழில் நுட்ப அறிஞர்களும் ஒன்று கூடி ஆராய மொழி திட்டக்குழு அமைக்கவேண்டியது இன்றியமையாததாகும்.

தமிழகத்தில் இன்றைய மொழி பற்றிய கருத்துக்கள் உருவானதற்குக் காரணமாக சமூக—பண்பாட்டு—வரலாற்றுக் கூறுகளை இனிக் காண்போம்.

### சமூக—பண்பாட்டு—வரலாற்றுக்கூறுகள் :

தமிழ்மொழியில் சமூக பண்பாட்டு வரலாற்றுச் சூழ்நிலைப்பற்றி ஹார்டுகிரேஸ், இர்ஷ்சிக், தாஸ்குப்தா சீனிவாஸ் போன்ற சமூக இயல் ஆராய்ச்சியாளரும் ஆஷர், ஷில்மென் போன்ற மொழியியல் அறிஞர்களும் விரிவாக ஆராய்ந்துள்ளார்கள். அவர்களின் கருத்தைச் சுருக்கமாக விளக்குவோம்.

இந்திய சமூகத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் வடமொழிச் செல்வாக்கு (Sanskritization), மேலைநாட்டுச் செல்வாக்கு (Westernizetion) என்று இரு பெரும் காரணத்தால் ஏற்பட்டவை என்பார் சீனிவாஸ். இவ்வுண்மை தமிழ்ச் சமூகத்துக்கும் பொருந்தும்.

கிட்டத்தட்ட கி. பி. மூன்றும் நூற்றுண்டிலிருந்து வடமொழிச் செல்வாக்கு மிகுதிப்படத் துவங்கியது எனலாம். இடைக்காலத்தில், அதுவும் சிறப்பாக பிற்கால சோழர், பாண்டியர், நாயக்கர் காலங்களில் வடமொழியைப் படித்த பிராமணரின் செல்வாக்கு அரசியல் நிலையிலும் வாழ்க்கையின் பிறதுறையிலும் மிகுதியாய் இருந்தது. அவ்வாறே தமிழகத்தில் மேலைநாட்டார் வந்து ஆட்சி செய்யத் தொடங்கிய போது பிராமணர்கள் ஆங்கில மொழியைக் கற்று அரசாங்கப் பதவிகளில் அமர்ந்தனர். அதனால் மேலைநாட்டு செல்வாக்கு காலத்திலும் பிராமணர் செல்வாக்குடன் இருந்தனர். பெரும்

பான்மையினரான பிராமணரல்லாதார் எனப்பட்டோர் சமுகநிலையிலும் கல்விநிலையிலும் பிற்பட்டோராக கருதப்பட்டனர். எனவே பிற்பட்டோர் நல இயக்கம் என்று தென்னிந்தியாவில் தோன்றிற்று என்கிறார் சீனிவாஸ். எனவே சமுக-பண்பாட்டு-வேறுபாடு காரணமாக எழுந்த இயக்கம் ஆரியர்—திராவிடர் போராட்டமாகக் கற்பிக்கப்பட்டது. பிராமனர்கள் ஆரியராகவும் ஏனையோர் திராவிடராகவும் கருதப்பட்டு திராவிடர் தாழ்ந்த நிலைக்குக் காரணம் ஆரியர் சூழ்ச்சி என்று வரலாற்று நிலையிலும் விளக்க ஆரம்பித்தனர்.

இந்நிலையில் இலக்கிய-பண்பாட்டில் மறுமலர்ச்சி உண்டாயிற்று. கால்டுவெல், போப் போன்ற மேலைநாட்டு ஆராய்ச்சியாளர்களும், சுந்தரம்பிள்ளை, பொன்னம்பலபிள்ளை போன்ற நம்நாட்டு அறிஞர் பெருமக்களும் தமிழின் தொன்மை, தனித்தன்மை ஆகியவற்றை எடுத்துக்கூற ஆரம்பித்தனர். அதை மெய்ப்பிக்கு வண்ணம், சொல் அளவில் மிகக் குறைந்த செல்வாக்கு உடைய, அதே சமயத்தில் பொருள் நிலையில் தனித்தன்மை வாய்ந்த சங்க இலக்கியங்கள் எனப்படும் தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, திருக்குறள் போன்ற இலக்கிய நூல்கள் வெளிக் கொணரப்பட்டன. அவை சிறந்த இலக்கிய படைப்பாகவும் சமயச் சார்பற்றதாகவும் இருந்தது மறுமலர்ச்சிக்குச் சங்க இலக்கியக் கல்வி பெரிதும் உதவியது

மறைமலையடிகள் தனித்தமிழ் இயக்கத்தை ஆரம்பித்து தமிழ் தனித்தியங்கக் கூடிய தன்மையது என்ற கருத்தையும் பரப்பினர். எனவே மொழியைப் பொறுத்த வரையில வடமொழி எதிர்ப்புணர்ச்சியும் தோன்றியது.

இந்நிலையில் நாடு விடுதலையடைந்தது. மொழிவழி மாநிலம் அமைக்கப்பட்டது. எனவே ஒவ்வொரு மாநிலத்திலும் அம்மாநில மொழி ஆட்சி மொழியாகவும் கல்வி மொழியாகவும் சிறப்பிடம் பெற்றது. அரசியலிலும் மாநில உணரச்சி மிகுந்தது. எனவே நாடெங்கும் மாநில மொழி உணர்ச்சி மிகுந்தது. தமிழகத்தில் இந்தி எதிர்ப்பு வலுத்தது.

முடிவுரை :

இன்றையு தமிழகத்தில் மொழி பற்றிய சரியான, விஞ்ஞான முறையிலான கருத்துக்கள் பரவவில்லை. எனவே மொழி வளர்ச்சியில் திட்டவட்டமான கொள்கைகளும் உருவாகவில்லை. இந்த நிலை நீடித்தால் தமிழின் எதிர்கால ஆக்கம் ஒரளவு பாதிக்கப்படும். எனவே மேலே குறிப்பிட்டதுபோல மொழியியல் அறிஞர்களும் விஞ்ஞான—தொழில்துறை அறிஞர்களும் கல்வியாளர்களும் ஆட்சியாளர்களும் ஒன்று கூடி தமிழ் மொழித் திட்டக்குழு அமைத்து தமிழ் மொழி வளர்ச்சி பற்றிய கொள்கைகளை உருவாக்கி நடைமுறையில் செயல்படும்படி உழைக்க வேண்டும்.

# நூலகம்

* நூலக இயல் பற்றி தமிழில் வெளியாகும் ஒரே மாத இதழ்.
* தமிழகத்தில் ஏறக்குறைய ஆயிரம் நூலகங்கள் சந்தா செலுத்திப் பெறுகின்றன.

சிறப்பு அம்சங்கள் :

* தமிழ் நாட்டிலும், பிற மாநிலங்களிலும், அயல் நாடுகளிலும் இயங்கும் நூலகங்களைப் பற்றிய கட்டுரைகள்,
* நூலகர்களின் அனுபவங்கள்.
* பிறமொழி எழுத்தாளர்களின் வாழ்க்கைச் சித்திரங்கள்,
* தமிழ் எழுத்தாளர்களுடன் பேட்டிகள்.
* தமிழ் இலக்கியங்கள் பற்றிய புதிய தகவல்கள்.
* பதிப்பகங்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள்.
* நூலகங்களின் பல்வேறு பிரச்சினைகளைப் பற்றிய கட்டுரைகள்.
* மற்றும் புத்தக விமரிசனங்கள், நூலகங்கள், வாசகர் வட்டங்கள் பற்றிய செய்திகள், இலக்கிய நிகழ்ச்சிகள் பற்றிய செய்திகள்.

தனிச் சிறப்பு :

ஒவ்வொரு இதழிலும் சமீபத்தில் வெளியான புதிய புத்தகங்கள் பற்றிய விவரமான பட்டியல், ஆராய்ச்சியாளர்களுக்கு இன்றியமையாத தகவல்கள்.

விளம்பரங்கள் :

பதிப்பாளர், விற்பனையாளர்களுக்குப் பயன் தரும் விளம்பர சாதனம் நூலகங்களில் வேலை வாய்ப்புகள் பற்றிய விளம்பரங்களுக்கு ஏற்ற இதழ்.

விளம்பர விகிதம் :

முழுப்பக்கம் ரூ. 100.

அரைப்பக்கம் ரூ. 50. கால்பக்கம் ரூ. 25

வரி விளம்பரம் :

வரி ஒன்றுக்கு 50 பைசா வீதம் வசூலிக்கப்படும். குறைந்த கட்டணம் ரூ. 3.

விவரங்களுக்கு:-

நூலகம்

தணிகாசலம் செட்டி ரோடு, தி. நகர், சென்னை-17.

அயல் நாடுகளில்
இலக்கிய ஆய்வுகள்-1.

# நாட்டுப் பாடல்களை சேகரித்த சோவியத் பேராசிரியர்.

வி. எஸ். கமலா

[லுமும்பா மக்கள் நட்புறவுப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றும் விகார் ஜெல்நிகாவ் என்ற இலக்கியப் பேராசிரியரின் ஆய்வுப்பணி பற்றிய கட்டுரை இது. இவர் தாமே இலக்கியங்களைப் படைத்ததுமன்றி, ரஷ்யமக்களின் நாட்டுப் பாடல்களை சேகரித்து வெளியிட்டார். செந்நெறி இலக்கியத்திற்கும், நாட்டு மக்கள் படைப்பிற்கும் இடையே நிலவும் பிரிக்க முடியாத உறவுகளை இவர் அறிந்து ஆய்வுகள் செய்துள்ளார். இவரிடம் நான்கு இந்திய மாணவர்கள் பயின்று டாக்டர் பட்டம் பெற்றுள்ளனர். லுமும்பாவில் ரஷியமொழியும் இலக்கியமும் கற்ற வி. எஸ். கமலா இப்பேராசிரியரோடு நேரடியாக மாணவியாக இருந்து கல்விபயின்றவர்.

தமிழர் நாட்டுப்பாடல்களில் ஆர்வமுடையோருக்கு பேராசிரியர் ஜெல்நிகாவின் அனுபவங்கள் பின்பற்றப்படவேண்டிய உதாரணமாக இருக்குமென்று எண்ணி இக்கட்டுரை வெளியிடப்படுகிறது.

நா. வா. ]

எங்கள் பல்கலைக் கழகத்தில் மொழியியல் துறையில் பல பிரிவுகள் உள்ளன. இலக்கியத் துறையின் தலைவர் பேராசிரியர் விக்தர் மிகா விலேவிச்ஸிஜேல்நிகோவை அறியாதவர் எங்கள் துறையில் யாரும் இருக்கமுடியாது. 65-70 வயது இருக்கலாம்; நரைத்த தலைமுடி; சற்றுப் பருத்த மூக்கு. மொழியியல் துறையில் இது வரை ஆறு இந்திய மாணவர்கள் டாக்டர் பட்டம் பெற்றுள்ளனர். அவர்களில் நான்கு மாணவர்கள் பேராசியர் ஜேல் நிகோவின் தலைமையின் கீழ் ஆராய்ச்சி செய்து பட்டம் பெற்றுள்ளனர். எனவே இந்தியர்கள் என்றால் அவருக்குமிகவும் பிரியம்.

அவருடைய நகைச்சுவை ததும்பிய குழந்தை போன்று பேசும் பாங்கும் யாரையும் கவரச்செய்யும். இப்படி எல்லோருடனும் பேசிக் கொண்டு சர்வ சாதாரணமாகப் பழகும் இவரா ஒரு பேராசிரியர், என்று நான் நினைத்ததுண்டு. ஆனால் அவருடன் பழகிய பின்புதான் அவரது திறமை தெரியவாகியது.

ஸிஜேல்கோவ் ஒரு சாதாரண பேராசிரியர் மட்டும் அல்லர். சோவியத் நாட்டு எழுத்தாளர் சங்கத்தின் அங்கத்தினர்; கல்வி அமைச்சகத்தைச் சேர்ந்த பாடப் புத்தகக் கமிட்டியின் தலைவர்; மொழியியல் விஞ்ஞானப் பேரவையின் அங்கத்தினர்; "எழுத்தாளரும் வாழ்க்கையும்" போன்ற சஞ்சிகையின் ஆசிரியர் குழுவின் அங்கத்தினர். மாஸ்கோ பல்கலைக் கழக வெளியீட்டக ஆசிரியர் குழுவின் அங்கத்தினர் - இப்படி இன்னும் எவ்வளவோ எழுதிக்கொண்டே போகலாம்.

பென்சியா என்னும் நகரத்தில் 1906 ஆம் ஆண்டு, ஒரு தச்சுவேலைக்காரனின் மகனுகப் பிறந்தார் ஸிஜேல்நிகோவ். அவரது தாய் பாடுவதில் வல்லவள். குடும்பம் முழுவதுமே கலையில் ஆர்வம் கொண்டு விளங்கியது. பள்ளிப் படிப்பை முடித்ததும் மாஸ்கோ கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றார் அவர். 1925ஆம் ஆண்டு பத்திரிகை நிருபராசப்பணியேற்றார். 1930 ஆம் ஆண்டிலேயே இவரது எழுத்துக்கள் வெளிவரத் தொடங்கின. 1937ஆம் ஆண்டு இவரது முதல் நாட்டுப் பாடல் புத்தகம் வெளியாகியது.

நாட்டுப் பாடல்தான் அவரது முக்கிய பாடம். சோவியத் நாட்டில் இலக்கியம் உயர்ந்து வளருகிறது என்றால் வியப்பேதும் இல்லை. மொழி, இலக்கியம் ஆகிய துறைகளில் சோவியத் அரசாங்கம் செய்துவரும் பணி குறிப்பிடத் தக்கதாகும். நாளுக்குநாள் ஆயிரக் கணக்கான மக்கள் இத்துறையில் ஆராய்ச்சி

செய்து வருகின்றனர். ஆராய்ச்சிக்கான அத்தனை வசதிகளும் செய்து தரப்பட்டுள்ளன.

1939ஆம் ஆண்டு ஸிஜேல்நிகோ நாட்டுப் பாடலை முக்கிய பாடமாக எடுத்து டாக்டர் பட்டம் பெற்றார். நாட்டுப் பாடலை முக்கிய பாடமாக எடுத்து பட்டம் பெற்ற முதல் டாக்டர் இவரே. பின்னர் 1950 இல் அலெக்சி டால்ஸ்டாயின் தலைமையில் ஆராய்ச்சி செய்து, சமர்ப்பித்த அவரது ஆய்வுக்காக அவருக்கு டாக்டர் ஆப் சயன்ஸ் பட்டம் கிடைத்தது.

1941ஆம் ஆண்டு இரண்டாவது உலக மகா யுத்தம் நடந்தபோது ஸிஜேல்நிகோவும் போர் முனைக்குச் சென்றார். துப்பாக்கி ஏந்தி மட்டுமன்றி எழுதுகோல் கொண்டும் நாட்டிற்கு சேவை செய்யலாம், அல்லவா? இவரது பாடல்களும், கவிதைகளும் நகைச்சுவைத் துணுக்குகளும் பல்லாயிரக்கணக்கில் அச்சிடப்பட்டு யுத்தம் நடந்துகொண்டிருக்கும்போது விமானம் மூலம் போர் முனையில் வினியோகிக்கப்பட்டன. போர் முனை வீரர்களுக்கு உற்சாகம் ஊட்ட எத்தனையோ முறைகளைக் கையாண்டனர். அவற்றில் இதுவும் ஒன்று.

மாஸ்கோவில் உள்ள உலக இலக்கியக் கல்லூரியில் 8 ஆண்டுகள் பணியாற்றினார். பின்னர் 1961 ஆம் ஆண்டு நட்புறவுப் பல்கலைக் கழகம் தொடங்கியதும் இங்கு வந்து சேர்ந்தார்.

இவரது புத்தகங்கள் பல வெளியாகி உள்ளன. "இவ்வளவு எழுதுவதற்கு உங்களுக்கு நேரம் இருக்கிறதா?" - என்று கேட்ட போது, "இதோடு மட்டும் அல்ல. எனக்கு வரைவதிலும் விருப்பம் உண்டு. எனது படைப்புகளுக்கு நானே படங்கள் வரைவதுண்டு. நான் இயற்றும் பாடல்களுக்கு நானேதான் இசையமைமைப்பேன். என் குடும்பத்தில் எல்லோரும் இசையில் ஆர்வம் உடையவர்கள்" என்றார் அவர்.

நாட்டுப் பாடல்களைச் சேகரிப்பது மிகவும் சிரமமாயிற்றே. நீங்கள் எப்படி செய்தீர்கள்? என்று கேட்டேன். "மிகவும் சிரமம்தான். நான் வகுப்பு எடுக்கும்போது அடிக்கடி மாணவர்களுடன் கூட்டுப்பண்ணைகள், பழைய குக்கிராமங்கள் ஆகிய இடங்களுக்குச் செல்வேன். புரட்சிக்குமுன் "போல்ஷிவிக்குகள்" - வாழ்ந்த சிறு கிராமங்களுக்கும் அவர்கள் சிறையில் இருந்த இடங்களுக்கும் நாங்கள் நேரிலேயே சென்று சில நாட்கள் தங்கி "போல்ஷிவிக்குகள்" பற்றிய செய்திகளை சேகரிப்போம். கூட்டுப் பண்ணைகளுக்குப்போனால் என்னுடன் வரும் மாணவர்களை வயலில் வேலை செய்யச் சொல்லிவிட்டு, அங்கு வேலை செய்து கொண்டிருப்பவர்களைக் கூட்டிக் கொண்டு எங்காவது உட்கார்ந்து வெகுநேரம் பேசிக்கொண்டிருப்பேன். அப்படி சாதாரணமாக பேசும்போதுதான் அவர்கள் உபயோகிக்கும் பழமொழிகள், நாட்டுப்பாடல்கள், ஆகியவைகளைச் சேகரிக்க முடியும். திடீரென்று அவர்களைப் பேசச் சொன்னால் அவர்கள் பேச மாட்டார்கள்.

"இதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. சில வயதானவர்கள், அவர்களது குரலை நாங்கள் பதிவு செய்கிறோம் என்று தெரிந்தால் எங்களை அடிக்க வந்து விடுவார்கள். ஒருவர் இபபடி ஒரு சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டார். ஒரு சமயம் யாரோ ஒருவர் ஒரு வயதான கிழவியின் பாடலைப் பதிவு செய்து விட்டார். மறுநாள் ஏதோ எதிர்பாராத விதமாக அக்கிழவிக்கு ஜலதோஷம் வந்து விட்டதாம். அவ்வளவுதான். அந்த கிராமம் முழுவதும் அச்செய்தி பரவி விட்டது. டேப் ரிக்கார்டரினால் தான் அவருக்குத் தொண்டை கெட்டு விட்டது. அது ஏதோ பூதமோ, பிசாசோ என்று பயந்து விட்டார்களாம். இப்படி பல இன்னல்கள் எங்களுக்கு ஏற்பட்டதுண்டு. எனவே நான் போகும்போதெல்லாம் அவர்களுக்குப் பரிசுகள் எடுத்துச் சென்று அன்பாகப் பேசி அவர்களுள் ஒருவராகப் பழகி நாட்டுப்பாடல்களைச் சேகரிப்பது வழக்கம்.

நாட்டுப்பாடல்தான் இலக்கியத்தின் முதல் படி. நாட்டுப் பாடல்கள் மூலம் எத்தனையோ சரித்திர சம்பந்தமான விவரங்கள் நிர்ணயிக்கப்படுகின்றன. எனவேதான் புகழ்பெற்ற பேராசிரியர்கள் தங்களுக்குப் பல அலுவல்கள் இருப்பினும் கிராமங்களை நாடிச் சென்று, இடர்களைப் பொருட்படுத்தாது பாடல்களைச் சேகரிக்

கின்றனர். மூதாதையர்களின் வாழ்வு முடிந்து விட்டால் அவர்களது வாய்மொழி இலக்கியமான நாட்டுப் பாடல்களும் அல்லவா மடிகின்றன. அவற்றைப் பாதுகாக்க பல பேராசிரியர்களை உருவாககியுள்ளது எங்கள் அரசாங்கம்.

"அது மட்டும் அல்ல. எனக்கு எத்தனை யோ பேர்களுடன் கடிதப் போக்கு வரத்து உண்டு. உலகின் பல எழுத்தாளர்களின் கடிதங் கள் எனக்குத் தவறுது கிடைக்கின்றன. ஹங்கேரி, ருமேனியா, போலந்து—போன்ற நாடுகளில் நடைபெற்ற எழுத்தாளர் மாநாட்டில் நான் பங்கு பெற்றுள்ளேன். இவ்வாண்டு பல்கேரியாவில் நடைபெறவிருக்கும் சர்வதேச ரஷ்ய ஆசிரியர்கள் மாநாட்டிற்கான அறிக் கையை தற்போது தயாரித்துக் கொண்டிருக் கிறேன்" என்றார்.

இவரது படைப்புக்கள் பல மொழிகளில் வெளியாகி உள்ளன. 3000-க்கு மேலான புத்த கங்களைக் கொண்ட சொந்த நூல் நிலையம் ஒன்று அவரது வீட்டில் உள்ளது.

இவரது பணி சோவியத் நாட்டிற்கு மட்டும் அல்லாது இந்தியாவிற்கும் உரியதாகும். இவரது தலைமையின் கீழ் சத்திஷ்குமார், கல்பன ஸஹானி, ஸாப்ரா ஹபீப், சங்கர்பாஸு—என்ற நான்கு இந்திய மாணவர்கள் இலக்கியத் துறை யில் ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டத்தைப் பெற்றுள்ளனர்.

இலக்கியத் துறையில் இந்தியாவிற்கு நான்கு இளம் டாக்டர்களை உருவாக்கித் தந்த பெருமை பேராசிரியர் ஸிஜேல் நிக்கோவைச் சாரும்..

—————

# நீங்கள் ஒரு சம்பள ஊழியரா ?

## உங்களுடைய வருமான வரிக் கணக்குகளைத் தாக்கல் செய்துவிட்டீர்களா?

1961-ம் வருடத்திய வருமான வரிச் சட்டப்படி அமைக்கப்படும் பல்வேறு கழிப்புகளுக்குப் பிறகு முந்தைய ஆண்டின் மொத்த வருமானம் 5000 ரூபாய்க்கு அதிகமாக இருக்கும் ஒவ்வொருவரும், **சம்பள** வருமானம் மட்டுமே உள்ளோர் உட்பட, சட்டப்படி வருமான வரிக் கணக்குகளைத் தாக்கல் செய்ய வேண்டும்.

சரியான வருமான வரிக் கணக்குகளைத் தாக்கல் செய்வதால்

(அ) சட்டப்படி கிடைக்கவேண்டிய கழிப்புகள் அனைத்தையும் நீங்கள் பெறவும்.

(ஆ) வரி கூடுதலாகச் செலுத்தப்பட்டிருந்தால் உபரித்தொகை உடன் உங்களுக்குக் கிடைக்கவும்

உங்களுடைய வருமான வரி அதிகாரி உறுதியாக வகை செய்ய முடியும்.

வருமான வரி ரிடர்ன் ஃபாரங்களைப் பெறவோ, வேறு தகவல்களை அறியவோ வேண்டுமெனில் உங்களுடைய வருமான வரியை மதிப்பீடு செய்யும் அதிகாரியுடன் தொடர்புகொள்ளுங்கள். அல்லது வருமான வரி இலாகா பொதுஜனத் தொடர்பு அதிகாரியை அணுகுங்கள். உங்களுடைய ரிடர்ன் ஃபாரங்களில் தயவுசெய்து மறவாமல் உங்களுடைய நிரந்தர கணக்கு நம்பரைக் குறிப்பிடுங்கள். இதுவரை உங்களுக்கு நிரந்தர கணக்கு நம்பர் ஒன்று கொடுக்கப்படாமல் இருந்தால், கணக்கு நம்பர் ஒன்றை உங்களுக்கு தயவு செய்து உங்களுடைய வருமான வரி அதிகாரியையோ, வருமான வரிக் கமிஷனரையோ கேளுங்கள்.

வெளியிட்டது:

டைரக்டரேட் ஆஃப் இன்ஸ்பெக்ஷன்ஸ்

( ஆய்வு, புள்ளி விவரம் வெளியீடு )

புது தில்லி 70 / 292

# பெண்களின் உரிமை குறித்து ஒரு கல்வெட்டு.

இரா. நாகசாமி, எம். ஏ.,

தில்லையில் தில்லை அம்மன் கோயிலில் உள்ள ஒரு கல்வெட்டு இது. இது கோப்பெருஞ்சிங்கன் என்ற பல்லவ மன்னனின் 3-ம் ஆட்சியாண்டில் எழுதப்பட்டது. அதாவது 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இக்கல்வெட்டில் பல சிறந்த செய்திகள் உள்ளன. ஒரு குடும்பத்தைச் சேர்ந்த எழுவர் ஒரு நிலத்தை வேறு ஒருவருக்கு விற்றார்கள். அதை இக்கல்வெட்டுக் கூறுகிறது. இதை இக்காலத்தில் (Sale deed Registration) விற்பனைப் பதிவுப் பத்திரம் என்போம். இக்கல்வெட்டில் யார் நிலத்தை விற்றார்கள். யாருக்கு விற்றார்கள்? எவ்வளவு நிலத்தை விற்றார்கள்? நிலத்தின் எல்லைகள் என்ன? என்ன விலைக்கு விற்றார்கள்? எவ்வளவு பணம் பெற்றுக்கொண்டார்கள்? நிலத்தில் என்ன என்ன உரிமைகள் கொடுக்கப்பட்டன? யார் முன்னின்று விற்பனைக்கு ஏற்பாடு செய்தார்கள்? எழுதியவர் யார்? கையொப்பம் இட்டவர் யார் என்ற செய்திகள் விரிவாக அடங்கியிருக்கின்றன.

இன்று நம் நில விற்பனைப் பத்திரங்களை ஆங்கிலேயர் கற்பித்தபடி பதிவு செய்கிறோம். இதற்கு முன்னர் இவ்வளவு தெளிவான பதிவு முறைகள் இல்லை என்று நம்மிடையே பலர் நினைக்கிறார்கள். ஆங்கிலேயர் பல நூம் சென்ற நூற்றாண்டில் நம் நில முறைகளை சீர்திருத்தம் செய்ததாக பெருமையாக கூறியுள்ளதை அவர்களது கடிதங்களில் காணலாம். ஆனால் இக்கல்வெட்டைக் கண்டால் பல நூற்றாண்டிற்கும் முன்பே நமது பதிவு முறைகள் எவ்வளவு தெளிவாக இருந்தன என்று எண்ணி வியக்கும் அளவுக்கு உள்ளதைக் காணலாம். இன்றுள்ள முறைகள் கூட இவ்வளவு தெளிவுள்ளவையா என்பது ஐயப்பாடான ஒன்றாகும்.

இக்கல்வெட்டு நில விலைப்பதிவு முறை 13-ம் நூற்றாண்டில் எப்படி இருந்தது என்பதைக் காட்டுகிறது. அத்துடன் பல இன்றியமையாத சமுதாய அமைப்புகளையும் சிறப்பாக பெண்களின் நிலைகளையும் சுட்டிக் காட்டுகிறது. அவற்றை இக்கட்டுரை ஆயும். கல்வெட்டு வாசகங்கள் அங்கங்கே கொடுக்கப்படும். அவற்றைப் படித்தல் இன்றியமையாததால் அவையும் கொடுக்கப்பட்டுள்ளன.

நிலத்தை விற்றவர்கள்:-

1) பஞ்சாஷரதேவன்
2) இவன் தாய் சேந்தன் தத்தை
3) இவன் மனைவி பிள்ளையாண்டி
4) இவன் மகன் திருச்சிற்றம்பலமுடையான்
5) (இவன் தம்பி) சேந்தன்
6) இவன் மனைவி திருக்கழிப்பாலை உடையாள்
7) இவன் மகன் தில்லை நாயகன்

இவர்கள் அனைவரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். பிராம்மணக் குடும்பம். அதனால் மனைவி என்பதற்குப் பதிலாக "இவன் பிராம்மணி" என்று கல்வெட்டு கூறுகிறது. வெள்ளறை என்ற ஊரைச் சேர்ந்தவர்கள். தில்லையில் வசித்தவர்கள். கவுசிக கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் அனைவரும் கவுனியன் சிவன் திருச்சிற்றம்பலமுடையான் என்பவனுக்கு நிலத்தை விற்றார்கள். இதைக் கூறும் கல்வெட்டை பல பகுதிகளாகப் பிரித்து அறியலாம்.

"ஸ்வஸ்தி ஸ்ரீ சகல புவன சக்கரவர்த்திகள் கோப்பெருஞ்
சிங்க தேவர்க்கு யாண்டு மூன்றாவது மேஷ நாயற்று தியதி நாளினால்"

இன்று நாம் ஆங்கில மாதமும், தேதியும் பதிவுகளில் எழுதுவது போல் அன்று ஆண்ட மன்னனின் ஆட்சியாண்டு. மாதம், தேதியை இது குறிக்கிறது.

இதற்கு அடுத்து நிலத்தை விற்றவர்களின் பெயர்கள் குறிக்கப்படுகின்றன.

"தலியூர் பெரும்பற்ற புலியூர்
வெள்ளறை கவுசியன் சிற்றம்பல முடை
யான் பஞ்சாஷர தேவனும்
இவன் மகன் வெள்ளறை கவுசியன் பஞ்சா
ஷரதேவன் சிற்றம்பலமுடையானும்
இவனை முதுகண்ணாக உடைய இவன்
பிராமணி திருக்கழிப்பாலை உடையாள்
பிள்ளை பாண்டியும்,
வெள்ளறைக் கவுசியன் திருச்சிற்றம்பல
முடையான் பஞ்சாஷர தேவனை
முதுகண்ணாக உடைய இவன் மாதா வெள்
ளறை கவுசியன் திருச்சிற்றம்பலமுடை
யான் பிராமணி சேந்தன் தத்தையும,
வெள்ளறை திருச்சிற்றம்பலமுடையான்
சேந்தனும்
இவன் மகன் வெள்ளறை கவுசியன் சேந்தன்
தில்லை நாயகனும்
இவனையே முதுகண்ணாக உடைய இவன்
பிராமணி சென்னித்மும்பன்
திருக்கழிப் பாலை உவடயாளும்
இவ்வனைவோம்"

என்று கல்வெட்டு அவர்களது பெயரைக் குறிக்கின்றது. இதில் ஒவ்வொருவருடைய ஊர்ப் பெயர், கோத்திரப் பெயர், தந்தை பெயர், தனி பெயர் குறிக்கப்பட்டுள்ளதைக் காண்கிறோம். பெண்களுக்கும், அவர்களது ஊர்பெயர் குறிக்கப் படுகிறது. ("திருக்கழிப்பாலை உடையாள்") ஆனால் அவர்களது கோத்திரப் பெயர் குறிக்கப் படவில்லை. புகுந்த இடத்து கோத்திரத்தை இவர்கள் கொண்டதால் இவ்வாறு குறிக்கப்படவில்லை எனக் கொள்ளலாம். ஆயினும் பெண்ணின் தந்தை பெயர் சேந்தன் தந்தை எனக்குறிக்கப்படுகிறது.

இதற்கு அடுத்து நிலம் யாருக்கு விற்கப்பட்டதோ அவர் பெயர் குறிக்கப்படுகிறது.

"கவுனியன் சிவன் திருச்சிற்றம்பலமுடை
யானுக்கு";
நாங்கள் நில விலைப் பிரமாணத்திட்டு
குடுத்த பரிசாவது
நாங்கள் இவனுக்கு இவாட்டை மீன
நாயற்று தியதி
இருபத்தாறிநால் விற்று விலைத்தரவு எழுதிக்
குடுத்து இதுக்கு
இற்றை நாளால் வலை பிரமானத்திட்டு
எழுதிகுடுக்கும் நிலம்"

மேலே குறித்த எழுவரும் சிவன் சிற்றம்பல முடையானுக்கு நிலத்தை விலைக்கு விற்றார்கள். இதை "நிலவிலை" பிரமாணத்திட்டுக் குடுத்தல்" என்று பெயர். நிலவிலைச் சான்று என்பது பொருள். இதற்காகப் பெறுகின்ற பொருளுக்கு தரவு எழுதிக் கொடுத்தல் வழக்கம் அதை விலைத்தரவு எழுதிக் கொடுத்தல் (ரசீது) என்று குறிக்கிறது.

இங்கு மற்றொரு குறிப்பும் உள்ளது. மீன நாயற்று (தை மாதம்) 26-ந் தேதி விற்று விலைத் தரவு கொடுத்தார். மேஷநாயற்று (சித்திரை மாதம்) நான்காம் தேதி பிரமாணத்திட்டு எழுதிக் கொடுத்தனர். பணம் பெற்றுக் கொண்ட 8 நாட்கள் கழித்து பத்திரம் எழுதியிருக்கிறார்கள். இதற்கு பின்னர் விற்ற நிலத்தின் எல்லைகளை கல்வெட்டு கூறுகிறது. எல்லைகளைக் குறிக்கும் போது கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என கிழக்கில் தொடங்கி வலமாக குறிப்பது மரபு. அவை இங்கு தேவை இல்லாததால் மற்றவை கொடுக்கப்பட்டுள்ளன.

"ஆக இசைந்த இன்னான்கெல்லையினும்
உள்ளிட்ட சதுரத்துளவாக
மிகுதிக் குறை உள்ளடங்க நத்தமும்
குளமும், உள்பட
வந்த நிலம் வுப இந்நிலம் ஏழுமாவும்
இதில் உள்பட்ட
தெங்கு, புளி உள்ளிட்ட பல்லுருவில் பயன்
மரங்களும்
குளத்தில் கீழ் நீரும் மேல் நீரும் இறைக்க
உடைய துலையும் நிலையும்
இந்நிலத்துக்கு முலஓலைப்படிகளாலும்
பொத்தகப் படிகளாலும்

உள்ளிட்ட உடமைகளும் உரிமைகளுமாக இத்தனையும் மற்றும்
ஒழிவின்றி விற்றுக் குடுத்துக்கொள்வதான எம்மிலிசைந்த
விலைப்பொருள் அன்றுரு செல்லும் நற்காசு 28,000''

கல்வெட்டின் இப்பகுதியிலிருந்து பல செய்திகளும் பெறுகிறோம். சற்று மிகுதியோ, குறைவோ இருந்தால் அவை ஏற்றுக் கொள்ளப்பட்டன என்பதை ''மிகுதி குறைவு உள்ளடங்க'' என்பது குறிக்கிறது. நிலத்தின் அளவு, எண், எழுத்து ஆகிய இரண்டாலும் ''7 மா, ஏழுமா'' எனக் குறிக்கப்படுகிறது. இன்றும் இம்முறை பின்பற்றப்படுவதை நாம் அறிவோம். நிலத்தில் வளரும் மரங்களும் கொடுக்கப்பட்டன. இவை பல்லுருவில் பயன்மரங்கள் எனப்பட்டன.

இந்நிலத்தில் ஒரு குளம் இருந்தது. அதில் நீர் இறைக்க துலையும் நிலையும் இருந்தன. அவையும் கொடுக்கப்பட்டன. தவிர மூலஓலைப் படிகளாலும் (Originel documents) பொத்தகப் படிகளாலும் (Registers) உள்ள எல்லா உடமைகளும் உரிமைகளும் வாங்கினோர்க்கு கொடுக்கப்பட்டதாக எழுதப்பட்டன.

இருதர்த்தாரும் இசைந்து இதன் விலைப் பொருளாக அன்றுரு செல்லும் நற்காசு 28,000 (Currency under Circulation). இதுவும் எண்ணாலும் எழுத்தாலும் எழுதப்பட்டது.

''இக்காசு இருபத்தெண்ணாயிரமும் உடையோம் உடையபடி
ஆவணக் களரியே காட்டேறிக் கைச் செலவறக் கொண்டு
விற்று விலைப் பிரமாணத்திட்டுக் கொடுத்தோம்
இந்த கவுசியன் (கவுனியன்?) சிவன் திருச்சிற்றம்பலமுடையானுக்கு
முற்சொல்லப்பட்ட இவ்வணைவோம்''

விலைப் பொருள் ஆவணக்களரியவே காட்டி கொண்டனர். இப்பொருளில் கைச்செலவும் உட்பட்டது. பொருள் பெற்றுக் கொண்டுபின் விற்றுக் கொடுக்கப்பட்டது. அதற்கு விலைச் சான்று கொடுக்கப்பட்டது.

இதற்குப் பிறகு கல்வெட்டில் சில வாசகங்கள் சிறப்பாக உள்ளன.

''இந்நிலத்துக்கு இதுவே விலை ஆவதாகவும்''

விலை இறுதியாக நிர்ணயிக்கப்பட்டது. இதில் மாற்றம் இல்லை என்று இது உறுதி கூறுகிறது.

''விலை பிரமாணமும், பொருள் மாவறுதிப் பொருட் சில
ஓலையும் இதுவே ஆவதாகவும் இது வல்லது வேறு
பொருள் மாவறுதி பொருட்செலவோலை காட்டக்
கடவதல்லதாகவும்'' இந்நிலத்துக்கு வந்த தடையும்
இடையூறும் தீர்த்து ஆழ்விப்பதற்கு தங்கள் வாழ்வே
ஆழ்ச்சி இறைப்புணை ஆவதாகவும்''

இந்நிலத்தில் ஏதாவது விவகாரம் வந்தால் அதை விற்பவர்கள் தாங்களே நின்று தீர்த்து தரவேண்டும் தாங்களே அதற்கு புணை.

''இன்னிலத்துக்கு பழம்படி பாயும் நீர் பாயவும் வாரும் நீர்
வாரவும் இறைக்கும் நீர் இறைக்கவும் பெறுவதாகவும்
இப்படி சம்மதித்து முற்கூறி தந்த காசு 28,000மும் உடையோம்
உடையபடி அதைக் கொண்டு முற்கூறிய மிகுதிக் குறைவை
உள்ளடங்க நிலமும், நத்தமும், குளமும் உள்ளிட்டு வந்த நிலம்
ஏழுமாவும், நிலம் முள்ளிட்ட மேநோக்கின் மரமும் தெங்கும்
புளி உள்ளிட்ட பல்லுருவில் பயன் மரங்களும், கீழே குளத்து கீழ்
நீரும் மே நீரும் இறைக்க உடைய துலையும் நிலையும்
மற்றும் மூலை ஓலைப் படிகளால் பொத்தப் படியாலும் வந்த
உடைமைகளும் உரிமைகளும் உள்ளிட்ட பெற்று விலைப் பிரமாணத்
திட்டுக் குடுத்தோம்.''

இது பத்திரம் (document) ஆகையால் தெளிவானதாகவும், மீண்டும் விவகாரம் ஏற்படாமல் இருக்கவும் முன்கூறியவை இரண்டாம் முறையும் குறிக்கப்பட்டுள்ளது காணவும்.

இதற்கடுத்து நிலம் விற்றவர்களின் பெயர்கள் முதலில் குறிப்பிட்ட படியே மீண்டும் குறிக்கப்பட்டுள்ளன. இவர்களுக்காக இவ்வோலை எழுதிய முறை பின்னர் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. இதுவும் வரலாற்று சிறப்புடைய தாக்வும் சமுதாய வாழ்வை சிறப்பாக பெண்களின் நிலையை அறிய இவை இன்றியமையா தவை.

விற்றவர்களை குறித்தபோது குறித்துள்ள சில செய்திகளை இப்பொழுது ஆய்தல் வேண்டும். பெண்களுக்கு குடும்பச் சொத்தில் பங்கு இருந்தது என்பது இக்கல்வெட்டில் இருந்து அறிகிறோம். இது ஒரு கூட்டுக் குடும்பம் (Joint family). ஆதலின் வீட்டுத் தலைவனின் தாய்க்கும், மனைவிக்கும், மகனுக்கும், தம்பிக்கும், தம்பி மனைவிக்கும், தம்பி மகனுக்கும் நில உடைமையில் பங்கு இருந்தது. இந்நிலம் அனைவருக்கும் சொந்தம் ஆகையால் அனைவருடைய சம்மதமும் தேவை. ஆதலின் அனைவருடைய பெயர்களும், இசைவும் கல்வெட்டில் குறிக்கப் பட்டுள்ளன.

பல கல்வெட்டுக்களில் பெண்களுக்கு தனியாக நிலம் கொள்ளும் உரிமை குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் இங்கு ஒரு கூட்டுக் குடும்பத்தின் நிலத்தில் வீட்டுப் பெண்களுக்கும் உடமை இருந்தது என்பதைக் காணும்போது உடமையும் உரிமையும் பெண்களுக்கும் ஏற்றுக்கொள்ளப் பட்டது என்பது தெளிவு.

ஆயினும் விட்டுத்தலைவனின் தாய்க்கும், மனைவிக்கும் விட்டுத்தலைவன் "முதுகண்ணாக" விளங்கினான், என்றும், தம்பியின் மனைவிக்கு தம்பி முதுகண்ணாக இருந்தான் என்றும் கல்வெட்டிலிருந்து அறிகிறோம். முதுகண் என்றால் guardian என்னும் பொருள். இதிலிருந்து பெண்களுக்கு பொருள் கொள்ளும் உரிமை இருந்த போதிலும் ஒரு முதுகண் மூலமாகவே நிலப் பொருள் விற்பதும் வாங்குவதும் பெரும்பாலும் நடைபெற்றது என்பதும் ஆண்களே முதுகண் களாக இருந்தனர் என்பதும் தெளிவாகிறது. மேலும் கல்வெட்டை ஆராய்வோம்.

"(முன்னர் கூறப்பட்ட விற்போர்) அனைவோரும் இப்பரிசு
இவனைவரும் எழுதுக என்று முன்னின்று பணிக்கவும், இவர்களுக்கு
இவ்வெள்ளறை கவுசியன் திருச்சிற்றம்பலமுடையான்
பஞ்சாக்ஷரனும் இவன் மகனான பஞ்சாக்ஷர தேவன்
திருச்சிற்றம்பலமுடையானும் வெள்ளறைக் கவுசியன் சேந்தன்
தில்லை நாயகனும் இவ்வனைவரும் முதுகண்ணாக இருந்து எழுது
வித்து பணிக்கவும் எழுதினேன் கரணத்தான் புலியூருடையான்
பெற்றான் தில்லை நாயகனான தன்மபிரியனென இவை என் எழுத்து"

இப்பகுதி மேலும் சில சிறப்புச் செய்திகளைத் தருகிறது. ஊர் கரணத்தான் பத்திரத்தை எழுதுவான். அவ்வாறு எழுதும்போது நிலத்தின் உடமையாளர்கள் அனைவரும் நேர்முகமாக விற்பதற்கு சம்மதம் அளித்தல் வேண்டும். பிறகு ஆண்கள் கரணத்தானு உடனிருந்து ஓலை எழுதுவதை காண்பர். இந்நில விற்பனையில் பெண்களுக்கும் பங்கு இருந்தது எனக் கண்டோம். ஆதலின் அவர்களும் சேர்ந்து அனைவரும் நேர் முகமாக எழுதுக என்று பணித்தனர். பெண்களுக்கு ஆண்கள் முதுகண்ணாக இருந்தாலும், பெண்களின் நேர்முகச் சம்மதம் தேவை என்பது தெளிவு. இது பெண்களின் உரிமையை காக்க எடுத்துக்கொண்ட செயல் எனலாம்.

இவ்வாறு நில உடமை உள்ள அனைவரின் நேர்முகச் சம்மதம் பெற்ற பின்னர், ஆண்கள் முதுகண்ணாக உடனிருப்ப காரணத்தான் எழுதினான் எனக் கல்வெட்டு கூறுகிறது. ஆதலின் ஓலை வாசகங்கள் எழுதப்படும் போது பெண்கள் உடனிருக்கவில்லை.

இங்கு முதுகண் என்பதின் பொருள் சற்று தெளிவாகிறது. முதுகண் என்பது பொருளுடைமை குறித்து பிரமாணங்கள் (பத்திரங்கள்) எழுதும்போது, ஒருவருக்காக மற்றொருவர் பொறுப்பேற்று, பிரமாண வாசகங்களை ஒப்பு நோக்கவும், அதற்கு கையெழுந்திடுவதுமாகும். இது "இவ்வனைவரும் முதுகண்ணாக இருந்து

எழுதுவித்துப் பணிக்கவும்'' என்பதாலும், ''முது கண்ணுயிருந்து விற்றும் விற்பித்தும் கொடுத்தேன்'' என்பதாலும் தெரிகிறது.

இக்கல்வெட்டைச் சிறப்பாகக் காணும் போது விற்கப்பட்ட நிலம் வீட்டுத் தலைவனின் பூர்வீகச் சொத்து எனக் கருத இடமுள்ளது. அவனுடைய தாய்க்கும் உடமை இருப்பதிலிருந்து இந்நிலத்தை அவன் தந்தையிடமிருந்து பெற்றிருக்க வேண்டும். நிலம் விற்கப்பட்ட போது வீட்டுத் தலைவனின் தந்தையின் பெயர் குறிக்கப்படாததால் அவர் இறந்திருக்க வேண்டும் என்று கொள்ளலாம். ஆதலின் பூர்வீகச் சொத்தைப் பெறும்போது அவனுக்கும் அவன் தாய்க்கும், மனைவிக்கும், மகனுக்கும், தம்பிக்கும், தம்பி மனைவிக்கும், தம்பி மகனுக்கும் பங்கு இருந்தது என்பது தெளிவு. ஆதலின் தந்தைக்குப் பிறகு மகனுக்குத்தான் சொத்து என்பது இல்லை; குடும்ப முழுமைக்கும் உடையதாக கொள்ளப்பட்டது சிறப்பாகும்.

---

# திருச்செந்தூர் கல்வெட்டு.

நடன. காசிநாதன் எம். ஏ.,
கல்வெட்டாய்வாளர், தொல் பொருள் ஆய்வுத்துறை.

பண்டைத் தமிழர்களின் பாங்கான ஆட்சி முறையைத் தெற்றென அறிந்து கொள்வதற்கு கல்வெட்டுகள் பெரும்பங்கு ஆற்றுகின்றன என்பதை யாவரும் அறிவர். தமிழர்களின் அரசியல், கிராம ஆட்சி. அரசிறை போன்ற வரிகள், நில அளவு; நில உரிமை, நீர்வளம், சமுக வாழ்க்கை, வாணிகம், கைத்தொழில், நாணயங்கள் அளவைகள் ஆகிய எல்லாத் துறைகளைப் பற்றியும் கல்வெட்டுகள் மூலம் போதிய அளவு நம்மால் பெற முடிகிறது.

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருச்செந்தூர் சுப்பிரமண்யர் கோயிலில் ஒரு கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.[1] இது பாண்டிய மன்னனுகிய முதல்வரகுணவர்மனின் காலத்தது இம்மன்னன் அரசு கட்டிலேறின காலம் கி. பி. 811 ஆகும், இக்கல்வெட்டு அம்மன்னனின் 13-ஆம் ஆண்டிற்கு ஒரு சில ஆண்டுகள் எதிராமாண்டு, ஐயாயிரத்தொன்றும் நாள் பொறிக்கப்பட்ட ஒன்ருகும். எனவே இது கி. பி. 825 அல்லது 830-ஆம் ஆண்டைச் சேர்ந்ததாகும். சுப்பிரமண்ய படாரருக்கு அரசன் வரகுணன் 1400 காசு கொடையளித்ததையும், அக்காசுகளை மன்னனின் அதிகாரிகளான இருப்பைக்குடி கிழவன், சாத்தம் பெருமாள். அளற்றூர் நாட்டுக்கோன் ஆகியோர் சில ஊராரிடத்தும், சபையாரிடத்தும் நகரத்தாரிடத்தும் அளித்து முதல் கெடாது அதிலிருந்து வரும் வட்டிக்கு இன்னின்ன பொருட்கள் இவ்வன விவ்வளவு சுப்பிரமண்யருக்கு இன்னின்ன காரணங்களுக்கு அளிக்க வேண்டும் என்பதையே இக்கல்வெட்டு குறிக்கிறது.

அரசன் அளித்த 1400 காசை எந்தெந்த ஊரார் கையில் எவ்வளவு எவ்வளவு அளித்தார்கள் என்பதைக் காண்போம். குடநாட்டைச் சேர்ந்த கொற்கை ஊரார் கையில் "முதல் கெடாமை பொலி ஊட்டுக் கொண்டு செலுத்துவதாக வைத்த நிறை குறையாப் பழங்காசு தொண்ணூற்ருரு, பொன் எட்டு". இதைப் போன்றே குடநாட்டு நல்லூரார் கையில் பழங்காசு நூற்றுப் பதினெட்டும் பொன் ஆறே காலும்; குடநாட்டு சாவியத்து ஊரார் கையில் பழங்காசு இருபத்து நான்கும் பொன் ஐந்தே காலும்; வழுதி வளநாட்டுப் பிரமதேயம் வரகுண மங்கலத்துச் சபையார் கையில் பழங்காசு நூற்றுப் பத்தும்; வழுதி வளநாட்டுப் பிரமதேயம் தியம்பகமங்கலம் இறைவாலி மங்கலத்துச் சபையார் கையில் பழங்காசு முப்பத்திரண்டும்; வழுதி வளநாட்டு கெங்கை மங்கலத்துப் படும் ஆலம்பட்டத்து ஊரார் கையில் பழங்காசு பதிளுறும்; வழுதி வள நாட்டு மானவீரபட்டி நத்து நகரத்தார் கையில் நூற்றிருபதும்; சிரிவல்லப நாட்டுப் பிரமதேயம் கட்டாறை மங்கலத்துச் சபையார் கையில் பழங்காசு தொண்ணூற்று நான்கும் பொன் ஐந்தும்; பராந்தக வளநாட்டுப் பிரமதேயம் பரைசு மங்கலத்துத் தென் சிழக்கு திண்ணிச் சபையார் கையில் பழங்காசு இருபத்தைஞ்சும்; பராந்தக வளநாட்டுப் பிரமதேயம் மாறமங்கலத்துச் சபையார் கையில் பழங்காசு நூற்று ஐம்பத்திரண்டரையும்; பராந்தக வளநாட்டுப் பிரமதேயம் தென்றக்......வ்லூடார்ச் சபையார் கையில் பழங்காசு அறுபதும், அமிதகுண வளநாட்டு பிரமதேயம் அவனிய சேகர மங்கலத்துச் சபையார் கையில் பழங்காசு அறுபதும் குடநாட்டுப் பிரமதேயம் புளியிடைச் சபையார் கையில்

1. தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி XIV No 16-A.
சுப்பிரமணிய படாரர் - திருச்செந்தூர் சுப்பிரமணிய சுவாமி.

பழங்காசு நூற்றிருபதும்; குடநாட்டுப் பிரமதேயம் கீரனூர்ச் சபையார் கையில் வைத்த பழங்காசு இருநூற்றுப் பதினொன்கும்; குட நாட்டுப் பிரமதேயம் சடங்கவிகுறிச்சிச் சபையார் கையில் வைத்த பழங்காசு தொண்ணூறும்; குட நாட்டுப் பிரமதேயம் கடுங்கோமங்கலத்துச் சபையார் கையில் வைத்த பழங்காசு பதினாறும் முதல் கெடாது வட்டியை ஈட்டுகின்ற பணமாக கொடுக்கப் பெற்றன.

"முதல் கெடாமை பொலி ஊட்டுக்கொண்டு செலுத்துவதாக வைத்த நிறைகுறையாப் பழங்காசு" என்ற சொற்றொடரில் எவ்வளவு கருத்துக்கள் பொதிந்துள்ளன என்பதைக் கவனிப்போம். 'முதல் கெடாமை' என்பதிலே கொடுக்கப்படுகின்ற முதல் குறையாமல் இருக்கவேண்டும் என்ற கண்டிப்பும்; பொலி ஊட்டுக்கொண்டு' என்ற சொற்றொடரிலே வட்டிக்கு விட்டு வருவாயைப்பெருக்க வேண்டும் என்ற கனிவும்: செலுத்துவதாக வைத்த' என்பதிலே 'செலுத்துவதாக ஒப்புக்கொண்ட ஒப்புதலும்; 'நிறைகுறையாப் பழங்காசு' என்பதிலே காசுகள் பழங்காசு என்ற பெயர் பெற்றன என்றும்; அவை எடை குறையாதவை, மிகவும் சரியானவை என்றும் அக்காலத்தில் காசுகளின் வேற்றுமை எடையைக் கொண்டே மதிப்பிடப் பெற்றன என்றும் தெரிய வருகின்றன.

காசுகள் வைப்பாக பெற்ற ஊர்களின் தன்மையைக் கவனிப்போம். குடநாட்டைச் சேர்ந்த கொற்கை, நல்லூர் சாவியம் ஆகியவை பிராமணர் அல்லாதார் வாழ்ந்த ஊர்களாகும். புளியிடை, கிரனூர், சடங்கவி குறிச்சி, கடுங்கோ மங்கலம் ஆகியவை பிராமணர்கள் வாழ்ந்த பிரமதேயங்களாகும். வழுதி வளநாட்டைச் சேர்ந்த கெங்கை மங்கலத்துப் படும் ஆலம் பட்டம் என்பது பிராமணர் அல்லாத மற்ற சமூகத்தார் வதிந்த ஊராகும். வரகுண மங்கலம், தியம்பகமங்கலம் ஆகியவை பிராமணர் இருந்த பிரமதேயங்களாகும். மான விரபட்டினம் என்பது வணிகர்கள் வாழ்ந்த நகர மாகும். சிரிவல்லப நாட்டைச் சேர்ந்த கட்டாறை மங்கலம் பராந்தக வளநாட்டு பரைசு மங்கலத்துத் தென்கிழக்கு திண்ணி, மாற மங்கலம், தென்றக்.........நல்லூர், அமிதகுண வளநாட்டு அவனிபசேகர மங்கலம் ஆகியவை அனைத்தும் பிராமணர்கள் வாழ்ந்த பிரமதேயங்களாகும்.

இதில் வழுதி வளநாட்டைச் சேர்ந்த "கெங்கை மங்கலத்துப் படும் ஆலம்பட்டத்து ஊரார்" என்பதிலிருந்து கெங்கைமங்கலம் என்ற பிராமணர்கள் வாழ்ந்த ஊரின் ஒரு பகுதியாகிய ஆலம்பட்டம் என்று தெரியவருகிறது. ஏனெனில் மங்கலம் என்று முடிகின்ற ஊர்கள் அனைத்திலுமே பிராமணர்கள்தான் வதிந்து வந்ததாகத் தெரிகிறது. இதிலிருந்து பிராமணர்களும், பிராமணரல்லாதாரும் சில ஊர்களில் ஒன்றாகவும் வசித்து வந்துள்ளனர் என்பதைப் புலப்படுத்துகிறது. அத்தோடு பிராமணர் அல்லாதார் "ஊர்' என்ற சபையை தனியே பெற்றிருந்தார் என்பதும் நோக்கத்தக்கது. அடுத்து "வழுதி வளநாட்டு மானவீரபட்டினம் நகரத்தார்'கள் அதாவது வணிகர்கள் வாழ்ந்த பகுதி என்று குறிப்பிட்டோம். பெரும்பாலும் வணிகர்கள் வாழ்ந்த பகுதி 'நகரம்' என்றும் 'புரம்' என்றும் அழைக்கப் பெற்றன. உதாரணமாக நகரத்தார் வாழ்ந்த பகுதியான மாமல்லபுரம், காஞ்சிபுரம், நந்திபுரமாகிய பழையாறை ஆகிய இடங்களைக் காணலாம். மேலும் பட்டினம் என்றாலும் அங்கும் வணிகர்கள் அதிகம் வாழ்ந்துள்ளனர் என்பதை காவிரிப்பூம்பட்டினம் நாகைபட்டினம், வீரப்பட்டினம் போன்ற ஊர்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

இப்பொழுது ஒவ்வொரு ஊராரும் திருச்செந்தூர் சுப்பிரமண்ய படாரருக்கு தாங்கள் பெற்றுக்கொண்ட வைப்புத் தொகையிலிருந்து வரும் வட்டியில் என்னென்ன அளிப்பதாக ஒத்துக்கொண்டார்கள் என்பதைக் கீழே காண்போம். அவற்றைக் காண்பதற்கு முன் அப்பொழுது பண்டமாற்று முறைதான் வழக்கத்திலிருந்தது என்பதை மனதில் நிலைநிறுத்திக் கொள்வது நலம். முதற்கண் கொற்கை ஊராரைக் காண்போம். கொற்கை சங்ககால பாண்டியர்கள் காலத்தில் சிறப்பு மிக்கத் துறைமுகமாக விளங்கியதல்லவா? அதனால்தான் அது

முதலிடத்தைப் பெற்றது போலும். கொற்கை ஊரார் கையில் கொடுத்தது பழங்காசு 96 பொன் 8. ஆண்டு ஒன்றுக்கு 1 காசுக்கு இரு கலம் நெல் வட்டியாக மொத்தம் 193 கலம் 9 குறுணி நெல் வட்டியாக வருகிறது. அதிலிருந்து 3 நாழி செல்லுக்கு 1 நாழி அரிசி என்ற விகிதத்தில் ஒரு நாளைக்கு ஒரு போதைக்கு 'செந்நெற்றிபடல் அரிசி' 4 நாழி ஆக நான்கு போதைக்கு 16 நாழி திரு அமுதுக்கு அளிக்க வேண்டும். அத்தோடல்லாமல் மார்கழி திருவாதிரை மாசிமகம், வைகாசி வியாகம் போன்ற நாட்களில் அளவை இரட்டித்து செலுத்தவேண்டும். "இப்பரிசு செலுத்தாதுகுத்துக்காற் படில் இத்தேவர்க்கேய் இருபத்தைஞ்சு காசு தண்டமும் பட்டுச் செலுத்தாது விட்ட முதலிரட்டியுங் குடுப்பது". இதன் பொருளாவது மேற்சொல்லியவாறு கொடையளிக்காது தடைப்படுமானால் சுப்பிரமண்யர்க்கே இருபத்தைஞ்சு காசு தண்டம் (அபராதம்) அளிப்பதோடு செலுத்தாது விட்ட திருவமுதின் அளவை இரண்டு மடங்காகவும் செலுத்த வேண்டும் என்று கூறுகிறது. மேலே கூறியவற்றில் 'அரிசி' என்று மட்டும் கூறாது 'செந்நெற்றிட்டல் அரிசி' (செம்மையான நெல்லை நன்கு தீட்டிய அரிசி) என்று கூறுவது கவனிக்கத் தக்கது

நல்லூர் ஊரார் பெற்றுக்கொண்ட தொகை பழங்காசு 118 பொன் 6¼. ஆண்டு ஒன்றுக்கு வட்டியாக வரும் நெல் 'நிறைமதி நாராயத்தால்' 337 கலம் 3 குறுணி 4 நாழி 1 உரி நெல்லாகும். இங்கு 'நிறைமதி நாராயம்' என்பது அளவை கருவியின் பெயராகும். சோழப் பேரரசன் முதலாம் இராசராசன் காலத்தில் "ஆடல்வல்லாள்" என்ற மரக்கால் அளவை கருவியாக இருந்ததென்பதை அம்மன்னனின் கல்வெட்டுகள் மூலம் புலனாகிறது. 'நிறைமதி நாராயம்' என்பதற்கு முழுமதியும் மீனும் என்று பொருள் கொள்ளலாம். நாராயம் என்ற சொல் நாராயணம் என்ற சொல்லாக இருக்கக்கூடும். சந்திரன் பாண்டியர்களின் குலம். மீன் அவர்களின் இலச்சினை என்பதும் யாவரும் அறிந்ததே. எனவே சந்திரனையும் மீனையும் இணைத்து அவர்களின் அளவைக் கருவிக்குப பெயராகச் சூட்டியிருக்கலாம். இனி நல்லூரார் கொடுக்க வேண்டியதென்னவென்றால் 20 நாழி நெல்லுக்கு 1 நாழி நெய் என்ற விலையில் திருவமுது நிவேதிக்க பசுவின் நீறுநெய் ஒரு நாளைக்கு ஒரு போதைக்கு உழக்காகவும், கறி துயிக்கவும் பொரிக்கவும், ஒரு போதைக்கு ஆழாக்காகவும் நான்கு போதைக்கு நறுநெய் 1 நாழி 1 உரி. 2 நாழி நெல்லுக்கு 1 நாழி தயிர் என்ற விலையில் திருவமுது நிவேதிக்க தயிரமுது ஒரு நாளைக்கு ஒரு போதைக்கு 1 நாழியாகவும் கட்டுக்குந் தயிர் அமுது ஒரு உரியாக நான்கு போதைக்குப் பசுவின் தோய் தயிர் 6 நாழி. 1 காசுக்கு நிறைமதி நாராயத்தாற் 10 கலம் விலை என்ற விகிதத்திலும்:

1 காசுக்கு 1000 வாழைப்பழம் என்ற விகிதத்திலும்;

1 காசுக்கு 7 துலாம் 65 பலம் சர்க்கரை என்ற விகிதத்திலும்;

1 காசுக்கு 20 துலாம் கறி அமுது என்ற விகிதத்திலும்

1 காசுக்கு 60 நாழி காயம் என்ற விகிதத்திலும் திருவமுது நிவேதிக்க ஒரு நாளைக்கு ஒரு போதைக்கு கரு வாழைப்பழம் 4 ஆக நான்கு போதைக்கு 16 ஆகவும்; சர்க்கரை ஒரு போதைக்கு 1 பலம் ஆக நான்கு போதைக்கு 4 பலம் ஆகவும்; கறி அமுது என்றால் என்னவென்று கல்வெட்டே கூறுகிறது. காய்க்கறி ஒன்று புளிங்கறி ஒன்று புழுக்குக்கறி ஒன்று பொரிக்கறி ஒன்று ஆக மொத்தம் நான்கு. அவை ஒருபாதைக்கு 10 பலம் என்ற விகிதத்தில் நான்கு போதைக்கு கறி அமுது 40 பலம் ஆகவும்; காணம் (அதாவது மிளகு, மஞ்சள், சீரகம், சிறுகடுகம், கொத்தம்பரி ஆகிய ஐந்து) ஒரு போதைக்கு 3 செவிடாக நான்கு போதைக்கு 3 செவிடாக நான்கு போதைக்கு 1 உழக்கு 2 செவிடு காயம் ஆகவும் அளிக்க வேண்டும். முன்னர் கூறிய முக்கிய நாட்களில் இவர்களும், இரட்டித்து செலுத்த வேண்டும். செய்யாது தடைப்பட்டால் 50 காசு அபராதமும் செலுத்தாது விட்ட அளவு இரட்டித்தும் செலுத்த வேண்டும்.

சாலியத்து ஊரார் பெற்றுக்கொண்ட பழங்காசு 24 பொன் 5¾. பொலி (வட்டி)யாக வந்த

நெல் 49 கலம் 2 குறுணி 1 உரி. இருநாழி நெல்லுக்கு 1 நாழி பயறு என்ற விகிதத்திலும் 1 நாழி 1 உழக்குப் பயறு என்ற விகிதத்திலும் கு[illegible]மாயத்துக்கு ஒரு போதைக்கு 1 உரி ஆக நான்கு போதைக்கு சிறுபயற்றுப்பருப்பு 2 நாழி. இதிலிருந்து 1 நாழிக்கு 2 உரி என்று தெரிய வருகிறது. பத்து கலம் நெல் 1 காசு என்ற விகிதத்திலும், 1 காசுக்கு 1220 பற்று வெற்றிலை என்ற விகிதத்திலும்; 1 காசுக்கு 10100 அடைக்காய் (பாக்கு) என்ற விகிதத்திலும் ஒரு போதைக்கு வெற்றிலை 3 அடுக்கு ஆக நான்கு போதைக்கு 3 பற்று இதிலிருந்து 1 பற்றுக்கு 4 அடுக்கு வெற்றிலை என்று புலனாகிறது 1 போதைக்கு பாக்கு 14 ஆக நான்கு 56 பாக்கு அளிக்கவேண்டும். இவர்களும் விழா நாட்களில் இரட்டித்து செலுத்தியும் செலுத்தாதுவிட்டால் ஐந்து காசு அபராதம் செலுத்தவும் ஒத்துக்கொண்டுள்ளார்கள்.

அடுத்து வர குணமங்கலத்துச் சபையார் பெற்றுக்கொண்டது பழங்காசு 110. வட்டியாக வந்த நெல் 220 கலம். 20 நாழி நெல்லுக்கு 1 நாழி நெய் ஆக திருநந்தாவிளக்கு ஒன்றிற்கு நியதி (ஒவ்வொரு நாளும்) நெய் 1 உரியாக திருநந்தாவிளக்கு ஐந்தினுக்குப் பசுவின் நறுநெய் 2 நாழி 1 உரியும் அந்தியம் போது திருவமுது செய்தால் தீபமாலை, காட்டப் பசுவின் நறுநெய் நியதி 1 உழக்கும் அளிக்க வேண்டும். இவர்கள் விழாக்காலங்களில் இரட்டித்து செலுத்தவேண்டும் என்று கூறப்படவில்லை. செலுத்துவதில் தடை பட்டால் 12½ காசு தண்டம் பட்டு செலுத்தாது விட்டதை இரட்டித்து அளிக்க வேண்டும்.

திரயம்பக மங்கலத்து சபையார் கையில் கொடுத்தது பழங்காசு 32. வட்டியாக வந்த நெல் 64 கலம். 2 நாழி நெல்லுக்கு 1 நாழி பால் என திருமஞ்சனம் ஆடி அருள பசுவின் பால் நியதி 4 நாழியும்; 2 நாழி நெல்லுக்கு 1 நாழி தயிர் என திருமஞ்சனம் ஆடி அருள பசுவின் தயிர் நியதி 4 நாழியும் செலுத்தல் வேண்டும். இவர்களும் விழா நாட்களில் இரட்டித்து செலுத்த வேண்டியதில்லை போலும். செலுத்தாது விடில் ஐந்து காசு தண்டம்பட்டு செலுத்தாது விட்டதை இரட்டித்து செலுத்தல் வேண்டும்.

கெங்கைமங்கலத்துப் படும் ஆலம்பட்டத்து ஊரார் கையில் வைப்புத்தொகை வைத்தது பழங்காசு 16 பொலியாக வந்த நெல் 32 கலம். 1 நாழி நெல்லுக்கு 1 இளநீர் என்ற விகிதத்திலும்; 1 நாழி நெல்லுக்கு 4 இளநீர் என்ற விகிதத்திலும், திருமஞ்சனம் ஆடி அருள நியதி இளநீர் வழுவை உட்பட 2 நாழி 1 உழக்குக்கு எட்டு இளநீரும் செலுத்தவேண்டும். இப்பரிசு செலுத்தாது விடில் 5 காசு தண்டம்பட்டு செலுத்தாது விட்டதை இரட்டித்து செலுத்தவேண்டும்.

மானவீரபட்டிநத்து நகரத்தார் கையில் வைப்புத் தொகை வைத்தது பழங்காசு 120. பொலியாக ஆண்டுக்கு வந்த நெல் 240 கலம், இதிலிருந்து பத்து கலம் நெல் 1 காசு என்ற விகிதத்திலும், 1 காசுக்கு 150 நாழி நறும்பூ என்ற விகிதத்திலும், ஸ்ரீபள்ளித்தாமத்துக்கு (மாலைக்கு) நியதி 10 நாழி நறும்பூ அளக்க வேண்டும். செலுத்தாது தடைப்படில் 25 காசு தண்டம் பட்டு செலுத்தாது விட்டதை இரட்டித்து செலுத்தல் வேண்டும்.

காட்டாறை மங்கலத்துச் சபையார் கையில் வைப்புத் தொகை வைத்தது பழங்காசு 94 பொன் 5. பொலியாக வந்த நெல் 189 கலம். 1 காசுக்கு பொலி 2 கலம் எனில் 94 காசுக்கும் 188 கலம் ஆகும். மீதமுள்ள 1 கலம் 5 பொன்னுக்கு வந்துள்ளது. 5 பொன்னுக்கு 1 கலம் எனில் 10 பொன்னுக்கு 2 கலம் ஆகிறது. எனவே 10 பொன்னும் 1 காசும் சமம் என்பது இதிலிருந்து தெரிகிறது. அவர்கள் பெற்ற பணத்திலிருந்து காவியத்து ஊராருக்குக் குறிப்பிட்ட விகிதத்திலே சிறுபயற்றுப்பொரி 1 உரிக்கு சிறுபயறு 1 உரி 1 ஆழாக்கும், பத்து கலம் நெல்லுக்கு 1 காசு என்ற விகிதத்திலும்; 11 நாழி 1 உழக்கு மஞ்சளுக்கு 1 சானம் என்ற விகிதத்திலும் திருமேனி பூசி அருள "மேற்றேல் சிறைத்த மஞ்சள்" நியதி 3 உழக்கும்; ஒபியாடும் பாவாடையும் சேர்ந்த ஒன்று (ஒரு ஜோடி) 1 காசு

என்ற முறையில் மூன்று திங்களுக்கு ஒரு முறை நாலணையாக ஓராண்டுக்கு நான்கு முறைக்கு 16 அணையும் கொடுக்கவேண்டும். இப்பரிசு செலுத்தாது தடைபடிற் 25 காசு தண்டம் பட்டு செலுத்தாது விட்டது இரட்டித்து செலுத்த வேண்டும்.

பரைசு மங்கலத்துத் தென் கிழக்கு திண்ணைச் சபையாரிடம் தந்த பழங்காசு 25. ஆண்டுக்குப் பொலியாக வந்த நெல் 50 கலம். அதைக் கொண்டு அவர்கள் 3 நாழி நெல்லுக்கு 1 நாழி நெல் என்ற விகிதத்தில் திருப்லிக்கு நியதி ஒரு போதைக்கு செந்நெற்றிட்டல் அரிசி 1 நாழி ஆக இரண்டு போதைக்கு 2 நாழி அரிசியும், 10 கலம் நெல் 1 காசு என்ற விகிதத்தில் புடவை இணை (ஜோடி) 2½ காணம் என்ற விலையில் "ஸ்ரீமடைப்பள்ளிக்கட்டு மேற்கட்டிக்கு" அறு திங்களுக்கு ஒரு முறை ஈரணையாக இரண்டு முறை ஓராண்டுக்குப் புடவை ... அணையும்; புடவை இணை 2 காணம் என்ற விலையில் கல் புறைக்கு முத்திங்களுக்கு ஒரு முறை 2 அணையாக ஓராண்டுக்கு நான்கு முறைக்குப் புடவை 8 அணையும் செலுத்த வேண்டும் செலுத்தாது தடைப்படிற் 5 காசு தண்டம் பட்டு செலுத்தாது விட்ட முதல் இரட்டியும் கொடுக்க வேண்டும். இதில் கூறப்படும் "காணம்" என்பதும் தமிழகத்தில் வழங்கிய ஒரு காசு வகை. இக்காசு சங்க காலத்தில் மிகவும் புழக்கத்தில் என்பது சங்க இலக்கியங்களிலிருந்து தெரிய வருகிறது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்க்கு நூறாயிரங்காணமும், செல்லக்கடுங்கோ வாழியாதன் கபிலர்க்கு நூறாயிரங்காணமும், தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை அரிசில் கிழார்க்கு ஒன்பது நூறாயிரங் காணமும், இளஞ்சேரல் இரும்பொறை பெருங்குன்றூர் கிழார்க்கு முப்பத்திராயிரம் காணமும் பரிசிலாக வழங்கி பாராட்டினர் என்று பதிற்றுப் பத்திலுள்ள பதிகங்கள் குறிப்பிடுகின்றன. அத்தோடு கி. பி. எட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த சைவ சமயக் குரவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் கச்சித் திருவேகாம்பத் திருப்பதிகத்தில் 'கையிலொன்றுங் காணமில்லைக் கழலடி தொழு துய்யினல்லால்' என்ற அடியில் காணம் என்னும் நாணயத்தைக் கூறியிருப்பது அறியத்தக்கது.

மாறமங்கலத்துச் சபையார் கையில் வைத்த பழங்காசு 152½, பொலி நெல்லாக ஆண்டுக்கு வந்தது 305 கலம். அதிலிருந்து ஸ்ரீ தூபம் சிராசியினுக்கு வேண்டும் உறுப்பு அதிற்பட்ட கற்பூரமும் தேனும் ½ காணம் பெறும் அளவில் நியதியும். "ஸ்ரீ கற்பக்கிர அகத்துக்கட்டு மேற்கட்டிக்கு" வெண்கூறை இணை 7½ காணம் என்ற விலையில் அறுதிங்களுக்கு ஒரு முறை நாலணையாக ஓராண்டில் இரண்டு முறைக்கு வெண்கூறை 8 அணையும் பசுவின் தொய் தயிர் 1 நாழியும், "தட்டளி (ஒரு வகை வாத்தியம்) கொட்டிகளுக்கு" கொற்று நெல் (உணவுக்காகத் தரப்படும் நெல்) திங்கள் ஒன்றுக்கு 4 கலம் 14 குறுணி 1 நாழி 1 உரி ஆக "ஓராண்டு பன்னிரண்டு திங்களுக்கு" நெல் ஐம்பத்தேழு கலமும் (இவ்விடத்தில் கல்வெட்டில் சிதைவு ஏற்பட்டுள்ளது) கொடுக்க வேண்டும்.

தென்றக்கு......ல்லூர்ச் சபையார் கையில் வைத்த பழங்காசு 60. ஆண்டுக்குப் பொலியாக வந்த நெல் 120 கலம். அதிலிருந்து "ஸ்ரீ உடையாடை" இணை 3 காசு என்ற விலையில் முத்திங்களுக்கு ஒரு முறை ஓரணையாக ஓராண்டில் நான்கு முறைக்கு 4 அணை செலுத்த வேண்டும். செலுத்துவதில் தடைபடிற் 12½ காசு தண்டன் பட்டு செலுத்தாது விட்ட முதலிரட்டி கொடுக்க வேண்டும்.

அவனிப சேகரமங்கலத்துச் சபையார் கையில் வைத்த பழங்காசு 60. ஆண்டு ஒன்றுக்குப் பொலியாக வந்த நெல் 120 கலம். அதிலிருந்து "ஸ்ரீ உடையாடை" இணை 3 காசு என்ற விலையில் முத்திங்களுக்கு ஒரு முறை ஓரணையாக ஓராண்டு நான்கு முறைக்கு 4 அணை, செலுத்தி வேண்டும். செலுத்தாது விடிற் 12½ காசு தண்டம் பட்டு செலுத்தாத முதலிரட்டி கொடுக்க வேண்டும்.

புலியிடைச் சபையார் கையில் வைத்தபழங்காசு 120. ஆண்டு ஒன்றுக்கு பொலியாக வந்த நெல் 240 கலம். அதிலிருந்து "ஸ்ரீ நடையாடை" இணை 3 காசு பெற்றன. முத்திங்களுக்கு ஒரு முறை ஈரணையாக ஓராண்டு நான்கு முறைக்கு

8 அனை செலுத்த வேண்டும். செலுத்தாது விடிற் 25 காசு தண்டம் பட்டு செலுத்தாத முதலிரட்டி கொடுக்கவேண்டும்.

கீர்னூர்ச் சபையார் கையில் வைத்தது பழங் காசு 214. ஆண்டு ஒன்றுக்குப் பொலியாக வந்த நெல் 428 கலம். இதிலிருந்து 20 நாழி நெல்லுக்கு 1 நாழி நெய் என்ற விகிதத்தில் திருமஞ்சனம் ஆடி அருளப் பசுவின் நறுநெய் நியதி 4 நாழியும்; 1 காசுக்கு 1 துலாம் சந்தனம் என்ற விலையில் திருமேனிப் பூசும் சந்தனக் குழம்புச் சந்தனம் நியதி 3 பலம் செலுத்தவேண்டும். இப்பரிசு செலுத்தாது தடைபடிற் 50 காசு தண்டம்பட்டு செலுத்தாத முதலிரட்டிக் கொடுக்கவேண்டும்.

சடங்களிகுறிச்சி சபையார் கையில் வைத்த பழங்காசு 90. ஆண்டு ஒன்றுக்குப் பொலியாக வந்த நெல் 180 கலம். இதிலிருந்து 15 கழஞ்சு கற்பூரம் 1 காசு என்ற விலையில் 7½ காணத்துக்கு திருமேனி பூசும் திருச்சந்தனத்தோடு கூட்டி அரைக்கு கற்பூரம் நியதி செலுத்தவேண்டும். செலுத்தாது தடைப்படிற் 25 காசு தண்டம் பட்டு செலுத்தாது விட்ட முதலிரட்டி கொடுக்க வேண்டும்.

கடுங்கோ மங்கலத்துச் சபையார் கையில் வைத்தது பழங்காசு 16. ஆண்டுக்குப் பொலியாக வந்த நெல் 32 கலம். இந்நெல்லிருந்து 1 நாழி நெல்லுக்கு 2 இளநீர் என்ற விகிதத்திலும், 1 நாழி இளநீருக்கு 4 இளநீர் என்ற விகிதத்திலும் நியதி திருமஞ்சனம் ஆடி அருள 2 நாழி இளநீருக்கு 8 இளநீர் கொடுக்க வேண்டும். கொடுக்காது தடைப்படிற் 5 காசு தண்டம் பட்டு செலுத்தாது விட்ட முதல் இரட்டியும் கொடுக்கவேண்டும்.

திருச்செந்தூர் சுப்பிரமண்ய படாரருக்கு ஒரு நாளைக்கு என்னென்ன, எந்தெந்த அளவு செலுத்தப்பட்டன என்பதைக் கீழே காணும் பட்டியலில் இருந்து அறிந்து கொள்ளலாம்,

| | | |
|---|---|---|
| 1) | திருவமுதுக்கு செந்நெற்றிட்டலரிசி | 16 நாழி |
| 2) | திருவமுதுக்குப் பசுவின் நறுநெய் | 1 நாழி 1 உரி |
| 3) | திருவமுது நிவேதிக்க பசுவின் தொய் தயிர் | 6 நாழி |
| 4) | திருவமுது நிவேதிக்க கருவாழைப்பழம் | 16 |
| 5) | ,, ,, சர்க்கரை | 4 பலம் |
| 6) | ,, ,, கறி அமுது | 40 பலம் |
| 7) | ,, ,, காயம் | 1 உழக்கு |
| 8) | கும்மாயத்துக்கு சிறுபயற்றுப்பருப்பு | 2 நாழி |
| 9) | வெற்றிலை அமுது | 3 பற்று |
| 10) | அடைக்காய் அமுது | 56 பாக்கு |
| 11) | 5 திருநொந்தா விளக்குக்கு நறுநெய் | 2 நாழி 1 உரி |
| 12) | அந்தியம்போது திருவமுது செய்தால். தீபமாலை காட்ட நெய் | 1 உழக்கு |
| 13) | திருமஞ்சனம் ஆடி அருள பசுவின் பால் | 8 நாழி |
| 14) | ,, ,, ,, பசுவின் தயிர் | 4 நாழி |
| 15) | ,, ,, ,, இளநீர்வழுவை உட்பட | 4 நாழி 1 உழக்கு |
| 16) | ஸ்ரீ பள்ளித்தாமத்துக்கு நறும்பூ | 10 நாழி |
| 17) | சிறுபயற்றுப்பொரி | 1 உரி |
| 18) | திருமேனி பூசி அருள மேற்றேல் சிறந்த மஞ்சள் | 3 உழக்கு |
| 19) | திருப்பலிக்கு செந்நெற்றிட்டலரிசி | 2 நாழி |
| 20) | ஸ்ரீ தூபம் சிதாரி | ½ காணத்துக்கு |
| 21) | திருமேனிபூசும் சந்தனம் | 3 பலம் |
| 22) | திருமேனிபூசும் சந்தனத்தோடு கூட்டி அறைக்கும் கற்பூரம் | 7½ காணத்துக்கு |

சில பொருள்கள் ஒரு ஆண்டுக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. அவைகளைக் கீழே காண்போம்.

| | | |
|---|---|---|
| 1) | ஓவியலும் பாவாடையும் | 16 அணை |
| 2) | ஸ்ரீ மடைப்பள்ளிக்கட்டு மேற்கட்டுக்குப் புடவை | 4 அணை |
| 3) | கல்புறைக்கு | 8 அணை |
| 4) | ஸ்ரீகற்பக்கிர அகத்துக்கட்டு மேற்கட்டிக்கு வெண்கூறை | 8 அணை |
| 5) | ஸ்ரீ உடையாடை | 16 அணை |
| 6) | தட்டளி கொட்டிகளுக்குக் கொற்று நெல் | 57 கலம் |

அக்காலத்தில் பொருள்கள் பண்டமாற்றில் விற்கப்பட்டன. என்பதை மேலே கண்டோம். அதில் நெல்லைத்தான் அடிப்படையாகக் கொண்டிருந்தார்கள். இப்பொழுது அவை எந்தெந்த விலையில் விற்கப்பட்டன என்பதைக் கீழே காண்போம்.

| | |
|---|---|
| 3 நாழி நெல்லுக்கு | 1 நாழி அரிசி |
| 20 நாழி நெல்லுக்கு | 1 நாழி நெய் |
| 2 நாழி நெல்லுக்கு | 1 நாழி தயிர் |
| 10 கலம் நெல்லுக்கு | 1 காசு |
| 2 நாழி நெல்லுக்கு | 1 நாழிப்பயறு |
| 2 நாழி நெல்லுக்கு | 1 நாழிப்பால் |
| 1 நாழி நெல்லுக்கு | 1 சிலநேசம் 2 இளநீர் |

சில பொருள்கள், 10 கலம் நெல் 1 காசுக்கு என்று மாற்றி பின்னர் 1 காசுக்கு இவ்வளவு என்று விற்கப்பெற்றன.

| | |
|---|---|
| 1 காசுக்கு | 1000 வாழைப்பழம் |
| 1 காசுக்கு | 7 துலாம் 65 பலம் சர்க்கரை |
| 1 காசுக்கு | 65 நாழி காயம் |
| 1 காசுக்கு | 1200 பற்று வெற்றிலை |
| 1 காசுக்கு | 10100 அடைக்காய் (பாக்கு) |
| 1 காசுக்கு | 150 நாழி நறும்பூ |
| 1 காசுக்கு | 1 துலாச் சந்தனம் |
| 1 காசுக்கு | 15 கழஞ்சி கற்பூரம் |

காணம் என்ற நாணயம் ஒன்றும் வழக்கில் இருந்துள்ளது. அது காசுக்கு குறைந்த மதிப்புடையதாக இருந்திருக்கிறது என்பது ஊகிக்க முடிகிறது. ஆனால் அதன் உண்மை மதிப்பு எவ்வளவு என்பது அறிந்து கொள்ள முடியவில்லை சிலபொருள்கள் 1 காணத்துக்கு இவ்வளவு என்று கூறப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| 1 காணம் | 11 நாழி 1 உழக்கு மஞ்சள் |

துணிகள் பல விலையில் அதன் தரத்திற் கேற்ப விற்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் சில இங்கு கூறப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| 1 அணை ஒலியலும் பாவாடையும் | 1 காசு |
| 1 புடவை இணை | $2\frac{1}{2}$ காணம் |
| புடவை இணை | 2 காணம் |
| வெண்கூடை இணை | $7\frac{1}{2}$ காணம் |
| ஸ்ரீ உடையாடை இணை | 3 காசு |

இக்கல்வெட்டிலிருந்து தெரிந்து கொள்ளக்கூடிய அளவைகள்.

1 காசுக்கு — 10 பொன்
1 நாழிக்கு — 2 உரி
1 உழக்கு — 10 செலிடு
1 பற்று — 4 அடுக்கு செற்றிலை

இக்கல்வெட்டில் காணப்படும் நாட்டுப் பிரிவுகள்.

1) குடநாட்டு
   1) கொற்கை
   2) நல்லூர்
   3) சாவியம்
   4) புளியிடை
   5) கீரனூர்
   5) சடங்கலி குறிச்சி
   7) கடுங்கோ மங்கலம்

2) வழுதி வளநாட்டு
   1) ரெகுண மங்கலம்
   2) தியம்பக மங்கலம் இரணவாலி மங்கலம்
   3) கெங்கை மங்கலத்துப்படும் ஆலம்பட்டம்
   4) மானவீரபட்டினம்

3) சிரிவல்லப வளநாட்டு
   1) கட்டாறை மங்கலம்

4) பராந்தக வளநாட்டு
   1) பரைசு மங்கலத்துத் தென்கிழக்கு திண்ணி
   2) மாறமங்கலம்
   3) தென்றக்.........ல்லூர்

5) அமிதகுண வளநாட்டு
   1) அவனிப சேகர மங்கலம்

மேலே காணப்படுவனவற்றில் ''குடநாடு'' என்றும், ''வழுதி'' வளநாடு என்றும் வேறு பிரிவுகளைக் குறிப்பன போன்று வந்துள்ள போதிலும் இரண்டும் நாடு அல்லது கூற்றம் என்ற பிரிவைத்தான் குறிப்பாக ஆராய்ச்சி யாளர்கள் கருதுகிறார்கள். ஆனால் இந்த பிரிவுகள் பிற்காலத்தில் அரசோச்சிய சோழப் பேரரசன் இராசராசனுக்குத் தூண்டு கோலாக இருந்து மண்டலம், வளநாடு, நாடு அல்லது கூற்றம், நகரம், ஊர் என்ற பிரிப்பதற்கு அவனுக்கு வழிவகுத்தன என்பது ஆராய்ச்சியாளர்களின் முடிவு.

-----

# சோழர் காலத்தில் வரி எதிர்ப்பு இயக்கம்.

மே. து. ராசகுமார்.

பிற்காலச் சோழர் காலத்திய வரிகளைப் பற்றித் தெரிவிக்கும் பல கல்வெட்டுக்கள் கிடைத்திருப்பதும் வரிகளைச் செலுத்த இயலாத மக்களின் நிலையினைக் கூறும் பல கல்வெட்டுகள் காணப்பெறுவதும் ஆய்வுக்கு உறுதுணையாகின்றன.

ஊர், சபை, நகரம் போன்ற உள்ளாட்சி அமைப்புகள் மண்டலங்களுடைய அதிகாரிகள். அரசனின் நேரடி ஆணை ஆகிய பல்வேறு நிர்வாக அமைப்புகளின் வாயிலாக வரிகள் விதிக்கப்பட்டன.

வேளாண்மை பிற்காலச் சோழர் காலத்தில் பெரும்பான்மை மக்களின் தொழிலாக இருந்து வந்தது. 'தேவதானம்' என்ற பெயரில் கோயில்களுக்கும், 'பிரம்மதேய'மாகப் பிராமணர்களுக்கும், 'வெள்ளான் வகை'யாக நிலவுடைமையாளர்களுக்கும் 'ஜீவித'மாக அதிகாரிகள், நடனமகளிர், படைவீரர் ஆகியோருக்கும் நிலங்கள் உரியதாக இருந்தன.

தேவதானமும்[1] பிரம்மதேயமும்[2] வரியில்லாத நிலங்களாக இருந்தன. சில இடங்களில் ஜீவித நிலத்துக்கும்[3] தனிப்பட்ட நிலவுடைமையாளர்களுக்கும்[4] உரிய நிலங்களுக்கும் வரி விலக்குத் தரப்பட்டிருந்தன. மேலும் கோயில் நிவந்தங்களென விளக்கு எரிக்க எண்ணெய், நெய் முதலானவற்றைத் தருவதற்கு ஒதுக்கப்பட்ட நிலம்[5] ஆண்டார்களைக் காக்க ஒதுக்கப்பட்ட நிலம்[6] பிராமணர்களுக்குச் சோறிடுவதற்குத் தரப்பட்ட நிலம்[7] ஆகியனவும் கோயிலோடு தொடர்புடைய பல்வேறு நிவந்தங்களுக்கு ஒதுக்கப்பட்ட நிலங்களும் இறையிலி நிலங்களாக அமைந்தன. சிலவகை நிலங்களுக்கு 'இறைகாவல்', 'இறைதிரவியம்' என்ற பெயரில் குறிப்பிட்ட அளவு வரியை முன்வைப்பாகப் பெற்றுக் கொண்டு அந்த நிலங்களை 'இறையிலி' நிலங்களாக மாற்றி விடுவதும் உண்டு[8].

இத்தகைய வரி விலக்குகளால் அரசுக்குக் கிடைக்க வேண்டிய வரி குறைந்தது.[9] மேலும் 'ஊர்கீழ் இறையிலி' என்ற அமைப்பில் சபை சில நிலங்களை இறையிலியாக மாற்றுவதும் உண்டு. கிராமம் அல்லது ஊர் செலுத்த வேண்டிய வரிகள் மொத்தமாக இவ்வளவு என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கும். இதனைக் கிராமத்தில் உள்ளவர்கள் அவர்களுடைய நிலத்துக்கு ஏற்பப் பிரித்துக் கொள்வார்கள். ஊர் கீழ் இறையிலியினால் ஏதாவது கோயில் நிலம் வரியிலிருந்து விலக்கப்பட்டால் இந்த வரிக் குறைப்பைக் கிராமத்தில் உள்ள மற்றவர்கள் பகுத்துக் கொண்டு செலுத்தியாக வேண்டும்.[10] இதனைச் 'சபா விநியோகம்' என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இதனால் வரிச்சுமையைப் பெரும்பாலும் எளிய மக்களே ஏற்கவேண்டியதாயிற்று. உழைக்கும் மக்களே வரிகளைச் சுமக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டனர்.

இந்த வரிகளுடன் கூடுதல் வரிகளும் (Cesses) 'தண்டம்' எனப்படும் அபராத வரிகளும் (Penalty) 'மன்றுபாடு' எனப்படும் அபராதக் கட்டணமும் (Fine) 'இரவு' வரியாக வரியின் அளவில் 20%வரை மேல் வரியும் விதிக்கப்பட்டிருப்பதைக் கல்வெட்டுகள் காட்டுகின்றன.

மன்னனது நிர்வாகச் செலவுகள் மட்டுமின்றி அடிக்கடி அண்டை நாடுகளுடன் போர்களுக்கும் கோயில்கள் அமைப்பதற்கும் வரிகள் போடப்பட்டன. மன்னனது பிறந்த நாள் விழாக்கொண்டாட்டங்களுக்கும் வழிபாடுகளுக்கும் சிலவகை வரிகளைத் திருவெண்காடுக் கோயி

லுக்குக் கொடுத்துச் செலவு செய்ததை வீர ராசேந்திரன் கல்வெட்டுக் கூறுகிறது.[11] ஊர்க் கழஞ்சு, குமரக்கச்சாணம், மீன்பாட்டம், ஆற்றுப்பாட்டம், தட்டார்ப்பாட்டம், தறிப் புடவை, தசவந்தம், வேலிக்காசு, சேவகக்காசு, வலங்கை-இடங்கை மகன்மை, திங்கள் மோசம், பண்மைக்கும் பண்டவெட்டிக்கும் தலைக்குப் பத்துக்காசு ஆகிய கீழிறைப்பாட்டம் எனப்படும் சிறு வரிகள் மன்னனுடைய பிறந்தநாளுக்காகச் செலவிடப்பட்டன. வீரராசேந்திரன் காலத்திய மற்றொரு கல்வெட்டு அச்சரப்பாக்கம் கோயிலுக்கு மன்னனுடைய பிறந்த நாள் விழாவுக்காக அந்தராயம், குடிமை, கடமை ஆகிய வரிகள் தரப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகிறது [12] மக்களுக்கு பணிபுரியப் பெறப்படுகின்ற அந்தராயம், குடிமை, கடமை போன்ற வரிகளும் விழாக்களுக்குச் செலவு செய்யப்பட்டன.

ஈரோட்டில் காணப்படும் கி. பி. 922-ஆம் ஆண்டுக கல்வெட்டு ஒன்று கோயில் பணிகளுக்குக் கூடுதல் வரி (cess) விதித்ததைக் கூறுகிறது.[13] இதன்படி ஒவ்வொரு குடும்பமும் அரைப் பணமும் திருமணத்தின்போது $\frac{1}{8}$ பணமும் பிணம் எரிப்பதற்கு ஒரு மஞ்சாடி, ஒரு குன்றி பொன்னும் தரவேண்டும். முதலாம் ராசராசன் ஆட்சிக் காலத்தில் கோயில் பணிகளுக்கு நூறு காசு கூடுதல் வரி விதித்ததைத் தலைச்செங்காடுக் கல்வெட்டு உரைக்கிறது.[14] இது போன்ற கோயிலின் பல்வேறு பணிகளுக்கெனக் கூடுதல் வரிகள் பெறப்பட்ட செய்தியினைப் பல மன்னர்களது ஆட்சிக் காலத்தில் வெட்டப்பட்ட பல கல்வெட்டுகள் விரிந்துக் கூறுகின்றன.[15] இதன்றிக் கோயிலிலிருந்து பெற்ற கடனுக்கு வட்டி செலுத்த சபை வரி வாங்கியதையும் காண்கின்றோம்.[16]

புராந்தக சோழன் தனது 38-ஆம் ஆட்சி ஆண்டில் பாண்டிய நாட்டுடன் போரில் ஈடுபட்டிருந்தபோது மூவாயிரம் கழஞ்சு பொன் தண்ட வரி விதித்தான்.[17] இதுபோன்று வேங்கி நாட்டுடன் போரில் ஈடுபட்டிருந்த வீர ராசேந்திரன் ஒரு வேலி நிலத்திற்கு ஒரு கழஞ்சு பொன் என்ற முறையில் கூடுதல் வரி வாங்கிய செய்தியை ஆலங்குடிக் கல்வெட்டு எடுத்துக் காட்டுகிறது.[18]

நந்திபுரத்தில் முன்பு பெறப்பட்டதைப் போலவே மன்றுபாடும் பிற வரிகளும் பெறப்பட வேண்டுமென்று பழுவேட்டரையன் கண்டன் மறவன் சபைக்குப் பிறப்பித்த ஆணையினைச் சுந்தர சோழன் காலத்திய கல்வெட்டு காட்டுகிறது.[19] உத்தம சோழன் காலத்தில் புதுப்பாக்கத்துச் சபையார் கோயிலுக்கு ஆயிரம் கலம் நெல் புரவு வரியாகவும் (நில வரி) 187 கலம் நெல்லும் 26 கழஞ்சு அரை மஞ்சாடி பொன்னும் இரவு வரியாகவும் கொடுத்து வந்தார்கள்.[20]

சில வேடிக்கையான வரிகளும் அன்று இருந்திருக்கின்றன. மீன் பிடிப்பவர்களுக்கு 'மீன்பாட்டம்' என்ற வரி போடப்பட்டது.[21] இதுபோன்று தட்டார்களுக்குத் தட்டார்ப்பாட்டமும்[22] நெசவாளர்களுக்குத் 'தறியிறை'யும்[23] எண்ணெய் ஆட்டுவோருக்குச் செக்கிறையும்[24] இருந்தன. துணிவெளுப்பவர் பயன்படுத்தும் கல்லுக்கும் 'வண்ணாரப்பாறை' என்ற வரிபோடப்பட்டது.[25] இவை இக்காலத் தொழில்வரி போன்றதாகும்

ராசராசனுடைய 14-ஆம் ஆண்டு சுசீந்திரக் கல்வெட்டு நமக்கு முக்கியமான செய்தி ஒன்றைத் தெரிவிக்கிறது. கோயில் நிலங்களில் உழுது வந்த குத்தகைதாரர்களுக்கு வரியை உயர்த்தி, அதனைக் கோயிலுக்குச் செலுத்த வேண்டுமென்று மூவேந்த வேளான் இட்ட ஆணையை அக்கல்வெட்டு கூறுகிறது. ஏற்கனவே குத்தகைப்பங்கு உரிமை (மீயாட்சி) கோயிலுக்கு இருக்க, குத்தகைதாரர்கள் மிகுதியான வரியும் கோயிலுக்குச் செலுத்த வேண்டுமென இந்த ஆணை கூறுகிறது.[26] இந்தச் சுமை குத்தகைப் பங்கு, வரிச்சுமை ஆகியவற்றுடன் சேர்ந்து வரும்போது நிலத்தை உழும் விவசாயிகள் - குத்தகைதாரர்கள் - அல்லல் பட்டார்கள்.

இந்த வரிகளைச் செலுத்த இயலாத மக்கள் மன்னனிடம் முறையிடும் வழக்கமும் இருந்தது. முதல் ராசராசன் தனது 24-ஆம் ஆட்சியாண்டில் தஞ்சையிலிருந்து வெளியிட்ட ஆணையைக் குறிக்கும் கல்வெட்டு ஒன்று சில செய்திகளைத் தருகிறது.[27] சில கிராமங்களில் இருந்த பிராமணர்கள் உள்ளிட்ட குத்தகைதாரர்கள் தங்களுக்குப் போடப்பட்ட வரிகள் நியாயமற்றவை, முறையற்றவை, தங்களால் தரப்பட வேண்டியவையல்ல என்ற காரணங்களால் சபைக்குத் தர வேண்டிய வரிகளைச் செலுத்தவில்லை. இதனால் குத்தகைதாரர்கள் மீது சபை நடவடிக்கை எடுத்தது. இந்த நிகழ்ச்சி சிக்கலாக உருவாகி மன்னனுடைய தீர்ப்புக்கு விடப்பட்டது. ஆனால் முதல் ராசராசன் குத்தகைதாரர்கள் வரிகளைச் செலுத்தியாக வேண்டும் என்று ஆணை பிறப்பித்தான். மன்னனுடைய 16வது ஆட்சி யாண்டிலிருந்து 23வது ஆட்சி யாண்டு வரை இரண்டு ஆண்டுகள் முழுமையும் மூன்றாவது ஆண்டிலும் வரி செலுத்தாதவர்களுடைய நிலங்களையெல்லாம் கைப்பற்றி விற்றுவிடுமாறு ஆணையிட்டான். தன்னுடைய இந்த ஆணை சோழ, தொண்ட, பாண்டிய நாடுகள் அனைத்துக்கும் பொருந்தும் என்றும் அறிவித்தான். இதுபோன்று ஊர், சபை போன்ற அமைப்புகள் வரியை வலிந்து பெருவதற்கு மன்னன் பெருந்துணையாக இருந்தான்.

கி. பி. 1184-ஆம் ஆண்டைச் சார்ந்த தஞ்சை மாவட்டம் திருமங்கலம் கல்வெட்டு விக்கிரமச் சோழப் பேராற்றின் வெள்ளப் பெருக்கினால் பயிர்களுக்கு ஏற்பட்ட சேதத்தையும் இந்த இழப்பைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாது முன்னைய முறைப்படியே அந்த நிலங்களுக்கு வரி விதிக்கப்பட்டதையும் குறிப்பிடுகிறது.[28]

இதற்கு மேலாக வரி வசூலிக்க வருபவர்களுக்கு ஒவ்வொருவரும் அவர்களுடைய ஊதியத்திற்கு மேலாக அரைக்கலம் அரிசி, வெற்றிலை, பாக்கு, உப்பு, மிளகு ஆகியன தர வேண்டும்.[26] 'வரிசோறு,'[30] 'எற்சோறு'[31] என்ற சொற்கள் இதனையே குறிக்கின்றன என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[32]

இத்தகைய கூடுதல் வரிகளின் கொடுமைகளைத் தாங்க இயலாமல் மக்கள் பெரிதும் துயரடைந்தனர். தங்கள் குறைகளை வெளிக்காட்டவோ, எதிர்ப்புணர்வை அல்லது கருத்து வேறுபாட்டை எடுத்துக் கூறவோ அக்காலத்தில் அமைப்புகள் எதுவும் இருக்கவில்லை. மன்னனிடம் முறையிடுவதைத் தவிர வேறு வழியுமில்லை. மன்னர்கள் மக்களுடைய முறையீடுகளை ஏற்றுக் கொள்ளவேண்டிய தேவை இல்லை என்பதால் மக்கள் தங்கள் எதிர்ப்புணர்வைப் பல்வேறு வடிவங்களில் வெளிக்காட்டினார்கள். வரிகொடா இயக்கம், வரி எதிர்ப்பு இயக்கம், வரி குறைப்பு இயக்கம், தாங்களே வரி நிர்ணயித்துக் கொள்ளுதல், ஒத்துழையாமை இயக்கம், அறப்போராட்டம் என்ற வடிவங்களில் மக்கள் தங்கள் உணர்வினை வெளிப்படுத்திய நிகழ்ச்சிகளும் போராட்டங்கள் நடத்திய நிகழ்ச்சிகளும் கல்வெட்டுகளில் இடம் பெற்றிருக்கின்றன.

கொடுமையான வரியினைத் தாங்கமாட்டாது பலர் தங்களுடைய நிலங்களை விற்றதோடு மட்டுமல்லாமல் குடியிருப்புப் பகுதிகளையும் விற்க வேண்டியதாயிற்று. இதோடு அரசனுடைய ஆணை, அதிகாரிகளின் கெடுபிடி ஆகியவற்றுக்கு அஞ்சி வரி கொடுக்க இயலாத பலர் ஊரை விட்டு வேற்று நாடுகளுக்கு ஓடிவிட்டனர். இதிலிருந்து வரிக்கொடுமையோடு, வரி வசூலிக்க நிர்வாக அமைப்புப் பயன்படுத்திய கொடூர முறையையும் அறிய முடியும். இப்படி ஊரை விட்டு ஓடியவர்களுடைய நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டு வரிக்கு ஈடாகக் கொள்ளப்பட்டன.

துன்புறுத்தியேனும் வரியைப்பெற வேண்டும் என்று குடியிருக்கும் வீட்டுக்குள் புகுந்து வெண்கலம் போன்ற மதிப்புள்ள பொருள்களைக் கவர்ந்து கொண்டு. மண்கலம் போன்றவற்றைப் பயன்படுத்த முடியாதவாறு உடைத்தெரிந்து விட்டு வருகின்ற வழக்கத்தை 'வெண்கலம் எடுத்து மண்கலம் உடைத்து' என்ற சொற்கள் எடுத்துக் காட்டுகின்றன.[33] இன்றைய ஜப்தி போன்ற நடவடிக்கையாக இது இருக்கின்றது. அன்றாடம் பயன்படுத்தும் மண்பாண்டங்களை உடைத்துவிடுவது கொடூரத்தின் உச்ச நிலையைச் சித்தரிக்கிறது.

மூன்றும் குலோத்துங்கன் காலத்திய தஞ்சைத் தலை ஞாயிறுக் கல்வெட்டு (கி. பி. 1185) சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் வரி வாங்கும்போது முறை தவறி நடந்தால் தண்டனைக்குள்ளாவார்கள் என்று கூறுவது வரி வசூலிக்கும் முறையில் கொடுமையைக் கண்டித்து விதிகளை வகுக்க வேண்டிய நிலை ஏற்பட்டதைக் காட்டுகிறது.34 ஆனால் இந்த விதிகளினால் நடைமுறையில் மாற்றம் ஏற்பட்டதா? கி. பி. 1245 ஆம் ஆண்டின் மூன்றும் ராசராசனது செய்ஞலூர்க் கல்வெட்டு,

> "கலாசஹிதியாக ஒன்றுக்கு அஞ்சாக வந்த காசும் பேர்வழி சிகை கிடைத்த கேர்களிரட்டையாக வந்த காசும்"

என்று குறிப்பிடுவது கவனிக்கத் தக்கதே.35 முறையான வரிக்குமேல் அதிக வரி வாங்கியவர்கள் அதற்காக ஐந்து பங்கு தண்டம் கொடுக்க வேண்டுமென்றும் வரி பாக்கியுள்ளவர்கள் இரண்டு பங்கு தண்டம் கொடுக்க வேண்டுமென்றும் இச்செய்தி கூறுகிறது. இங்கு மீண்டும் சபையினர் தன்னிச்சைப்படி நடந்து கொள்ளும் போக்கினையறியச் சான்று கிடைக்கிறது. மேலும், வரிபாக்கியுள்ளவர்கள் இரண்டு பங்கு தண்டம் செலுத்த வேண்டுமென்பது கொடுமையான அபராதமாக (Fine) இருப்பதையும் அறிய முடிகிறது.

வரி செலுத்த இயலாத எளிய மக்களை அதிகாரிகள் கொடுமைப்படுத்தும் முறையினை எதிர்க்கும் நடவடிக்கைகள் என்றும் வரி எதிர்ப்பு நடவடிக்கைகளென்றும் இரண்டு முறைகளில் மக்கள் நடத்திய இயக்கங்களைக் காணலாம்,

வரிகளை வசூலிப்பதற்கு நிர்வாக அமைப்புகள் பயன்படுத்திய கொடூர முறைகளைப் பல்வேறு கல்வெட்டுகள் சுட்டிக் காட்டுகின்றன. அரசனது ஆணை, அதிகாரிகளின் கெடுபிடி ஆகியவற்றுக்கு ஈடுகொடுக்க வேண்டிய நிலை இருந்தது.

மகேந்திரமங்கலம் என்ற பிரம்மதேயத்தைச் சார்ந்த சபையைப் பற்றிய ஒரு கல்வெட்டில் படைப்பிரிவினர் செய்த கொடூரங்களை அறியலாம். வரிசெலுத்த இயலாதவர்களைத் தண்ணீரில் படுக்க வைத்தும், சுடும் வெய்யிலில் நிற்க வைத்தும் 'வேதனை'ப் படுத்தியதைத் தாங்காத மக்கள் தஞ்சைக்குச் சென்று முதல் ராசராசனிடம் முறையிட்டார்கள். மன்னன் மக்களின் வேண்டுகோளையேற்காமல் சிக்கலைத் தீர்க்கும் பொறுப்பினை அதிகாரிகளிடம் ஒப்படைத்தான். ஆனால் அதிகாரிகள் போடப்பட்ட வரியினைச் செலுத்தியாக வேண்டுமென்று ஆணையிட்டு விட்டார்கள்.37 ராசேந்திரன் ஆட்சிக்காலத்தில் ஒரு பெண் செலுத்தவேண்டிய வரியைச் செலுத்த முடியாமல் போன ஒரே காரணத்திற்காக ஒரு அதிகாரி அவளைத் துன்புறுத்தினான். இதைத் தாங்கமாட்டாது அந்தப்பெண் விஷம் குடித்துத் தற்கொலை செய்து கொண்டாள். இச்செய்தியை ஜம்பைக் கல்வெட்டுக் கூறுகிறது.37

குலோத்துங்கனுடைய ஆட்சிக்காலத்தில் தனியார் சிலர் கோயிலுக்கு 940 காசு வரி செலுத்த வேண்டியிருந்தது. வரி செலுத்தாத காரணத்திற்காக ஒருவனைச் சிறையிலடைத்துத் துன்புறுத்தினார்கள். இறுதியில் ராசேந்திரசோழ மூவேந்தவேளான் என்ற அதிகாரி தலையிட்டதால் வரி பாக்கிக்காக ஒரு உடன்பாடு ஏற்பட்டது.38

கி. பி. 1213-ஆம் ஆண்டைச் சேர்ந்த திருவொற்றியூர் கல்வெட்டு அதிகாரி ஒருவன் விளைச்சல் நிலம் ஒவ்வொரு வேலிக்கும் $\frac{1}{4}$ மாடை 'பொன் வரி' விகிதத்தைக் கூறுகிறது. நாட்டைச் சார்ந்தவர் யாராக இருப்பினும், அவர்கள் எத்தகைய நிலையில் இருப்பினும் தவறாது பொன்வரி செலுத்தியாக வேண்டும் என்று ஆணையிட்டான். வரி வாங்குவோர், சிலரிடம் பெற்றுக்கொண்டு எஞ்சியவற்றுக்காகப் புன்னைவாயில் சபை உறுப்பினர்களைப் பிடித்துச் சிறையிலடைத்தனர். இந்த முறையற்ற வரியினைச் செலுத்த முடியாத சபை 80 வேலி விளைச்சல் நிலத்தை விற்றதுடன் குடியிருப்பு மனைகளையும் விற்று வரியைக் கொடுக்க வேண்டியதாயிற்று.39

பாசூர்நாட்டைச் சார்ந்தவர்கள் திருமணத்தின்போது கோயிலுக்கு ஒரு ஆடு வழங்க வேண்டும் என்று ஆணையிடப்பட்டது. இப்படி

ஆடு வழங்கத் தவறியவர்களிடமிருந்து வலுவில் இரண்டு ஆடுகளை எடுத்துக்கொள்ள கணப்பெரு மக்களுக்கும், தேவரடியார்களுக்கும் உரிமை தரப்பட்டது.[40] வரி எந்த உருவத்தில் இருப்பினும் அதைப் பெறுவதில் காட்டப்பட்ட கடுமையை இந்த நிகழ்ச்சிகள் எடுத்துக்காட்டுகின்றன.

இது மட்டுமின்றி கோயில்களுக்குத் தரவேண்டிய வரியினைக் குத்தகைக்காரர்கள் செலுத்த முடியாமல் போனால் நிலத்தினைப் பறிமுதல் செய்தோ அல்லது அரசனது ஆணையைப்பெற்று நிலத்தை விற்றோ கோயில்கள் வரவு வைத்துக் கொள்ளும்.[41] இங்கும் வரி வசூலிப்பதில் மன்னனுடைய தலையீடும் அதிகாரமும் பயன்பட்டதைப் பார்க்கிறோம்.

சபை தனக்குக் கிடைக்கவேண்டிய வரிகளை செலுத்தாதவர்களுடைய நிலத்தைவிற்று அதில் இருந்து கிடைக்கும் பலத்தை வரிக்காக ஈடு செய்துகொள்ளுமாறும் இந்த நடைமுறையைப் பின்பற்றாதவர்களுக்கு ஒவ்வொரு நாளும் ஒரு மஞ்சாடி பொன் தண்டம் விதிக்கப்படும் என்றும் கட்டளையிடும் செய்தியை ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.[42]

மக்கள் மீது திணிக்கப்பட்ட அதிக வரிகளை வசூலிப்பதில் ஊர், சபை ஆகிய உள்ளாட்சி அமைப்புகள் அடக்குமுறையினைக் கையாண்ட கொடுமையினையும் அதற்கு மன்னனுடைய ஆணை, படை ஆகியன முன்னின்று துணைபுரிந்ததையும் மேற்கூறப்பட்ட கல்வெட்டுகள் தெளிவாக்குகின்றன.

எளிய மக்கள் பலர் தங்கள் மீது ஏற்றி வைக்கப்பட்ட வரிச்சுமையை வேறு வழியில்லாமல் சுமக்க வேண்டியதாயிற்று. ஆனால் அடக்குமுறைக்கு ஆட்பட்ட மக்களின் உணர்ச்சிகள் அவ்வப்போது வெளிப்படையாகவே வெடித்தன. அவை தீர்மானங்களாகவும் போராட்டமாகவும் உருவெடுத்தன. இதற்கான சான்றுகள் பல்வேறு மன்னர்களுடைய கல்வெட்டுகளிலும் விரவிக் கிடக்கின்றன.

முதல் ராசேந்திரன் காலத்தில் வளஞ்சியர் என்ற வணிகக் குழுவினர் மைலார்ப்பு என்ற இடத்தில் ஒன்றுகூடிச் செய்த முடிவுகளைத் தெரிவிக்கும் காட்டூர்க் கல்வெட்டு அரிய பல செய்திகளைத் தருகிறது.[43] காட்டுரை 'அய்யாப் புழ'லாக இருந்ததிலிருந்து வீரப்பட்டினமாக மாற்றியமைக்க வேண்டுமென்றும் அதற்கு வரிகளிலிருந்து முழுமையாக விலக்குத் தரப்பட வேண்டுமென்றும் வளஞ்சியர் ஊதியத்தை இரண்டுபங்காக மிகுதிப்படுத்த வேண்டுமென்றும் அவர்கள் வேண்டுகோள் விடுத்தார்கள். அத்துடன் நின்றுவிடாமல் இக்கோரிக்கைகள் நிறைவேறும்வரை உருவிய வாளுடன் வரி பெறுவோர், வரிக்காகச் சிறைபிடிப்போர், வரி கொடுக்காதோரைப் பட்டினி போட்டோ, வேறு வகையிலோ துன்புறுத்துவோர் ஆகிய வணிகர்கள் அனைவரும் அந்த நகரத்தில் இருக்கக்கூடாதென்றும் அப்படி வாழ்ந்தால் வளஞ்சியர் குலத்திலிந்து விலக்கப்பட வேண்டுமென்றும் முடிவு செய்தார்கள். இக்கல்வெட்டு வரியை எதிர்த்து மக்கள் செய்த முடிவுகளை மட்டுமின்றி வரிதர இயலாதோர் கொடுரமாகப் பட்டினி போட்டோ, வேறு வழியிலோ துன்புறுத்தப் பட்டார்கள் என்ற செய்தியையும் தருகிறது.

சமூக உற்பத்தி பிற்காலச் சோழர் காலத்தில் வேளாண்மைத் துறை, தொழில் உற்பத்தித் துறை என இரண்டாகப் பிரிந்திருந்தது. விவசாயிகள் வலிமையுள்ள நிலவுடைமையாளர்களால் சுரண்டப்பட்டது போலவே தொழிலில் ஈடுபட்டிருந்த கைவினைஞர்கள் வணிகர்களால் சுரண்டப்பட்டனர். உழவுத் தொழிலில் ஈடுபடாது பிற தொழில் செய்து வந்த மக்கள், ஆதிக்கம் படைத்த வணிகர்களுடைய சுரண்டலை எதிர்த்துப் போர்க்கொடி உயர்த்தியதை இங்கு காண்கின்றோம். நிலவரி மட்டுமல்லாது தொழில் வரிகள் போன்றவை மிகுந்து இருப்பதையும் அவற்றை எதிர்த்துத் தொடர்புடைய மக்கள் போராடியிருப்பதையும் அறிகின்றோம்.

வரிகள் நிலத்தின் தரத்திற்கும் விளையும் பயிருக்கும் ஏற்ப அமையாமல் மிகுந்து இருப்பதை எதிர்த்து வலங்கை 98 பிரிவினரும்

இடங்கை 98 பிரிவினரும் உடன்பாடு செய்து கொண்டதை வைகாவூர்க் கல்வெட்டினால் அறிகிறோம்.[44] இந்த உடன்பாட்டின் அடிப்படையில் அரசுக்குத்தர வேண்டிய 'ராசகரம்' என்ற வரியையும் கோயிலுக்குத் தர வேண்டிய பிற வரிகளையும் நிலத்தின் தரத்துக்கேற்ப தாங்களே திர்ணயம் செய்து கொண்டனர். ஆடுதுறைப் பகுதியில் பிராமணர்களும் வேளாளர்களும் நிலங்களில் பரம்பரை உரிமை கொண்டாடி வலங்கை, இடங்கையினரிடம் மிகுதியான பங்கு பெற்றுவந்ததை எதிர்த்து வலங்கை 98 பிரிவினரும் சில ஊர்களைச்சேர்ந்த இடங்கையினரும் ஒற்றுமை உடன்பாடு செய்து கொண்டனர்.[45]

அறிஞ்சிகை சதுர்வேதி மங்கலத்தைச் சார்ந்த மூன்று பேர் பதினைந்து ஆண்டுகளாக வரி செலுத்தாமல் ஊரை விட்டு ஓடிவிட்டனர். அவர்களுடைய நிலங்களைச் சதுர்வேதி மங்கலம் எடுத்து வரிக்காக ஈடு செய்து கொண்டது.[46]

நிகரிலி சோழமண்டலத்தின் எழுபத்தெட்டு நாடுகளும் ஜயங்கொண்ட சோழமண்டலத்தின் நாற்பத்தெட்டாயிரம் பூமியும் பெரும்படை வலங்கை மகாசேனைக்கு வழங்கப்பட்ட ராசேந்திர சோழப் பதினெண் பூமியும் உள்ளிட்ட நாடுகளில் சோழகுலம் தோன்றிய நாளிலிருந்து மாடுகளுக்கும் எருமைகளுக்கும் போடப்படாத வரியை அதிகாரி மூவேந்தவேளார் விதித்ததை எதிர்த்து, இந்த வரியினைக் கொடுக்க வேண்டிய தேவையில்லை, என்று 'பெரிய விஷயத்தார், கூடி முடிவெடுத்ததை முதல் குலோத்துங்கனுடைய மூன்றாவது ஆட்சியாண்டு மைசூர்க்கல்வெட்டு எடுத்துக் கூறுகிறது.[47] மேலும் அவர்கள் செலுத்த வேண்டிய வரிகளை அவர்களே நிர்ணயித்துக் கொண்டதையும் அக்கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. இந்தக் கல்வெட்டின் மற்றொரு படி உத்தனூரிலும் கிடைத்திருப்பது மக்கள் வரிச் சுமையை எதிர்த்து நடத்திய இயக்கத்தின் சிறப்பை எடுத்துக் காட்டுவதாகும்.[48]

குலோத்துங்கன் காலத்திய மற்றொரு கல்வெட்டு வானவன் மாதேவி சதுர்வேதி மங்கலத்தைச் சார்ந்த சில குத்தகைதாரர்கள் வரியினைச் செலுத்த இயலாமல், பயிர் செய்வதை விட்டு விட்டு ஓடியதையும் அந்த நிலங்கள் வரிக்காகக் கோயிலுக்குச் சபையினால் விற்கப்பட்டதையும் குறிப்பிடுகிறது.[49] குலோத்துங்கனுடைய நாற்பத்தெட்டாவது ஆட்சியாண்டில் சில குத்தகைதாரர்கள் அந்த ஆண்டுக்கு மட்டும் வரி செலுத்த இயலாமல் ஊரை விட்டு ஓடியதையும் அவர்களுடைய நிலங்கள் பறிக்கப்பட்டு வரிக்காக விற்கப்பட்டதையும் காணலாம்.[50] இவை நடந்த நிகழ்ச்சிகளைக் கூறுகின்றனவேயன்றி வரி செலுத்த முடியாமல் குத்தகைதாரர்கள் ஊரை விட்டு ஓடினார்களா அல்லது, வரி பெறுவோரின் அடக்குமுறைக்குப் பயந்து ஓடினார்களா என்ற விரிவான விளக்கம் பெற முடியவில்லை. இருப்பினும் வரி செலுத்த இயலாமல் ஊரை வட்டு ஓடியதைப் புரிந்து கொள்ள முடிகிறது.

குலோத்துங்கனுக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த விக்கிரமசோழன் காலத்திலும் வரி கொடுக்க இயலாது ஊரை விட்டு ஓடிய நிகழ்ச்சிகள் தொடர்ந்தன. விக்கிரமசோழனின் ஐந்தாவது ஆட்சியாண்டில் கரிகாலசோழ சதுர்வேதி மங்கலத்தின் மகாசபை வரி செலுத்த இயலாமல் வேற்றிடத்துக்கு ஓடி விட்டவர்களுடைய நிலத்தைச் 'சபைவிலை'க்கு விற்றோ, அல்லது இறையிலி தேவதான நிலமாக்கி கோயிலிடமிருந்து இறைகாவல் பெற்றோ வரிக்காக ஈடு செய்து கொண்டது.[51]

விக்கிரமசோழனின் ஊட்டத்தூர் கல்வெட்டு வரி செலுத்த இயலாத ஒருவனுடைய துயர வரலாற்றைத் தெரிவிக்கிறது. வரி செலுத்த இயலாத அவன் கோயிலில் செய்த சிறு குற்றத்துக்காக 20 காசு அபராதம் போடப்பட்டான். உடனே அவனுடைய நிலம் அமைந்திருக்கும் சதுர்வேதி மங்கலச்சபை அவனுடைய நிலத்தைப் பறித்து, விற்று வரிக்கும் அபராதத்துக்கும் ஈடு செய்து கொண்டது.[52]

மூன்றும் ராசராசன் (1238, 1239 கி பி) ஆட்சிக் காலத்தில் மன்னார்குடிக் கல்வெட்டுகள் வரிபெறுவதில் கொடுமையான முறைகளை

பின்பற்றப்பட்டதையும் கொடுக்க இயலாத வரிகள் போடப்பட்டதையும் குறிப்பிடுவதுடன் நிலைமை மாறும்வரை பயிர் செய்ய மக்கள் மறுத்து விட்டதையும் விரிவாக எடுத்துக் காட்டுகிறது.[53] ஒரே காலத்தில் பலரும் கைவந்தபடி வரிபோடுவதால் எங்களால் தாங்கிக் கொள்ள இயலவில்லை' என்று மக்கள் கூறியதை மன்னார்குடிச் சபையும் அருகிலுள்ள ஐந்து நாடுகளின் கூட்டமும் கேட்டுச் சில முடிவுகளைச் செய்தன, முறையான வரியை மட்டும் செலுத்தினால் போதுமென்றும் பிறவற்றைச் செலுத்த வேண்டிய தேவையில்லையென்றும் அவர்கள் முடிவெடுத்தனர். இந்த மக்களுடைய இயலாமை புதிய திருப்பத்தையடைந்து எதிர் நடவடிக்கைகளில் இறங்கியிருப்பதை அறிகின்றோம்.

பிற்காலச் சோழர் மரபின் கடைசி மன்னனான மூன்றாம் ராசேந்திரன் (கி. பி. 1246 – 1279) காலத்தில் 10 ஆண்டுகளாக வரி செலுத்த இயலாமல் இருந்த ஒருவன் பாண்டிய நாட்டுக்கு ஓடி, அங்கேயே இறந்து விட்டான். அவனுடைய நிலத்தைக் கைப்பற்றிக் கிராமசபை விற்றதைக் கனப்பால் கல்வெட்டுத் தெரிவிக்கிறது[54]

பல ஆண்டுகள் வரி செலுத்தாமல் ஊரை விட்டு ஓடிய நிகழ்ச்சிகளைக் கொண்டு வரி செலுத்துவதிலிருந்து ஏமாற்றுவதற்காகச் சிலர் அப்படிச் செய்திருக்கலாம் என்ற கருத்துக் கூறப்படுகிறது. ஆண்டாண்டு காலமாக உழைத்து வந்த நிலத்தை-விவசாயி எதனைத் தன் அடிப்படை உரிமையென்று கருதுகிறானோ அந்த நிலத்தை விட்டு ஓட யாருக்கும் மனம் உடன்படாது. தான் பெரிதும் விரும்புகின்ற நிலத்தை விட்டு ஓட வேண்டிய நிலை ஏற்பட்டதைத்தான் இந்நிகழ்ச்சிகள் காட்டுகின்றன.

நிலவுடைமைச் சமுதாயத்தில் நிலவுடைமையாளரின் ஆதிக்கத்தினால் விவசாயிகள் அதிக வரி செலுத்த வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். "தங்கள் நிலத்தின்மீது விதிக்கப்பெற்ற நிலவரிகளை எல்லா விவசாயிகளாலும் செலுத்த முடியவில்லை. அதன் காரணமாக ஏழை விவசாயிகளில் பெரும்பகுதியினர் தங்கள் உடைமைகளை முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ இழந்தனர்" என்று வரலாற்றாசிரியர்கள் நிலவுடைமை நிலைகளைத் தெளிவாக வரையறுக்கின்றனர்.[55] இதனையே மேற்கண்ட சான்றுகள் நிறுவுகின்றன.

பிற்காலச் சோழர் காலத்தில் பல்வேறு பெயர்களில் வரிகளின் எண்ணிக்கை மிகுந்து இருப்பினும் அவற்றை நிலவரி, தொழில் வரி என்ற பாகுபாட்டுக்குள் கொண்டு வந்து விடலாம் என்றும் ஆகவே சோழர் காலத்தில் வரிகள் மிகுதியென்பது பொருந்தாது என்றும் சிலர் வலிந்து கூறுகின்றனர். சோழர் காலத்திய வரிகள் நில வரி, தொழில் வரி என்ற பாகுபாடுகளில் அடங்கி விடுகின்றன என்பது ஏற்புடையதாக இருப்பினும், பிற்காலச் சோழர் காலத்திய வரிகளை மக்கள் செலுத்தக்கூடிய திறம் கொண்டிருந்தனரா என்பதுதான் அடிப்படை வினாவாகும். கல்வெட்டுகள் காட்டும் செய்திகளிலிருந்து போடப்பட்ட மிகுதியான வரிகளைச் செலுத்தக்கூடிய திறனோ சக்தியோ இல்லாத மக்கள் அவற்றை எதிர்த்தார்கள் என்பதைத் தெளிவாக அறியலாம். கி. பி. 1225ல் தமிழகத்தில் பயணம் செய்த சீன நாட்டுப் பயணி சௌ சு-குவா (Chau Ju-Kua) சோழர் ஆட்சியில் வரிகள் எண்ணிக்கையிலும் அளவிலும் மிகுந்திருந்ததைக் குறிப்பிட்டுச் செல்கின்றார்.[56]

"மத்திய அரசு வலிமை இழந்துவிட்ட நிலையில் மண்டலங்களின் தலைவர்கள் தன்னிச்சையாகச் செயல்பட்டு அதிக வரிகளை வாங்கத் தலைப்பட்டார்கள்" என்று திரு. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி கருதுகின்றார்.[57] ஆனால் பிற்காலச் சோழர் காலத்தில் வலிமை பெற்று, வேற்று நாடுகளை வென்று தங்கள் கீழ் கொண்டவர்களாக,

*"வேங்கைநாடும் கங்கபாடியுந் தடிகைபாடியும் நுளம்பபாடியும்*
*குடமலைநாடும் கொல்லமுங் கலிங்கமும் முரட்டெழில்*
*சிங்களர் ஈழமண்டலமும் இரட்டபாடி ஏழரையிலக்கமும்*
*முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும்"*

ஆண்டு வந்த ராசராசன்.

"பூர்வதேசமும் கங்கையும் கடாரமும் கொண்ட" முதல் ராசேந்திரன், "திருமன்னி விளக்கு" குலோத்துங்கன், "பூமாது புணர" விளங்கிய விக்கிரசோழன் ஆகியோருடைய ஆட்சிக் காலத்திலும் வரிச்சுமை காணப்பட்டதையும் வசூலிப்பதில் கொடுமை கையாளப்பட்டதையும் எதிர்ப்பு இயக்கங்கள் நிலவியதையும் மறந்துவிட முடியாது.

பெரும்பாலும் ஊர், சபை ஆகியன வரி வசூலிக்கும் நிர்வாக அமைப்புகளாகத் திகழ்ந்தன. இந்த அமைப்புகளில் நிலமுடைய பிராமணர்களும் வேளாளர்களுமே உறுப்பினர்களாயிருந்தனர். மேலும் நிலவுடைமையாளர்களுக்குச் சுரண்டலுக்கான ஒரு கருவியாக - முக்கிய கருவியாக வரி பயன்பட்டது. ஊர், சபைகள் பெற்ற வரிகள் நிலங்களைப் பயன்படுத்தி விளைச்சலுக்குக் கொண்டு வரவும், ஏரி, குளங்களை அமைக்கவும், நீர்பாசன முறைகளை வகுக்கவும் என மீண்டும், மீண்டும் நிலவுடைமையாளர்களுக்கு மட்டுமே உற்பத்தியையும் லாபத்தையும் பெருக்கித்தரப் பயன்படுத்தப்பட்டன. இதனால் மேலும் ஏழை விவசாயிகளைச் சுரண்டுதற்கு வாய்ப்புகள் வளர்ந்தனவேயன்றி, எளியவர்களின் வாழ்வில் எத்தகைய மாறுதலும் ஏற்பட வழியமைக்கப்படவில்லை. ஆகவே நிலவுடைமையாளர்களான பிராமணர்களையும் வேளாளர்களையும் எதிர்த்தே வரி எதிர்ப்பு இயக்கங்கள் ஒருமுனைப்படுத்தப்பட்டன.

பிராமணர், வேளாளர்களை எதிர்த்துப் போராடுவோருக்கு இருபதாயிரம் காசுகள் தண்டம் போடப்படும் என்று மூன்றும் குலோத்துங்கன் ஆணைபிறப்பித்தது இத்தகைய போராட்டங்கள் பிராமணர், வேளாளர்களுடைய ஆதிக்கத்தைக் கண்டித்து எழுந்ததன் விளைவாகவே இருக்க முடியும்.58 அதிகாரிகளுடைய ஆதரவுடன் வன்னியக்குடி மக்களும் பிராமணர், வேளாளர் போன்ற நிலவுடைமையாளர்களும் இடங்கைப் பிரிவினருக்கு இழைத்த அநீதியை ஒரு கல்வெட்டுக்கூறுவது கவனிக்கத் தக்கதாகும்.59

கைவினைஞன் வணிகர்களால் சுரண்டப்பட்டான். அவனுடைய உற்பத்திப் பொருளை அவனே நேரடியாக விற்பனை செய்தது தவிர எஞ்சிய யாவற்றையும் வணிகர்கள் வாயிலாகவே விற்கவேண்டியிருந்தது. அவனே நேரடியாக உழைப்பில் ஈடுபட்டிருந்ததால் உற்பத்திப் பொருள்களைத் தான் வாழ்ந்து வந்த இடத்தைத் தவிர பிற இடங்களுக்குக் கொண்டு சென்று விற்கக்கூடிய வாய்ப்புகள் இல்லை. "தொழிலுக்கு வேண்டிய கருவிகள் அவனிடமிருந்தன. தன்னுடைய சொந்த உழைப்பையே அவன் சார்ந்திருந்தான், அவனுடைய இலட்சியம் லாபம் பெறுவதல்ல, தன் வாழ்க்கைத் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளுவதே."60 தன் வாழ்க்கைத் தேவைகளை நிறைவு செய்து கொள்ள முடியாத நிலையில் கைவினைஞர்களும் போராட வேண்டியதாயிற்று. இத்தகைய போராட்டங்களும் அடக்கப்பட்டன. சக்தியுள்ள நகர அமைப்பு தனக்கெனத் தனிப்படைப் பிரிவையும் வைத்திருந்தது' இத்தகைய போராட்டங்களை அடக்கப் பயன்பட்டிருக்கலாம்.61

வரி எதிர்ப்பு போன்ற மக்கள் இயக்கங்கள் பல வழிகளில் ஒடுக்கப்பட்ட போதிலும் அவ்வப்போது வெடிப்புகள் தோன்றிக் கொண்டேருந்தன. இத்தகைய சில வெடிப்புகள் பெரும் கலகமாக உருவெடுத்ததையும் அறிகிறோம். முதல் ராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் ராஜராஜ சதுர்வேதி மங்கலத்தில் வாழ்ந்த மக்கள் கொலை கொள்ளை ஆகியவற்றால் அமைதி குலைந்ததை முன்னிட்டு ஊரைவிட்டு வெளியேறியதைக் கீழையூர்க் கல்வெட்டுக் கூறுகிறது.62 இது போலவே முதல் குலோத்துங்கனுடைய ஆட்சியில் ராசமகேந்திர சதுர்வேதி மங்கலம் தீயிடப்பட்டதைத் திருவரங்கக் கல்வெட்டுத் தெரிவிக்கிறது.63

வரி எதிர்ப்பு இயக்கம் வரிக் கொடுமையை எதிர்த்த இயக்கமாக மட்டுமேயிருந்தது என்று கூறிவிட முடியாது. நிலவுரிமை, உழும் உரிமை குத்தகையின் அளவு போன்ற அடிப்படை எதிர்ப்புணர்வுகளும் இதற்கு மையமாகயிருந்தன. வரி எதிர்ப்பு இயக்கம் பயிர் செய்ய மறுத்தல், நிலத்தின் உற்பத்திக்கு ஏற்ப வரி போன்ற காரணங்களோடு ஒட்டிச் செல்வது இதனை உறுதிப்

படுத்தும், மேலும் வரியின் அளவு, குத்தகையின் அளவு (மேல் வாரம்) ஆகியன உற்பத்தியை அடிப்படையாகக் கொண்டிருந்தன. முதல் ராசராசனுடைய சுசீந்திரக் கல்வெட்டு கோயில் நிலத்தின் குத்தகைதாரர்களுக்கு வரியை உயர்த்தி அதனைக் கோயிலுக்கே செலுத்துமாறு ஆணையிடுவது மேல்வாரத்தின் பங்கினை மிகுதிப் படுத்தும் ஒரு முயற்சியாகவும் இருக்கலாம். நிலத்தை உழும் உழவர்களுக்கு வரி பற்றிய சிக்கல்களோடு மேல்வாரத்தின் அளவு பற்றிய சிக்கல்களும் இருந்ததைப் பல கல்வெட்டுகளில் காண்கின்றோம்.64 நிலவுடைமையாளர்களின் சுரண்டலை எதிர்த்து நடந்த போராட்டங்களின் ஒரு பகுதியாகவே வரி எதிர்ப்பு இயக்கங்கள் இருந்தன எனலாம்.

வரி எதிர்ப்பு இயக்கங்கள் திட்டமிட்ட எதிர் நடவடிக்கைகள் என்று கொள்வதற்கும் சான்றுகள் இல்லை. வரிக் கொடுமை உச்ச நிலையை அடைந்தபோதெல்லாம், அமைதியாக வரிகளை ஏற்றுக் கொண்டு அடங்கிக் கிடந்தவர்கள், அஞ்சி அயல்நாட்டுக்கு ஓடியவர்கள் எதிர்ப்பைக் காட்டுவதற்கும் துணிந்தார்கள். இந்த எதிர்ப் புணர்வுடன் வரி பெறுவதில் அடக்குமுறையும் இணைந்தபோது மக்களிடையே எழுச்சி ஏற்பட்டது,

சுருக்கமாகக் கூறினால் "உழைப்பாளி மக்களைப் பல்வேறு வரிகள். தீர்வைகள் மூலம் சுரண்டுவது அதிகரிக்கத் தொடங்கியது."65 ஆகவே "ஏழைகள் தங்களைச் சுரண்டுபவர்களுக்கு எதிராக அடிக்கடி கொந்தளித்து எழுந்தனர்."66 மேலும் "தாங்கள் உயிர் வாழ்வதற்கே விவசாயிகள் நிலவுடைமையாளர்களை எதிர்த்துப் போராடவேண்டிய அவசியம் ஏற்பட்டது."67

இந்த வரி எதிர்ப்பு இயக்கங்களும் பிற மக்கள் எழுச்சிகளும் ஊர், சபைகளை எதிர்த்து, மன்னர்களை எதிர்த்து நடந்தபோதிலும் சில நாட்களில் நாடு தழுவிய துரிதமாக மாறிய போதிலும் அதிராசேந்திரன் போன்ற மன்னர்கள் கொல்லப்படவே காரணமானபோதிலும் இவை எளிதில் அடக்கப்பட்டன. பலரும் பயிற்சியும் பெற்ற போர்ப்படையிருந்தது இதற்கான அடிப்படைக் காரணமாகும். முதல் ராசராசன் காலத்தில் வரி வசூலிக்கப் படைப் பிரிவினர் ஈடுபடுத்தப்பட்ட செய்தியை முன்னரே பார்த்தோம். "நிலவுடைமை அமைப்பில் அரசு விவசாயிகளை, விவசாயத் தொழிலாளிகளை ஒடுக்கி வைத்திருப்பதற்கமைந்த அரசாகவே" இருப்பதைக் காண்கின்றோம்.68

ஆனால் இந்தப் போராட்டங்கள் நிலவுடைமை முறையை வீழ்த்துகின்ற பெரும் போராட்டமாக ஏன் உருவெடுக்கவில்லை? தனித்தனி அமைப்புகளாக உருப்பெற்றிருந்த கிராமங்களை இணைத்து ஒருமுனைப்படுத்துவதில் பல தடைகள் இருந்தன.69

அத்துடன் "தங்களை விடுவித்து, தங்கள் சிறு உடைமைகளை நிலவுடைமை வரிகளிலிருந்து விலக்கி, தங்கள் நிலங்களுக்கு முழு உரிமையாளராக வேண்டுமென்பதே விவசாயிகளின் அவாவாகும். சில எழுச்சிகளின்போது நிலவுடைமை வரிகள், குத்தகைகள் ஆகியன முற்றாக ஒழிக்கப்பட வேண்டுமென்று கேட்கக்கூட விவசாயிகளுக்குத் திடம் இருக்கவில்லை. வரிகளைக் குறைத்தால் போதுமென்றே கேட்டார்கள்."70 தங்களுக்கு நெருக்கடி வந்த போதெல்லாம் மக்களுடைய உணர்வு போராடியதேயன்றி வேறு நடவடிக்கைகளில் இறங்கும் அளவு பக்குவமடையவில்லை.

உற்பத்திக் கருவிகளிலும் உற்பத்தி உறவு முறைகளிலும் ஏற்படும் மாற்றங்களே, சமுதாய மாற்றத்துக்கான அடிப்படை விதிகளாகும். "இந்த உறவுகளின் சாரத்தைப் புரிந்து கொள்ளச் சில அம்சங்களை முதலில் வரையறுத்துக் கொள்ள வேண்டும். உற்பத்திக் கருவிகளின் உடைமை வடிவம், அந்த உடைமையின் பயனைப் பெறும் வகை, இந்த அம்சங்களோடு தொடர்பு கொண்டுள்ள சமூகக் குழுக்கள், வர்க்கங்கள் ஆகியவற்றின் நிலை, உற்பத்திப் போக்கில் அவர்களுக்கிடையே தோன்றும் உறவுகள் ஆகியவற்றையெல்லாம் நிர்ணயிக்க வேண்டும்."71

பிற்காலச் சோழர் காலத்தில் அடிப்படை உற்பத்திக் கருவியான நிலம் பெரும் நிலவுடைமையாளர்களுக்கு உரித்தாயிருந்தது.[1] கைத்தொழில் உற்பத்திக் கருவிகள் உற்பத்தியாளனுக்குச் சொந்தமாக இருந்ததுடன் அவன் தன் சொந்த உழைப்பிலேயே உற்பத்தியில் ஈடுபட்டிருந்தான் உற்பத்திச் சக்திகள் வளர்ச்சி பெறாத நிலையில், உற்பத்திப் பொருள்களின் அளவும் கட்டுப்பட்டேயிருந்தது. இதனால் கைவினைஞர்கள் தங்கள் உழைப்பை நம்பியிருந்ததுபோல, விவசாயிகள் தொடர்ந்து சிறு நிலங்களையோ அல்லது நிலவுடைமையாளரின் நிலங்களையோ சார்ந்திருக்க வேண்டியிருந்தது. உற்பத்திப் பொருள்கள் பெரும்பாலும் நிலவுடைமையின் தேவைகளை நிறைவு செய்யவே பயன்பட்டன. நிலவுடைமை உற்பத்தி சக்திகள் வளர்ச்சி பெறாத நிலையில் நிலவுடைமை உற்பத்தி உறவுகள் மாற்றம் பெறாத நிலையில் சமுதாய மாற்றம் ஏற்படுவது, இயலாததாகி விட்டது. "தனி உற்பத்தி முறையுடன் கூடவே பொது உற்பத்தி முறை தோன்றுகின்ற"72 வளர்ச்சி ஏற்படவில்லை. நிலவுடைமை உறவுகள் சக்தி வாய்ந்தனவாக இருந்தன. கிராம அமைப்புகளும் நிலவுடைமை அமைப்பின் அரசும் இதனைக் கட்டிக் காப்பதில் பெரிதும் துணை நின்றன.

அதனால்தான் இந்தப் போராட்டங்கள் நிலவுடைமை அமைப்பை மாற்றுவதற்கான போராட்டமாக அமையவில்லை.73 மேலும் "தேவையான நிறுவனமின்மை, போராட்டக்காரர்களிடையே ஒற்றுமையின்மை, அனுபவம் உள்ள தலைமையின்மை"74 ஆகியன போராட்டங்கள் தொடர்ந்து, திட்டமிட்டு நடத்தப்படுதற்குத் தடையாக இருந்தன.

பேராசிரியர் நா. வானமாமலை அவர்கள் மதிப்பிட்டிருப்பதுபோல இந்த இயக்கங்கள் "நிலவுடைமை முறையின் தாக்குதல்களுக்கு எதிரான பாதுகாப்பு நடவடிக்கை"களாக மட்டுமேயிருந்தன.75

———

# FOOT NOTES

1 Annual Report on Indian Epigraphy, 1950-51, No. 279; 114 of 1946-47.

2 T. N. Subramaniam, South Indian Temple Inscriptions, Vol. iii, Part. ii, Government Oriental Manuscript Library, Madras, 1957, pp. 1389, 1465.

3 South Indian Inscriptions, Vol, iii, Part i, No 30.

4 ARE 20 of 1915-16, 84 of 1946-47.

5 ARE 532 of 1904.

6 ARE 300 of 1928-29.

7 ARE 268 of 1911.

8 SII, viii, 754, ARE 251 of 1952-53.

9 T. V. Mahalingam, South Indian Polity, University of Madras, 1967, p. 188.

10 ARE 114 of 1914; 259 of 1950 51

11 SII, v, 976.

12 SII, vii, 467.

13 ARE 167 of 1910.

14 ARE 198 of 1925.

15 ARE 73 of 1914; 165 of 1936–37; 21 of 1903; 261 of 1909; 537 of 1922; 327 of 1928; 204 of 1908; 4 of 1899; 187 of 1928.

16 Travancore Archaeological Series, vi, pp. 11–12, eited by K. N. Neelakanta Sastry, The Colas, University of Madras, 1955 p. 527.

17 ARE 255 of 1911

18 ARE 521 of 1920

19 SII, xiii, 208

20 SII, iii, 142

21 SII, v, 976

22 Ibid

23 SII, vii, 467

24 SII, ii, 22

25 SII, iii, 151

26 Kanyakumari Inscriptions (Tamil), Part. ii, Tamilnadu Government Archeological Dept. Madras, 1972. 1968/226

27 SII, iii, 9

28 ARE 113 of 1927

29 Dr. N. Subramaniam, History of Tamilnadu (To A. D. 1336), Koodal Publishers, Madurai, 1972, p. 327

30 T. N. Subramaniam, SITI, Vol. iii, Part ii, Annxure, p. 88

31 SII, iii, 24
T. N. Subramaniam, SITI, Vol. iii, Part ii, p. 1406

32 Dr. N. Subramaniam, cited above, p, 327

Dr, C. Minakshi, Administration and Social Life Under the Pallavas, University of Madras, 1938, p. 82

33 Dr. N. Snbramaniam, cited above, p 327

34 ARE 148 of 1927

35 ARE 89 of 1932

36 SII, v, 723

37 ARE 80 of 1906

38 ARE 168 of 1951–52

39 ARE 202 of 1912

40 SII, vii, 804

41 ARE 264 of 1191

42 ARE 176 of 1929–30

43 ARE 256 of 1912

44 ARE 361, 362 of 1914

45 ARE 34 of 1913

46 ARE 189 of 1914

47 ARE 461 of 1911

48 ARE 458 of 1911

49 ARE 620 of 1904

50 ARE 647 of 1909

51 ARE 4 of 1914

52 ARE 512 of 1912

53 SII, vi, 4, 50, 58

54 ARE 336 of 1925

55 Y. Zubritsky, V. Kerov, D. Mitrepelsky, Samudaya Varalaru Surukkam, (Tamil Translation of 'An Outline of Social Development', Progress Publishers, Moscow), New Century Book House, Madras, 1968, p. 254.

56 K. A. N Sastry (Eq), Foreign Notices of South India, University of Madras, 1972, p, 144.

57 K. A. N. Sastry, The Colas, p. 537

58 ARE 80 of 1925

59 ARE 34 of 1913

60 Y. Zubritsky and others, cited

61 ARE 342 of 1912
K. A. N. Sastry, The Colas p. 597
T. V. Mahalingam, cited above, p. p. 267-268

62 ARE 92 of 1946-47

63 ARE 31 of 1936-37

64 ARE 32 of 1936-37

65 Y. Zubritsky and others, cited above, p. 244

66 Ibid, p. 252

67 Frederick Engels, Socialism : Utopian and Scientfic, Progress Publishers, Moscow, Introduction,

68 F. Engels, The Orgin of the family, Private Property and the State, Progress Publishers, Moscow, 1972, p, 168

69 E. V. Agibalova, G. M. Donski, History of the Middle Ages, Publishing House 'PROSVESH-CHENIYE', Moscow, 1965, p. 171

70 Y. Zubritsky and others, cited above, p. 299

71 Ibid, p. 206

72 F. Engels, Anti-Duhring, Foreign Languages Publishing House, Moscow, 1947 p. 399

73 N. Vanamamalai, Studies in Tamil Folk Literature, 'Conselidation of Feudalism and Antifeudal Struggles During Chola Imperialist Rule' New Century Book House, Madras, 1969, p. 109

74 Y. Zubritsky and others, cited above, p 299

75 N. Vanamamalai, cited above, pp. 108-109

————

# தஞ்சைப் பெரிய கோயில் திரு மெய்க் காப்புகள்.

T. மங்கை.

[தஞ்சைப் பெரிய கோயிலைக்கட்டிப் பிரதிட்சை செய்தபின், அக்கோயிலின் நித்த நிவந்தங்கருக்காக இராஜாராஜதேவர் இறைபிலி நிலங்கள் விடுத்தார். பல வரிகளையும், பாட்டங்களையும் கோயில்ன் செலவிற்காக கொடுக்கச் செய்தார். இச்சொத்துக்களை நிருவகிப்பதும், அவற்றிலிருந்து கோயிலுக்குச் செலுத்த வேண்டிய நெல்லைச் செலுத்த வேண்டியதும் அந்நிலங்கள் இருந்த ஊர்ச் சபையார் அல்லது ஊராரின் பொறுப்பில் விடப்பட்டவ. அந்நிலங்களை யாரும் கவர்ந்து கொள்ளாமல் பாதுகாப்பது, சபையார், அதிகாரிகள். கோயில் பிரவுட சபையார், கோயில் கள்மிகள் வரிப்பொத்தம் முதலியவர்களின் கடமையாக விதிக்கப்பட்டது.

நிலம் முதலிய ஸ்தாவரச் சொத்துக்கள் மட்டுமல்லாமல், ஆபரணங்கள், முத்து வைரங்கள், பொற்சின்னங்கள், செப்புப் பாத்திரங்கள், பொன், செம்பு வெள்ளிப்பிரதிமைகள் முதலிய சங்கமச் சொத்துக்களும் கோயிலுக்குச் சேர ஆரம்பித்தன. இராஜராஜன் தனது 29வது ஆண்டில் இவற்றையெல்லாம் கணக்கெடுத்தான்.

களவு போகக்கூடிய சங்கமச் சொத்துக்களைப் பாதுகாக்கத் தனியாக ஒரு காவலர் படையை அமைத்தான். அவர்களை நியமித்தது எவ்வாறு? அவர்களது ஊதியத்தைக் கொடுப்பது யார் என்பனவற்றைக் குறித்து ஒரு ஆணை யிறப்பித்தான், அவ்வாணையை பெருவுடையார் கோயிலில் வெட்டுவித்தான்.

இவ்வேற்பாடு எந்த நோக்கத்தோடு செய்விக்கப்பட்டது? இதன் பாதுகாப்பு அம்சங்களும், பொருளாதார அம்சங்களும் எவை? என்பன போன்ற கேள்விகளை இக் கட்டுரையில் குமாரி மங்கை ஆராய்கிறார். நா. வா.]

தஞ்சைப் பெருங் கோயிலை எடுப்பித்த ஸ்ரீ ராஜராஜ தேவர் அக்கோயில்களுக்கு வைரம், மாணிக்கம், முத்துக்கள், மரகதம், நீலம், கோமளம், ரத்னம், பவளம் ஆகிய விலை மதிப்புள்ள ஏராளமான திருவாபரணங்களையும், பொற்கலங்களையும், செப்புப் பிரதிமங்களையும் அளித்தார்.

இப்பெருஞ் செல்வம் பேராற்றல் படைத்த பெருவுடையாரின் உடைமையான பின்னரும் கூட அவை களவு போய் விடாமல் பாதுகாக்க காவலர்கள் நியமனம் செய்யப்பட்டனர். இவர்களைக் கல்வெட்டுக்கள் 'திரு மெய்க் காப்பு' என அழைக்கின்றன. மொத்தத்தில் இவர்கள் நூற்றுக்கும் மேல் இருந்ததால் இவர்கள் அலங்காரத்திற்காக தெய்வத் திருமேனியின் மெய்க் காப்பாளர்களாக இருந்திருக்க முடியாது. அவர்கள் கோயிலின் சங்கம சொத்துக்களைப் பாதுகாத்த காவலர்களேயாவர். இவர்கள் எவ்வாறு நியமிக்கப்பட்டனர்? இவர்களின் ஊதியம் எவ்வாறு கொடுக்கப்பட்டது? போன்ற வினுக்களுக்கு கல்வெட்டுக்கள் விடை கூறுகின்றன. அவற்றை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

தஞ்சைப் பெருங் கோயிலுக்கு ராஜராஜ தேவர் மட்டுமின்றி அவருடைய தமக்கையாரும் உறவினரும் பிறரும் கொடுத்த திருவாபரணங்களும், கலங்களும், படிமங்களும் கணக்கெடுக்கப்பட்டு பட்டியல் தயாரித்து அதனை ஓர் கல்வெட்டில் செதுக்கியுள்ளார்கள்.

விமானத்தில் உள்ள ஒரு கல்வெட்டு.

"நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி ஸ்ரீ ராஜ ராஜீஸ்வரமுடையார்க்கு, நாம் குடுத்தனவும், நம் பெண்டுகள் குடுத்தனவும் மற்றும் குடுத்தார் குடுத்தனவும் ஸ்ரீ விமானத்தில் கல்லிலே வெட்டுக என்று திருவாய் மொழிஞ்சருள வெட்டினபடி" என்று கூறுகிறது.

ராஜராஜன் அக்கோயில்களுக்குக் கொடுத்த திருவாபரணங்களும், கலங்களும் எவ்வாறு பெறப்பட்டன என்பதைக் கீழ் வரும் கல்வெட்டு கூறும்.

"உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடைய பரமஸ்வாமிக்கு உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர், சேரமானையும், பாண்டியர்களையும் எறிந்து கொண்ட பண்டாரங்களிலும் யாண்டு இருபத் தொன்பதாவது வரை குடுத்த ரத்னத்தின் திருவாபரணங்களான பொன்னேடுங்கட்டப்பட்ட .........போத்த ரத்னங்கள்.........மும், பேசியும் சரடும், சட்டமும் செப்பாணிகளும் நீக்கியும் கட்டப்பட்ட ரத்னங்களில் அரக்கும், பிஞ்கும் உட்படத் தட்சிண மேரு விடங்கன் என்னும் கல்லால் நிறையெடுத்து கல்லில் வெட்டினபடி"

சேரனையும், பாண்டியனையும் வென்று அவர்கள் கருவூலங்களிலிருந்து கொண்டு வந்த ஆபரணங்கள், முத்துள்ள கற்களை கோயிலுக்கு அளித்ததை இது கூறும்.

"கண்ட நாண் ஒன்றிற் கட்டின மாணிக்கம் பதினஞ்சும், மரகதம் பதினாறும், வயிரம் இருபத் தெட்டும், தைய முத்தும், ஒப்பு முத்தும், குறு முத்தும், பாட்டமும் ஆக முத்து நாற்பதும் உட்பட நிறை நூற்று எழுபதின் கழஞ்சேய் ஏழு மஞ்சாடிக்கு விலை காசு ஐந்நூறும்".

பொற்கலங்கள் கோயிலுக்கு அளிக்கப் பட்டன என்பது கீழ்வரும் சாசன வாக்கியத்தால் விளங்கும்.

"யாண்டு இருபத்தாறாவது நாள் நூற்று நாலினால் உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் ஸ்ரீராஜ ராஜ தேவமுடையார்க்குக் கொடுத்த பொன்னின் கிடாரம் ஒன்று ஆடவல்லான் என்றும் கல்லால் நிறை பதினோராயிரத்து எழுநூற்று இரு கழஞ்சு" இது செப்புப் பாத்திரங்கள் கொடுக்கப்பட்டதைக் குறிக்கும்.

"பதுமங்களுக்கு....... குடுத்த உடையார் கோயிலில் முழத்தின்கீழ் வெள்ளியின் ஸ்ரீ பாதம் ஆறு தோரை உசரமும், நால் விரலே ஆறு தோரைச் சுற்றும் உடைய பொன்னின் க்ஷேத்ர பால தேவர்" என்றும் கூறப்பட்டிருப்பதைக் கல்வெட்டுச் சான்றுகளினால் அறிகிறோம். படிமங்கள் செய்து அளிக்கட்டதை இது குறிப்பிடும்.

இவ்வாறு உயர்ந்த மதிப்புடைய சங்கம சொத்துக்களின் பாதுகாப்பிற்காக மெய்காப்பு கள் நியமிக்கப்பட்டார்கள். பாதுகாவலுக்காக நியமிக்கப்பட்டதிலிருந்து அவர்களை மெய்யடி யார்கள் என்ற பொருளில் கொள்ள இடமில்லை.

மேலும், கோயிலுக்குச் சொந்தமான திருவாபரணங்களைக் காப்பது மட்டுமின்றி கோவில் மதிற்சுவரிலும், மற்ற இடங்களிலு முள்ள உரிமைச் சான்றுகள் உரிமைப் பத்திரங் கள் முதலியவை அழிக்கப்படாமல் பாதுகாக்க வும், போர்ப்படை வீரர்களல்லாத இந்த மெய்க் காப்பாளர்கள் நியமிக்கப்பட்டார்கள்.

இம்மெய்க் காப்பாளர்கள் ஓரிடத்திலிருந்து மட்டும் தேர்ந்தெடுக்கப்படவில்லை. சோழ நாட்டு வளநாடுகளிலும், கூற்றங்களிலுமுள்ள சதுர்வேதி மங்கலத்துச் சபையோரும், ஊராரும் நகரத்தாரும் அவரவர்களின் சபைகளின் மூலமும் ஒன்று அல்லது இரண்டும், அதற்கு மேற்பட்டும் மெய்க் காப்பாளர்களைத் தேர்ந் தெடுத்து அனுப்பினர்.

சதுர்வேதி மங்கலத்துச் சபை அந்தணர் களை உறுப்பினர்களாகக் கொண்டது.

ஊரார் என்பது அந்தணர்களும் மற்ற எல்லாச் சாதியாரும் உறுப்பினர்களாகக் கொண்டு அமைக்கப்பட்ட சபை.

நகரத்தார் என்பது வணிகப் பெருமக்கள் கொண்டது சபை.

தூரம் இடைபட்ட பல கிராமங்களின் சபைகளும் நகரத்தாரும், ஊராரும் தமது நிறுவனங்களிலிருந்து சிற்சில பாதுகாவலர்களை அனுப்பிவைத்தனர். எவ்வளவு கவனமாக அரசு காவலர்கள் சேர்ந்து களவாடி விடாமல் கவனித்தது என்பது இந்நியமன முறையிலிருந்து விளங்கும். இதற்கு மேற்கோள்களாகக் கீழ் வரும் கல்வெட்டுக்களைக் கூறலாம். இந்நியமனங்களை அரசன் தனது ஆணையாகவே குறிப்பிட்டிருக்கிறான்.

......"கோராஜ கேஸரி வர்மரான ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது வரை உடையார் ஸ்ரீராஜராஜ தேவர், உடையார் ஸ்ரீ ராஜ ராஜுஸ்வரம் உடையார்க்குச் சோழ மண்டலத்துப் பிரம்ம............ ......வும் இட்ட திரு மெய்க் காப்பாளர்களுக்கும்..................

"அருமொழி தேவ வள நாட்டு நென்மலி நாட்டு நெடுமணலாகிய மதன மஞ்சரிச் சதுர் வேதி மங்கலத்துச் சபையார் இடக்கடவ திரு மெய்க் காப்பு.........

"ராஜேந்திர சிம்ம வளநாட்டுப் பொய்கை நாட்டு கண்டாதித்யச் சதுர் வேதி மங்கலத்துச் சபையார் இடக்கடவ திருமெய்க்காப்பு இரண்டும்"

"இந்நாட்டுத் தேவதானந் திருவிடைக்கழி சபையார் இடக்கடவ திருமெய்க் காப்பு மூன்றும்"

"தளியூர் ஸ்ரீ வீர நாராயணச் சதுர் வேதி மங்கலத்து சபையார் இடக்கடவ திரு மெய்க் காப்பு ஆறும்"

"இந்நாட்டு வண்டாழஞ் சேரி ஊரார் இடக்கடவ திரு மெய்க் காப்பு ஒன்றும்"

"இந்நாட்டு வைப்பூர் ஊரார் இடக்கடவ திரு மெய்க் காப்பு ஒன்றும்"

சில சபைகள் ஒன்றும், வேறு சபைகள் இரண்டு, மூன்று, ஆறுமாக மெய்க் காப்புகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பினர் என்பது மேற்குறித்த கல்வெட்டுகளால் விளங்கும் போன்ற வாசகங்கள் சான்றுகின்றன.

இவர்களது செலவும் ஊதியமும் அவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பிய நிறுவனங்களால் கொடுக்கப்பட்டன. இதற்காக ஆண்டுதோறும் அவர்களை அனுப்பி, அவர்களுக்காக ஊராரே நெல் அளக்க வேண்டுமென இராஜ ராஜன் ஆணை பிறப்பித்தான். இதனைக் கூறும் கல்வெட்டு.

"......வும் இட்ட திரு மெய்க் காப்பாளர்களுக்குப் பேரால் ஆட்டை வட்டன் நூற்றுக் கல நெல்லுத் திரு மெய்காப்பாளர்களை இட்ட அவ்வவர் ஊர்களிலாரே அளக்கக் கடவார்களாகவும்;

இந்நெல் அல்வவர் ஊர்கவிலார்க்கு சந்திராதித்வல் ஆண்டாண்டுதோறும் தன் கடமைக்குச்செலவு பெறவும், படி செலவு பெறவும், ஆக இப்படி நிவந்தமாக உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தேவர் திருவாய் மொழிந்தருளினபடி கல்லில் வெட்டியது."

இவ்வாறு நியமிக்கப்பட்ட திருமெய்க் காப்பாளர்கள் மொத்தம் நமக்குக் கிடைத்த கல்வெட்டுக்களில் சுமார் நூற்றிருபதுக்கும் மேற்பட்டவர்கள் உள்ளனர். கோயில்களுக்கு உடைமையான தங்கப் பிரதிமைகள், ஆபரணங்கள், பொற்கலங்கள், நெல், நெய் முதலியவற்றை கோயிலுக்கு வருபவர்கள் திருடிவிடாமல் இருக்க ஒரு தனிக் காவல்படையாக அரசன் அமைத்தான். இது போன்றே இடங்கை வேளைகாரர், திரிசூல வேளை காரர் என்ற காவற் படையினர் கோயிற் சங்கம சொத்துக்களைப் பாதுகாத்தனர். சிவனடியார்கள் வேடத்தில் கள்வர்கள் இருத்தல் கூடும் என்று கருதி முன்னெச்சரிக்கையாக இராஜ ராஜன் காவல் படையை அமைத்தான்.

இம்முறையால் என்ன விளைவுகளை ஏற்படுத்த ராஜராஜன் எண்ணினான்?

1. கோயிலின் பொருள்களுக்கு நாட்டிலுள்ள பல்வேறு சபைகளும், ஊர்களும், நகரங்களும் பொறுப்பு என்ற உணர்வை ஏற்படுத்த விரும்பினன்.

2. கோயிலிலுள்ள தேவ கன்மிகள், கோயில் ஊழியர்கள், நிருவாகிகள் இவர்கள் காவலரோடு சேர்ந்து திருட முடியாதபடி நாட்டின் பல பகுதிகளிலிருந்து பல நிறுவனங்களால் நியமிக்கப்பட்டு, அந்நிறுவனங்களாலேயே ஊதியமளிக்கப் பட்டவர்களைக் கொண்டு இப் படையை அமைத்தான். அவர்களுடைய கவனக் குறைவால் தவறு நேர்ந்தால் அவர்களை நியமித்த சபையினரே பொறுப்பாக நேரும். எனவே மெய்க் காப்பாளரின் பொறுப்பு அதிகமாகிறது.

3. கோயிலைக் காக்கும் பொறுப்பு தங்களுக்குரியது என்ற கௌரவ உணர்வால் சபை முதலிய நிறுவனங்களே, கோயிலைப் பாதுகாக்கும் செலவை ஏற்றுக் கொண்டன. இதனல் உடையார் கருவூலம் அல்லது கோயில் கருவூலத்தின் செலவு குறைந்தது. ஆகையால் இது ஓர் திட்டமிட்ட பொருளாதார முயற்சி.

4. இக்கோயிலுக்கு அளித்த ஆபரணங்கள் பொற் கலங்கள் முதலியவைகளில் பல பகைவர்களான சேர, பாண்டியர்களை வென்ற போது அவர்கள் பண்டாரத்தைச் சூறையாடிப்பெற்றது இதனைக் கல்வெட்டே குறிப்பிடுகிறது. சூறையாடப்பட்ட தங்களது சொத்தைத் திரும்பப் பெற களவு அல்லது படையெடுப்பு மூலம் பகைவர்கள் முயலக்கூடும். இதற்குப் பலமான காவல் அவசியம். எனவே ஒருவரோடொருவர் கூடிச் சதி செய்ய முடியாதபடி காப்பாளர்கள் நியமித்தல் வேண்டும். அவ்வாறேதான் இம் மெய்க்காப்பாளர்கள் நியமிக்கப்பட்டனர்.

———

# தென் திருவிதாங்கூர் தோள்சீலைப் போராட்டம்.

P. S. K. பக்தவத்சலன்.

[நம் நாட்டின் சாதியமைப்பு இறுக்கமடைந்து, நிலவுடைமையை வலுப்படுத்திய போது, உயர்சாதியும், நிலவுடைமையாளரும் இணைந்து ஒன்றாயினர் அல்லது நேசஉறவுடையோராயினர். அப்பொழுது தங்களது சமூகசிறப்பு அந்தஸ்துகளை நிறுவிக்கொள்ள சமூகத்தின் உழைப்பாளி மக்களான தாழ்ந்த சாதி மக்களை சுயமரியாதையற்றவராக ஆக்குவதற்கு அவர்களுக்குச் சாதாரணமாக தோள்சீலை அணியும் உரிமை, செருப்பணியும் உரிமை பிரேத ஊர்வலத்தில் இரட்டைச்சங்கு ஊதும் உரிமை, 10 அடிக்குமேல் கட்டிடம் கட்டும் உரிமை, முதலியன மறுக்கப்பட்டன. கிறிஸ்தவ மத மாற்றம், சீர்திருத்த இயக்கம், பக்தி இயக்கம், ஆங்கிலப் படிப்பு இவற்றால் உரிமை உணர்வும், சமத்துவ உணர்வும் தூண்டிவிடப்பட்ட கீழ்ச்சாதியினர் என்று உயர் சாதியினரால் கருதப்பட்ட நாடார் மக்கள் மிகச்சாதாரண உரிமைகளுக்காக இணைந்து போராடினர். இது சாதிமுறையின் முக்கியமான அம்சங்களான உழைப்பை அவமதித்தல், சுரண்டல், இழிவுபடுத்துதல், பிறப்பினால் உயர்வு தாழ்வு உண்டு என்னும் கொள்கையை ஸ்திரப்படுத்துதல், முதலியவற்றை எதிர்த்து நாடார் மக்கள் போராடினர். இப்போராட்டங்களின் வரலாற்றின் வர்க்கத் தன்மையைக் குறிப்பிட்டு, அவற்றை ஆய்வாளர் ஆராய்கிறார்.
நா. வா.]

"ஜாதி அமைப்பின் படியில் சாணுர்களின் இடம் சில தன்மைகளில் தனியானது. மது பானங்களிலிருந்தும் மாட்டிறைச்சியிலிருந்தும் இவர்கள் விலகி இருத்தலும், தங்களுடைய விதவைப் பெண்களை இவர்கள் மறுமணம் செய்ய அனுமதியாமையும் இவர்களைச் சூத்திர இனத்தவருடன் இணைக்கின்றது. ஆனால் அதற்கு மாறாக இவர்கள் சூத்திரர்களைப்போல இந்துக் கோயில்களில் அனுமதிக்கப்படுவதில்லை. பழைய முறை வழக்கத்தில் இருக்கும் இடங்களில் இவர்கள் நீதி மன்றங்களில் கூட அனுமதிக்கப் படுவதில்லை. இவர்கள் தங்கள் வழிபாடுகளைச் கடவுளுக்கும் தங்கள் குறைகளை நீதி பதிகளுக்கும் வெளியிடங்களில் வைத்துத்தான் செய்ய அல்லது சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் பெண்கள் மற்ற தாழ்ந்த ஜாதியினரைப்போல அரைக்குமேலே திறந்தே போட்டு இருக்கக் கடமைப்பட்டவர்கள். இந்தச் சூழ்நிலைகள் அவர்களைச் சூத்திரருக்குக் கீழுள்ள ஜாதிகளோடு இணைக்கிறது. இந்தக் கூட்டத்தில் உள்ள ஒரு ஜாதிதான் இவர்கள் என்று எடுத்துக் கொண்டால் சந்தேகத்துக்கு இடமில்லாமல் இந்தக் கூட்டத்தில் உயர்ந்த பிரிவினர் இவர்கள் என்று கருதப்படுவர்." 1

19-ம் நூற்றுண்டின் தொடக்கத்தில் திருநெல்வேலி நாடார்களின் சமூக நிலைபற்றி ராபர்ட் கால்டுவெலின் இந்தக் கணிப்பு அக் காலத் தென் திருவிதாங்கூர் நாடார்களுக்கும் ஓரளவுக்குப் பொருத்தமானதாகவே இருக்கும் என்று தோன்றுகிறது. இவ்வாறு திரிசங்கு சொர்க்க நிலையிலிருந்த நாடார் சமுதாயம் ஜாதி வெறி கொடிகட்டிப்பறந்த அந்தக் காலத்தில் தன்னையும் உயர்த்திப் பார்க்கவும் உயர்த்திக் காட்டிக் கொள்ளவும் பொருளாதாரம் சமூகம் மதம் ஆகிய துறைகளின் மூலம் முயற்சி செய்தது. இந்த முயற்சியில் ஓரளவு வெற்றியும் பெற்றது. இதனால் எரிச்சலுற்ற மேல் ஜாதியினரோ தங்களுடைய முழுத்திறமையையும் பயன்படுத்தி இந்த ஜாதியைப் பழைய நிலையில் நிறுத்தி வைக்க முயன்றனர். இதன் காரணமாக 18-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியிலிருந்து தொடங்கி தமிழ் நாட்டிலும் தென் திருவிதாங்கூறிலும் ஆங்காங்கே பல பெரிய சிறிய கலகங்

களும், போராட்டங்களும் நடந்து வந்திருக்கின்றன இவற்றில் மிகமுக்கியமான போராட்டங்களுள் ஒன்று தென் திருவிதாங்கூர் நாடார்களின் தோள் சீலைப் போராட்டமாகும்.

18-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியிலேயே தென் இந்திய சமூக அமைப்பு பெரும் மாறுதலுக்குள்ளாயிற்று. ஆங்கில வியாபாரக் கம்பெனியின் செல்வாக்கும், ஆங்கிலப் பாதிரிமாரின் செல்வாக்கும் ஆங்கிலமுறைக் கல்வியும் இந்த மாறுதலுக்கு முக்கிய காரணங்களாயிருந்தன. இந்த மாறுதல் திருவிதாங்கூரையும் பாதித்தது. 1684-ல் அஞ்சங் கோவில் ஸ்தாபிக்கப்பட்ட ஆங்கில வியாபாரப் பிரதிநிதிப் பதவி 1788-ல் திருவிதாங்கூர் அரசுக்கு ஆங்கிலக் கம்பெனியாரின் அரசியல் பிரதிநிதிப் பதவியாக உயர்த்தப்பட்டது 1795-ல் திருவிதாங்கூர் மகாராஜா ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியாரோடு செய்து கொண்ட நிரந்தர ஒப்பந்தம் திருவிதாங்கூரை ஆங்கில ஆதிக்கத்திற்குட்படுத்திற்று. திருவிதாங்கூரில் வியாபாரம் வளர்ச்சியடைந்தது. பாதைகள் போக்குவரத்து மார்க்கங்கள் விரிவடைந்தன. நாடெங்கிலும் சிதறிக்கிடந்த உழைக்கும் மக்கள் தங்களுக்குள் தொடர்பு கொள்ளும் வாய்ப்புகள் பெருகின.

இந்த நிலையில் 1799-ல் வேலுத்தம்பி திருவிதாங்கூர் தளவாயின் அநியாயச் செயல்களுக்கு எதிராகப் பெருமக்களைத் திரட்டி ஒரு மாபெரும் போராட்டம் நடத்தி சில வெற்றிகளைப் பெற்றுர். மன்னனின் அடக்கு முறைகள் குறைந்தன. 1801 முதல் 1809 வரை வேலுத்தம்பி தளவாய் ஆட்சிபுரிந்த காலத்தில் அவர் செய்த பணிகள் சாதாரண மக்களுக்குப் பெரும் சாதகமாய் அமைந்தன. எல்லா செயல்களுக்கும் அவர் சாதாரண மக்களின் சக்தியையே நம்பினர். அவருடைய செயல்கள், சமூகம் ஒன்றுபட்டு நின்று தனக்குரியதைப் போராடிச் சாதிக்கும் தகுதியுடையது என்ற சமூகபாடத்தை திருவிதாங்கூர் மக்களுக்குக் கற்பித்தது.

இந்த வளர்ச்சி பெற்று வந்த சமூகச் சூழ்நிலை, நாடார்களும் அவர்களைப் போல உடலால் உழைக்கும் பிற ஜாதியினரும் தங்களுடைய பயங்கரமான இழிநிலையை அவர்களுக்கு மெல்ல மெல்ல உணர்த்திற்று. உணர்த்தியதோடு மட்டுமல்லாமல் அந்த இழிநிலையிலிருந்து விடுதலையடையும், ஆசையையும் அவர்களது நெஞ்சில் தூண்டிற்று. எத்தனையோ ஜாதிகள் இந்த இழிநிலையில் இருந்தன. ஆனாலும் ஜாதிய நிலையில் மேற்சாதியினரால் ஒதுக்கப்பட்டு அதேசமயம் கீழ்ஜாதிகளிலிருந்து மேம்பட்டு இடைச்சாதியாய் வாழ்ந்த நாடார் ஜாதிதான் ஜாதிய விடுதலைக்கான போராட்டத்தைத் தொடங்கி நடத்த வேண்டிய நிலையில் அன்று இருந்தது. திருவிதாங்கூர் அல்லது தமிழ்நாடு சமூகச் சரித்திரத்தில் எங்குபார்த்தாலும் இக்காலகட்டத்தில் இவர்கள் மேல்ஜாதியினரை எதிர்த்துப் பல இடங்களில் போராடினர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன.

பதினெட்டாம் நூற்றுண்டில் தென் திருவிதாங்கூர் நாடார்களின் நிலை மிகவும் பின்தங்கியதாக இருந்தது. அவர்கள் அரசாங்கத்தாராலும் மேல் ஜாதியினராலும் அடிமைகள் போல் நடத்தப்பட்டார்கள். உப்பு ஊழியம் ஏட்டோலை ஊழியம் போன்ற ஊழியங்களை இவர்கள் செய்யுமாறு கட்டாயப்படுத்தப்பட்டனர். இவைகளிலிருந்து நாடார்கள் தப்பவே முடியாது. வேலை செய்ய மறுத்தவர்கள் முக்காலியில் கட்டி அடிக்கப்பட்டார்கள். ஆனல் இவ்வேலைகளுக்குரிய கூலியோ வேலை செய்தவர்களுக்குச் சேர்வதே இல்லை. அரசாங்க அதிகாரிகளும் ஜாதியத் தலைவர்களும் கூலியைப் பங்கு போட்டுக்கொண்டார்கள்.

"அரசாங்கத்துக்குக் கூலி இல்லாமல் சுமைகளைத் தூக்கிச் செல்லுவது தடுக்கப்படுகின்றது" [2] என்று ராணி பார்வதிபாய் என்று சட்டம் இயற்றியதிலிருந்து கூலியைக் கொள்ளையிடும் வழக்கம் அன்று எந்த அளவுக்கு இருந்திருக்கவேண்டும் என்று ஒருவாறு நாம் யூகித்துக் கொள்ளலாம்.

நாடார்கள் கடுமையான வரிகளுக்குள்ளாக்கப்பட்டார்கள்.

"தாலிக்கும் ஆயம் சவுரி முதல் ஆயம்
கூலிக்கும் ஆயம் கம்புதடிக்காயம்
தால மதுக்காயம் தரணிதன்னில் வள்ர்ந்த
ஆலமரம் வரைக்கும் அதிக இறை ......" 3

என்ற பாடல் நாடார்கள் கொடுக்க வேண்டிய வரிகளைச் சுட்டிக்காட்டுகிறது.

இவர்கள் அனாதைகள் போல் வாழ்ந்தார்கள் இவர்களை அடித்தாலும் உதைத்தாலும் கேட்பார் இல்லை. மேல் ஜாதியினன் இவர்களை

"பனை கேட்டடிப்பான் பதநீர் கேட்டடிப்பான்
கனமான கற்கண்டு கருப்புக்கட்டி கேட்டடிப்பான்
நாருவட்டிக்கு ஓலை நாள்தோறும் கேட்டடிப்பான்...
சில்லுக் கருப்புக்கட்டி சீரகம் இட்டே ஊற்றி
தொல்லை தனில் சான்றோரைக் கொண்டுவா
என்றடிப்பான், .,.
பனையிலுள்ள வஸ்து பலநாளும் இப்படியே
வினை கொண்ட பாவி வேண்டி அவன் போனாலும்
சான்றோர்க்கு நன்மை சற்றே செய்ய வேண்டு
மென்று
மாண்டோர்கல் நீசன் மனதில் வைக்க
மாட்டான்......"4

நாடார் ஜாதியின் உழைப்பு பிறஜாதிகளால் கொள்ளையிடப்பட்டது. மேலோன் அவனை எல்லாவிதத்திலும் நசுக்கினான்.

"குளம் வெட்டச் சொல்லி கூலிகொடுக்காமல்
கனம் பெரிய சான்றோரைக் கைக்குட்டை
போட்டடிப்பான்"

'கோயில் சிவாலயங்கள் கூடங்கள் சிங்காசனங்கள்
நாவுலகும் கள்ளாய் நாடி இருந்தாலும்
சாணான்கள் ஏறி எனச் சண்டாள நீசனெல்லாம்
வீணாகச் சாணாரை விரட்டி அடிப்பான் காண்" 5

நாடார் குடைபிடித்தல் கூடாது. செருப்பு அணிதல் கூடாது மாடி வீடு கட்டக் கூடாது. தங்க நகைகள் அணியக்கூடாது. பெண்கள்கூட மார்பை மறைக்கக் கூடாது. முழங்காலுக்குக் கீழே உடுத்தக் கூடாது பசு வளர்க்கக் கூடாது. இடுப்பில் குடம் எடுக்கக் கூடாது.

மொத்தத்தில்

"எப்புலிபோல் நீசர் ஈயைப்போல் சான்றோர்கள்
நாய்ப்புலி போல் நீசர் நாயைப்போல்
சான்றோர்கள்." 6

மேல் ஜாதிக்காரர்கள் நாடார்களை வைத்திருந்த நிலை இது. செல்வம் படைத்த நாடார்களின் போக்கோ இதற்குச் சற்றும் குறைந்ததாக இல்லை.

அக்காலத்தில் பனையும் பனையைச் சார்ந்த உபதொழில்களுமே நாடார்களின் முக்கிய தொழில்களாக இருந்தன. நாடார்களைப் பனையானது பனைச் சொத்துடைய நாடார்கள் பனைத் தொழிலுடைய நாடார்கள் என்று இரு பிரிவுகளாய்ப் பிரித்தது. கவுரவம், செல்வம் என்ற அளவுகோல்கள் இந்த இரு பிரிவினரையும் பிரித்தே வைத்திருந்தன. திருமண உறவுகள் கூட இவர்களுக்குள்ளே கிடையாது. பிற மேல்ஜாதியினர் பொதுவாக இந்த இருவகை நாடார்களையும் ஒன்று சேர்த்தே மதித்தார்கள். என்றாலும் சொத்துடைய நாடார்கள் பனை ஏறும் நாடார்களிலிருந்து பிரிந்தே வாழ்ந்தார்கள், அவர்களின்மேல் ஆதிக்கமும் செலுத்தினார்கள். "பனை ஏறும் நாடார்கள் சொத்துடைய நாடார்களின் முன்னே வரும்போது தங்கள் கைகளை நெஞ்சின் குறுக்கே கட்டிக் கொள்ள வேண்டும்." 7 "சொத்துள்ள நாடார்களின் பெண்கள் கோஷாதரித்துப் பல்லக்குகளிலே பயணம் செய்தார்கள்" 8 ஆனால் பனை ஏறும் குடிப் பெண்களோ தங்கள் மார்பைத் திறந்துதான் இவர்கள் முன்னே வரவேண்டும். ஏழை நாடார்களைக் கொண்டு உப்பு ஊழியம் ஏட்டோலை ஊழியம் முதலிய கடின ஊழியங்களை நடத்தும் பொறுப்பைக்கூட பெரும்பாலும் இவர்களே ஏற்று நடத்திவந்தார்கள்.

பனைத்தொழில் சிரமமானது. உடம்பு முழுவதையும் ஈடுபடுத்திச் செய்யவேண்டிய கடினமான தொழில் அது. தினசரி இரண்டு முறை அல்லது மூன்று முறை ஒவ்வொரு பனையிலும் ஏறி இறங்க வேண்டும் அப்படியென்றால் தான் பதனீர் கிடைக்கும். இடையில் இரண்டு நாள் விட்டுவிட்டால் போதும் அந்தப் பருவ காலத்துக்குரிய முழு வேலையும் பாழாய்ப்போகும். ஆகவே அதில் ஈடுபட்டவர்களுக்கு ஓய்வென்பதே கிடையாது. வருடத்தில் சில மாதங்களே பனையில் வேலை இருக்கும். பனையில் பாளை இல்லாத மாதங்களில் இவர்களுக்கு வேலை இல்லை, சோறும் இல்லை. உழைக்கும் காலத்திலும் உழைப்பின் பயனில் பாதி பனைச்

சொந்தக்காரர்களுக்குப் போய்விடும். ஆகவே இவர்கள் வறுமையிலிருந்து மீளுவதற்கு வழியே இல்லை. இவர்களின் பெண்கள் பதநீர் சுமப்பது அதைக் காய்ச்ச விறகு சேகரிப்பது, பதநீர் காய்ச்சுவது ஆகிய வேலைகளில் ஓய்வில்லாமல் ஈடுபட்டார்கள். இந்தக் காரணங்களால் இவர்களின் பழக்கவழக்கமும் கலாச்சாரமும் சொத்துள்ள நாடார்களின் பழக்க வழக்கங்களிலிருந்தும் கலாச்சாரத்திலிருந்தும் வேறுபட்டதாகவே இருந்தது. "இவ்வாறு நாடார் சமூகம் எதிரெதிரான இரண்டு வர்க்கங்களாய்ப் பிரிந்தது. பனை உடமை பனை ஏறுபவர்களைப் பனை உடையவர்களின் பொருளாதார ஆதிக்கத்தினுள் கொணர்ந்தது". 9

"துரியோதனனும் பஞ்சவரும் சேர்ந்து ஒரு
வயிற்றில் பிறக்கக் கண்டேனே இவனே ஐயா" 10

என்னும் சுவாமி முத்துக்குட்டியின் வரிகள் இங்கு சிந்திக்கத்தக்கன. ஒரு குலத்தில் பிறந்தாலும் பணவசதி காரணமாக செல்வரும், ஏழைகளும் பிரந்திருந்ததைக்கண்டு முத்துக்குட்டி சாமி பாடிய பாடல் இது.

ஆக அந்தக் காலகட்டத்தில் பனை ஏறி நாடார்களுக்குச் சமூகப் பாதுகாப்பும் இல்லை.

"ஈழவர், சாணூர், முக்குலர் ஆகிய ஜாதிகளில் உள்ள வசதிபடைத்தவர்களின் பிரதிநிதிகளோ, அல்லது ஜாதித்தலைவர்களோ சட்டபூர்வம் இல்லாமல் பணம் வசூலிப்பது சுண்டிப்பாய்த் தடுக்கப்படுகிறது"11 என்று அக்கால அரசு அறிக்கையிடும் அளவுக்கு ஜாதியின் மேல்நிலையில் உள்ளவர்கள் கீழ்நிலையில் உள்ளவர்களிடம், சட்ட விரோதமான வசூல்கள் செய்திருக்கிறுர்கள் என்பதை இது தெளிவாகப் புலப்படுத்துகிறது.

இந்தப் பரிதாபகரமான நிலையில் இருந்த நாடார்களின் சமூக நிலையில் ஒரு பெரும் மாறுதல் 19-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஏற்பட்டது. அந்த மாறுதலுக்குக் காரணமாய் இருந்த சக்திகள் இரண்டு.

1. கிறிஸ்தவத்தை நாடார்களிடையே பரப்ப முயன்ற வெள்ளைக்காரப் பாதிரிமார்களும் வெள்ளைக்காரக் கம்பெனி அதிகாரிகளும்.

2. நாடார்களுக்கென்று 'ஐயாவழி' என்று புதியதோர் மதப்பிரிவை ஏற்படுத்திய சுவாமி முத்துக்குட்டி.

இந்த இரண்டு முயற்சிகளுமே மத அடிப்படையில் செய்யப்பட்டவையே. ஆயினும் அவற்றின் விளைவுகளோ மத எல்லைகளைக்கடந்து மகத்தான சமூகப் பொருளாதார இயக்கங்களுக்கு வழிகோலின.

19-ம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்தே திருவிதாங்கூரில் வெள்ளைக்காரர்கள் கிறிஸ்தவ மதத்தைப் பரப்பும் பணியில் தீவிரமாக ஈடுபட்டனர். இவர்களுடைய பிரச்சாரம் அடிமைப்பட்டுக்கிடந்த நாடார்களிடையே நல்ல பலனை அளித்தது. ஏராளமான நாடார்கள் கிறிஸ்தவர்கள் ஆனுர்கள். 1806-ல் மைலாடியில் ஒரு கிறிஸ்தவ சபை ஸ்தாபிக்கப்பட்டது. 1810 முதல் திருவாங்கூர் அரசுக்கு வெள்ளைக் கம்பெனியின் பிரதிநிதியாயிருந்த கர்னல் மன்ரோ என்பவர் கிறிஸ்தவத்தைப் பரப்புவதில் கண்ணுங் கருத்துமாயிருந்தார்.

"நடைமுறைப் பழக்கவழக்கத்தால் கீழ்நிலையில் வைக்கப்பட்ட ஜாதிகளும் இனங்களும் கர்னல் மன்ரோ காலத்தில் அதிகமான அனுதாபத்துடன் கூடிய உதவியைப் பெற்றன. திருவாங்கூரில் மன்ரோ கிறிஸ்தவத்துக்குத்தான் அதிகமாக உதவி செய்தார்"12

ஆங்கிலக் கம்பெனியின் பிரதிநிதிகளும் வெள்ளைக்காரப் பாதிரிகளும் திருவாங்கூர் மன்னரிடம் மிகுந்த செல்வாக்கு உடையவர்களாயிருந்தனர். அவர்கள் செய்த மதப் பிரச்சாரங்களை ஊக்குவிக்க வேண்டிய அரசியல் நிர்பந்தத்தில்தான் திருவாங்கூர் அரசு இருந்தது. ஆகவே தென் திருவிதாங்கூரில் கிறிஸ்தவம் மிக வேகமாய் வளர்ந்தது.

கிறிஸ்தவம், நாடார்களை வெள்ளைக்காரர்களோடு தொடர்பு படுத்திற்று. அது அவர்களுக்குக் கல்வி வாய்ப்புத் தந்தது, வேலைவாய்ப்புத்தந்தது. பொருளாதார உயர்வோடு வெள்ளைக்காரர் தொடர்பு ஒரு சமூக அந்தஸ்தையும் தந்தது. எத்தனையோ ஊர்கள் ஒட்டு மொத்தமாய் கிறிஸ்தவத்தைத் தழுவின.

"அவர்கள் (நாடார்கள்) முதலில் தங்களைப் பற்றி எண்ணிக் கொண்டதைவிட உயர்ந்தவர்கள் என்று கிறிஸ்தவம் அவர்களுக்குக் கற்பித்தது."13

இந்த மாற்றம் ஒரு பெரும் மக்கள் இயக்கமாகவே நடந்தது.

இப்போது சாதாரண நிலையிலுள்ள கூலி வேலை பார்க்கும் ஆயிரக்கணக்கான நாடார் ஜனங்களிடம் சிறு சிறு நிலங்கள் சேர்ந்தன. அவர்கள் கடுமையாக உழைத்தார்கள். நாடார்களின் பொதுப் பொருளாதார நிலை உயர்ந்தது.

"கிறிஸ்தவ சபையாரின் உதவியால் கடினமான வரிகளிலிருந்தும் ஊழியங்களிலிருந்தும் நாடார்கள் தங்களை விடுவித்துக் கொண்டார்கள். அதைவிட முக்கியமாக அவர்கள் பொருளாதாரத்தில் முன்னேறினார்கள். பலநாடார்கள் வியாபாரத்தில் ஈடுபட்டுச் சொந்த நிலம் வாங்கும் அளவுக்குப் பொருள் சம்பாதித்தார்கள். பிறர் கிறிஸ்தவ சபையாரின் உதவியோடு நிலம் வாங்கினார்கள். தென் திருவாங்கூர் திருச்சபை ஸ்தாபிக்கப்பட்டதை ஒட்டி மதம் மாறிய நாடார்கள் கல்வியிலும் சமூகப் பாது காப்பிலும் அதிகப் பயன் அடைந்தார்கள். நாயர் நிலப்பிரபுக்களின் பிடியிலிருந்தும் கொடுமைகளிலிருந்தும் இவர்களுக்குத் தப்பிக்கும் வழியைக் கிறிஸ்தவமும் கல்வியும் அளித்தன. தங்கள் முழு நேரத்தையும் உறிஞ்சும் பொருள் தேடும் பெரும் பிரச்சனையினால் தனிமைப் படுத்தப்பட்ட நிலை மாறி நாடார்கள் சர்ச்சுகளின் வழியாகப் புதிய ஒற்றுமையைக் கண்டார்கள். வெள்ளைக்கார மிஷனரிகளால் ஒத்தாசை செய்யப்பட்டு நாடார்கள் தங்கள் இனத்தின் முன்னேற்றத்துக்காக முயலத் தொடங்கினார்கள்"14 இச்சமூக முன்னேற்ற முயற்சியின் ஒரு இலட்சிய அடையாளமாகவே தோள் சீலைப் போராட்டம் அமைந்தது.

"வழக்கமாகத் திருவிதாங்கூரில் உயர்ந்த அந்தஸ்துடையவர்களின் முன்னிலையில், தாழ்ந்த அந்தஸ்துடையவர்கள் மரியாதையின் அடையாளமாகத் தங்கள் மார்பைத் திறந்து போடுவது வழக்கம். "ஜாதி வரிசையின் நீண்ட படிகளில் உதாரணத்துக்கு நாயர்கள், நம்பூதிரி பிராமணர்களின் முன்னிலையில் தங்கள் மார்பைத் திறந்து போட்டார்கள். பிராமணர்களோ தெய்வங்களின் முன்னிலையில் தங்கள் மார்பைத் திறந்து போட்டார்கள்."15 "இந்த வழக்கத்தின் படி மற்ற தாழ்ந்த ஜாதிகளைப் போல நாடார்களும் எந்த நேரத்திலும் தங்கள் மார்பை மூடுவதினின்றும் தடுக்கப்பட்டார்கள்." "நாடார் ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிய உடை அரையில் முழங்கால் வரை ஒரு முரட்டுத் துணியைச் சுற்றிக் கொள்ளுவதாகும்."16

ஆனால் வளர்ச்சியடைந்துவரும் அவர்களின் பொருளாதார சமூக நிலைக்கு இது பொருத்தமானதாக இருக்கவில்லை. ஆகவே 1812-ல் திருவிதாங்கூரில் ஆங்கிலப் பிரதிநிதியாக இருந்த கர்னல் மன்றோ என்பவர் "கிறிஸ்தவராக மாறிய பெண்கள் மற்ற தேசக் கிறிஸ்தவ பெண்களைப் போலத் தங்கள் மார்பை மறைத்துக்கொள்ள உரிமை அளிக்கும்"17 ஒரு ஆணையைப் பிறப்பித்தார். இதைத் தொடர்ந்து 1814 மேயில் திருவாங்கூர் அரசு கிறிஸ்தவராய் மாறிய கீழ் ஜாதிப் பெண்கள் சிறியன் கிறிஸ்தவப்பெண்கள் மாப்பிளா ஜாதி முஸ்லிம் பெண்கள் ஆகியோர் அணிவது போல ஒரு குட்டையான ரவிக்கை அல்லது குப்பாயம் அணிந்து கொள்ள அனுமதி அளித்தது. ஆனாலும் அவர்கள் மேல் ஜாதியாரைப் போல் தோள் சீலை அணிய அனுமதிக்கப்படவில்லை.

1816-ல் நாகர்கோயிலில் லண்டன் மிஷன் சபை நிரந்தரமாய் ஸ்தாபிக்கப்பட்டது. இந்தச் சபையின் முயற்சியால் கிறிஸ்தவம் வேகமாய்

வளர்ந்து நாலா பக்கங்களிலும் கிளை பரப்பிற்று சற்றேறக் குறைய இதே காலத்தில் மீட் என்னும் பாதிரியார் ஜில்லா கோர்ட் நீதிபதியாக நியமிக் கப்பட்டார். கிறிஸ்தவத்தின் வளர்ச்சிக்கு இது மிகவும் சாதகமானதொரு சூழ்நிலை என்று விளக்கவேண்டியதில்லை.

கிறிஸ்தவ நாடார் பெண்களும் கிறிஸ்தவ போர்வையில் இந்து நாடார் பெண்களும் இப் போது துணிச்சலுடன் தோள் சீலை அணிந்து வெளியே வந்தனர். அவர்கள் 1814-ல் திருவாங் கூர் அரசு பிறப்பித்த ஆணையை மதிக்கவில்லை "மேல் ஜாதியினருக்குக் குறைவான எதையும் அவர்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை"18

இந்தக் காலகட்டத்தில் திருநெல்வேலி ராமநாதபுரம் போன்ற சென்னை மாகாண மாவட்டங்களில் நாடார்கள் வேகமாக வளர்ச்சி யடைந்து கொண்டு வந்தார்கள். "ஆண்டு தோறும் உவரி, திருச்செந்தூர் ஆகிய கோயில் தலங்களுக்குச் செல்லும் திருவாங்கூர் நாடார் கள், ஆங்குள்ள நாடார்கள் தோள் சீலை அணிந்து சுதந்திரமாகத் திரிவதைப் பார்த்தபோது தாங் களும் அவ்வாறு ஆகவேண்டும் என்று துணிவு கொண்டார்கள். அந்த நாடார்களுக்குக் குறை வான எதையும் திருவிதாங்கூர் நாடார் பெண் களும் ஏற்கத் தயாராயில்லை"19

ஆகவே மேலே கூறப்பட்ட குப்பாயம் அல்லது ரவிக்கைக்கு மேலேயோ அல்லது ரவிக்கைக்குப் பதிலாயோ நாடார் பெண்கள் மேல் ஜாதியினர் தோள் சீலை போட்டுக் கொண் டதைப் போல தோள் சீலை போட்டுக் கொண் டார்கள். 1822 மே மாதம் நாயர்கள் இந்த நாடார் பாவைகளுக்கு எதிராகக் கிளம்பினர் கள்"20 இதனால் கிறிஸ்தவ மிஷனரிகள் மதம் மாறிய நாடார்களை தோள் சீலை அணியாமல் வெறும் ரவிக்கையை மட்டும் அணியும்படி வேண்டினர்கள். ஆனால் அவர்களின் வேண்டு தல் பலன் அளிக்கவில்லை.

நாடார்களுக்கு எதிரான உணர்ச்சி பொங் கிக்கொண்டிருந்தது. "1828 அக்டோபரில் தென் திருவிதாங்கூரிலுள்ள நாயர்கள் ஒரு ரெவினியூ இன்ஸ்பெக்டரின் தலைமையின் கீழ் திரண்டு கிறிஸ்தவத்துக்கு மதம் மாறியவர்களை அச்சுறுத்தத் தொடங்கினர்கள். ஓய்வு நாட் களில் ஆண்கள் பொது ஊழியத்துக்காக இழுக் கப்பட்டார்கள். பள்ளிகளுக்குத் தொந்தரவு கொடுக்கப்பட்டது. புத்தகங்கள் கிழித்தெரியப் பட்டன, அல்லது தெருவில் வீசப்பட்டன. தோள் சீலை அணிந்து மார்பை மறைத்ததற்காக பெண்கள் கடைத் தெருக்களில் அடிக்கப்பட்டார் கள். அவர்கள் உடம்பிலிருந்து ஆடைகள் கிழித்தெறியப்பட்டன."21

நாடார்கள் கூலி இல்லாத ஊழியம் சூத்திரர் களுக்குச் செய்ய மறுத்தார்கள்,

சில பள்ளிகளும் கோயில்களும் கொளுத்தப் பட்டன. மீட் என்னும் மிஷனரியைக் கொல்ல முயற்சி நடந்தது. திருவாங்கூர் அரசு எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. மிஷனரிமார் திருவாங்கூரிலுள்ள ஆங்கிலப் பிரதிநிதிக்கு எழுதினர்கள். பெரு முயற்சியின் பயனாக திருவாங்கூர் அரசு 1829 பெப்ருவரி மூன்றில் ஒரு ராஜ பிரகடனம் செய்தது. அதில் முதல் விஷயம்.

"சாணர் பெண்கள் மார்பைத் துணியால் மூடுவது நியாயமானதல்ல. ஏனென்ருல் அவ்வழக்கம் தடை செய்யப்பட்டிருக்கிறது, மேற்கொண்டு அவர்கள் உடம்பின் மேற் பகுதியை மூடாதிருக்கும்படி கோரப்படுகிருர் கள்"22

இப்பிரகடனம் 1814 சுற்றறிக்கையை உறுதி செய்தது. அச்சுற்றறிக்கையைத் திரும்ப வெளியிட ஆணையிட்டது. ஞாயிற்றுக் கிழமை தவிர மற்ற நாட்களில் கிறிஸ்தவ நாடார்களை யும் ஊழியம் செய்ய வற்புறுத்தியது. ஆள்வோ ரின் வழியாய் அல்லாமல் மிஷனரிகளின் வழி யாகச் சில கிறிஸ்தவ நாடார்கள் தங்கள் பிரச் னைகளைத் தீர்த்துக் கொள்ள முயலுவதை இது தடுத்தது. இப்படியெல்லாம் ஆணையிட்டும் இப்பிரகடனத்தால் மேல் ஜாதியினரைப் போல்

நாடார் பெண்கள் உடுத்துவதைத் தடுக்க இயலவில்லை. கிறிஸ்தவ நாடார் பெண்கள் மட்டும் அல்ல இந்து நாடார் பெண்களும் மேல் ஜாதியினரைப் போல் உடுத்தத் தொடங்கினார்கள். தாழ்ந்த இந்து சாதியினரும் முதல் முறையாக மார்பை மறைக்கத் தொடங்கினர்.

"இதுவரை சுதந்திரமாக மேல்ஜாதியாரைப் போல் மார்பை மூடி கவுரவமாக வாழ்ந்து வந்த மன்னரின் சலுகை பெற்ற சில மேல் தட்டு நாடார்களுக்கும் கூட கீழ்த்தட்டு உழைக்கும் நாடார்கள் தங்களைப் போல் உடை உடுத்துவது பொறுக்கவில்லை. அவர்கள் தாங்கள் மட்டுமே நாடார்கள் மார்பை மறைத்து உடை அணியும் உரிமை பெற்றவர்கள், மற்றவர்கள், சாணுர்கள் கீழ்ஜாதிக்காரர்கள் அவ்வுரிமை இல்லாதவர்கள் என்று சொல்லி தங்கள் சாதி ஏழைமக்களுக்கு எதிராகப்பேசி அவர்களது வெறுப்பை சம்பாதித்துக்கொண்டார்கள்."23

ஆக மேல் ஜாதியினராலும் தங்கள் ஜாதியின் வசதி படைத்தவர்களாலும் ஒடுக்கப்பட்ட நாடார்களுக்கு பற்றுக் கோடாக வாய்த்தவர்கள் வெள்ளைக்காரப் பாதிரிமார்களே. தங்கள் அடிமைத்தனத்திலிருந்து விடுதலைபெற விரும்பிய இந்து நாடார்களுக்குப் பொய்யாகவேனும் ஒரு கிறிஸ்தவப் போர்வை தேவைப்பட்டது. கிறிஸ்தவத்துக்கு மதமாற்றம் மிகவேகமாக நடந்தது. ஆனாலும் இந்த மாற்றத்துக்கு உட்படாமல் இந்துவாக இருந்தே கிறிஸ்தவத்தின் உரிமைகளைப் பெற ஆசைப்பட்ட பலர் அக்காலத்தில் இருககவே செய்தார்கள். ஜாதிமத உணர்வுகளும், நம்பிக்கைகளும், தங்கள் பழமைபற்றிய மரபுவழிக் கதைகளும் இவர்களை மதமாற்றத்துக்கு அனுமதியாமல் தடுத்த முக்கிய காரணிகள். இவ்வாறு பழமையிலிருந்து விடுபட இயலாமல் அதே நேரத்தில் சமூக விடுதலையை வேண்டி நாடார்களுக்கிடையில் 1832ல் முத்துக்குட்டி சுவாமியின் சமூகப்பணி தொடங்கிற்று.

சுவாமி முத்துக்குட்டி (1808—1850) எளிய நாடார் குலத்தில் பிறந்து சாதாரணத் தொழில் செய்தவர். இதனால் பெரும்பான்மையான ஏழை எளிய நாடார் மக்களின் உணர்வுகளையும் வாழ்க்கை நிலைமைகளையும் இவர் நன்கு உணர்ந்தார். தீவிரமான விஷ்ணு பக்தரான இவர் தன் ஜாதிக்கு விடுதலை மதத்தின் வாயிலாகவே கிடைக்கும் என நம்பினர். ஆனால் எதார்த்தத்திலோ, கிறிஸ்தவத்தின் வளர்ச்சி நாடார் ஜாதியின் பரம்பரைப் பண்பாடுகளையும் நம்பிக்கைகளையும் அழித்துவிடும் என்று இவர் நம்பினர். தீவிர வைஷ்ணவரான இவர் அந்நிலை நாடார்களுக்கு ஏற்படுவதை விரும்பவில்லை.

> "ஒருவேதம் தொப்பி உலகமெல்லாம் போடு
> வென்பான்
> மற்றொரு வேதம் சிலுவை வையமெல்லாம் போடு
> வென்பான்
> குற்றமுரைப்பான் கொடு வேதக் காரணன்
> ஒருவருக் கொருவர் உனக்கெனக் கென்றேதான்
> உறுதி அறிந்து ஒன்றி நம்கை காணுமல்
> குறுகி வழிமுட்டிக் குறைநோவு கண்டுடைந்து
> மறுகித் தவித்து மாழுவார்கள்" 24

என்று ஜனங்களைக் கிறிஸ்தவத்துக்கும் மகமதியத்துக்கும் தடுக்கும் போக்கு இவரிடம் இருந்தது.

ஆனால் இவரே கிறிஸ்துவுடன் ஒப்பிடப் படுவதை அகிலத்திரட்டில் நாம் காண்கிறோம்.

> "ஏழைகளுக்காக ஈரோன் றொருநாளாய்
> மீளாச் சிலுவையிலே முள்ளில் அறைபட்டு
> மரித்துப் பிறந்ததுபோல் மாயக் குருநாதன்
> ஏழைச் சான்றோர்க்கிரங்கி இருந்தார்
> சிறையினிலே" 25

முத்துக்குட்டி கிறிஸ்தவத்தை வெறுத்தாலும் கிறிஸ்தவ மதத் தத்துவங்களாலும் கிறிஸ்துவின் வாழ்க்கையாலும் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளார் என்று கொள்ள இடம் உள்ளது.

அவர் நேசித்த இந்து மதமோ அவரையும் அவர் ஜாதி மக்களையும் கிட்டே அண்டவிடாமல் ஒட ஓடத்துரத்திற்று. ஆகவேதான் சுவாமி முத்துக்குட்டி கிறிஸ்தவ மதத்துக்கும் இந்து மதத்துக்கும் பொதுவான ஒரு புதிய மதப்பிரிவை ஏற்படுத்த முயன்றார். இவர் 'அருளால்' இவர் காலத்திலே இவர் சீடரால் இயற்றப்பட்ட 'அகிலத்திரட்டு அம்மானை"யில் கதைகள் சம்ப

வங்கள் ஆகியவை பெரும்பாலும் இந்து புராணங்களில் உள்ளவையாக இருந்தாலும் அக்கதைகள் கோக்கப்பட்டிருக்கும் முறையிலும் பொது அமைப்பிலும் அது கிறிஸ்தவ வேதத்தின் தாக்கம் ஓரளவு பெற்றுள்ளது.

நாடார்களின் வரலாறு பற்றிய கர்ண பரம்பரைக் கதைகள் வலங்கை நூல் குறிப்புகள் முதலியவற்றை ஆதாரமாகக் கொண்டு சுவாமி முத்துக்குட்டி, நாடார் இனம் மிக உயர்ந்த பாரம்பரியம் உடைய இனம், அது ஏழுகன்னிமார் பெற்ற ரிஷி பிள்ளைகளின் பரம்பரை, சோழனை எதிர்த்து நின்ற வீரகுலம் பத்திரகாளி அம்மையின் மக்கள் நாராயணரின் குழந்தைகள் என்று பிரச்சாரம் செய்து அவர்களைத் தன்னம்பிக்கை கொள்ளச் செய்தார். தன்னையும் அவர் நாராயணரின் அம்சமாகவே பிரகடனப்படுத்திக் கொண்டார். அகிலத் திரட்டில் அவர் திருமாலின் அவதாரமாகவே சொல்லப்படுகிறார். திருமால் இரணியன், இராவணன், துரியோதனன் முதலியோரைக் கொல்ல அவதாரம் எடுத்தது போல கலியுகத்தில் நாடார்களுக்குத் துன்பம் தரும் நீசர்களை அழிப்பதற்கென்றே சுவாமி முத்துக்குட்டியாய் அவதாரம் எடுத்ததாகச் சொல்லப்படுகிறது. அந்த நம்பிக்கை இன்னும் பெரும்பான்மையான ஏழை நாடார் மக்களிடையே உறுதியாய் உள்ளது.

நாடார்களின் அக்காலக் கீழ்நிலையைக் கண்டு அவர் அழுதார்.

" பூமக்கள் நீதமுடன் போட்ட தோள் சீலையை
போடாதென்றடித்தானே சிவனே ஐயா.
என் மக்கள் சான்றோர் இடுப்பில் எடுத்த குடம்
ஏண்டு இறக்கென்றானே சிவனே ஐயா
மெத்தவும் என் மக்கள் உற்றபித் தாலிவிற்று
விட்டையும் விற்கலாச்சே சிவனே ஐயா.
முனுநேரம் துவைத்து ஒருநேரம் அன்னம் உண்ண
முனிமார்கள் பெற்ற பிள்ளை சிவனே ஐயா.
கடம்பாக் கொடியைத் தின்று கடலில் தண்ணீர்
உண்ணக்
காண்பாரோ நீசரெல்லாம் சிவனே ஐயா.
பதினெண் சாதியும் எழை சான்றோரை
வசைமறந்து பேசலாச்சே சிவனே ஐயா.
சான்றோர் வயலிருக்க நீசன் வயலில் தண்ணீர்
பாயக்கண்டேனே சிவனே ஐயா.
எதிர் வாய்க்கால் தண்ணீர் குறுக்கே விழுந்துபாய
என்னத்தைக் கொண்டடைப்பேன் சிவனே
ஐயா." 26

இவ்வளவு கொடுமைகளையும் அனுபவிக்கும் நாடார் ஜாதி தென் திருவிதாங்கூரின் பலமுள்ள பெரும்பான்மை ஜாதி என்பதும் தங்கள் வலிமையை உணராமல் இருப்பதால் அவர்களை பலம் குறைந்த மேல்ஜாதியினர் எதிர்த்து அடக்குகின்றார்கள் என்பதும் அவருக்கு நன்றாய் புரிகிறது. இந்த உண்மை அவரை முள்ளாய்க் குத்துகிறது. அந்த உணர்ச்சியைத்தான் கண்ட கனவாய்ப்பாடுகிறார் அவர்

" பாம்பைக் கடிக்கவந்த கீரியைச் சிறிமாறி
பாம்பெட்டிக் கொத்தக் கண்டேன் சிவனே ஐயா.
பூனைபோய் யானையுடன் போர்பொருதி முன்காலால்
பொத்தி எடுக்கக் கண்டேன் சிவனே ஐயா.
பச்சைப் பாம்பைக்கண்ட உடன்மயில்கள்
எல்லாமே
பதுங்கிக் கிடக்கக்கண்டேன் சிவனே ஐயா.
ஆலா கருடனையும் சிட்டு ஓடிப்பறந்து
அடித்தே எடுக்கக் கண்டேன் சிவனே ஐயா.
போர் வெள்ளைக்கொக்கு புழுத்திங்கப் போன
இடத்தில்
புழுவெட்டிக் கொத்தக்கண்டேன் சிவனே ஐயா
முடுக்கன்மார் பெற்ற மக்கள் தூக்கம் வைத்த
பாயதிலே
மூச்சோடிப் போகக்கண்டேன் சிவனே ஐயா" 27

சிதறிக் கிடக்கும் இந்தப் பெரும்பான்மைச் சமுகம் ஒன்றுபட்டு எதிர்க்கும்போது எல்லா துன்பங்களும் தகர்ந்து போகும் என்று சுவாமி உறுதியாய் நம்பினார்.

" சிந்திக்கிடக்கும் மயிர்ப்பந்தை முடித்துவிட்டால்
சீமை அழிந்திடுமே சிவனே ஐயா.
ஊமைபோல் இருப்பதை வாயைத் திறந்துவிட்டால்
பூமி அழிந்துவிடுமே சிவனே ஐயா" 28

முத்துக்குட்டி சாமியின் முயற்சிக்குச் சமுகத்தில் பலத்த எதிர்ப்பு இருந்தது. மேல்ஜாதியினர் இவரை எதிர்த்து அழிக்க முடியாமல் ராஜாவின் துணையை நாடினர். சுவாமி நாடார்

களைத் திரட்டி அரசைக் கைப்பற்ற நினைக்கிறார் என்று குற்றம் சாட்டி அவரைப் பலவிதமாய்க் கொடுமைப் படுத்தினர் என்றாலும் வருங்காலத் தின்பேரில் அவருக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது.

'' குன்றி மக்கள் ஏழுபேர்களும்
கொடிய சாபம் நீங்கிவிடும்
காசிகலையங்களும் கல்லறையும் போன் பணமும்
குத்துப் பீடித்தவனைக் குரங்காட்டம் காட்டிடுவேன்
பித்தலாட்டப் பயக்களெல்லாம் பெருமை குலைந்து போகுதே
அல்லாவென்று நபியைத் தேடி அலைந்தவர்கள் சகுதியிலே
மூணுநாளை ஆட்டுக்குள்ளே முன்னும் பின்னும் அடைக்குமே
காவல்காத்த மக்களெல்லாம் கயிலயங்கிறி மாறுங்கள்
வீரபாகு முடியும் சூட்டி வெள்ளியங்கிரி ஆளுவோம்'' 29

என்று இச்சாதியின் விடுதலையை நம்பிக்கையோடு பிரகடனம் செய்தார்.

தன் சாதி மக்களுக்கென்று புதிய ஒழுக்கம் புதிய வாழ்க்கை, புதிய வழிபாடு இவைகளை அவர் ஏற்படுத்தினார். ஐந்து சீடர்களின் வாயிலாகத் தன் 'அன்புக்கொடி' என்னும் மதப் பிரிவைப் பரப்பினார்.

தன் ஜாதியினரை இவர் உறுமால் (தலைப் பாகை) கட்டச் சொன்னார். பெண்களைத் தோள் சீலை போடச் சொன்னார். இடுப்பில் குடம் எடுக்கச் சொன்னார். இன்னும் மேல்ஜாதியினர் இவர்களை என்ன என்னவெல்லாம் செய்யக் கூடாது என்றார்களோ அவற்றையெல்லாம் செய்யச் சொன்னார்.

ஆயினும் இவர் மதத்தை அளவுக்கதிகமாய் வற்புறுத்தியதால் இவருடைய முயற்சிகள் காலப்போக்கில் ஜனங்களை மதமாய்கைக்குள்ளே மூழ்க வைக்கும் சடங்கு முயற்சிகளாகச் சிறுத்தன. வெளி உலகப் போராட்டத்துக்காகத் தயார்ப்படுத்தப்பட்ட மக்கள் முடிவில் தங்கள் தெய்வத்துக்குள்ளேயே மூழ்கிப் போனார்கள். கிறிஸ்தவம் பரவிய பகுதிகளைப் போல பொருளாதார சமூக முன்னேற்றம் அடையாமல் இப் பிரிவினர் இன்றும் பின்தங்கி இருப்பதை அனேக இடங்களில் காணலாம்.

என்றாலும் இவர் பிரச்சாரத்தால் ஏற்பட்ட பலன்கள் என்று முக்கியமாக இரண்டைக் குறிப்பிடலாம்.

1. நாடார்கள் யாருக்கும் குறைந்ததர்கள் அல்ல என்ற உணர்வால் தன்னம்பிக்கை கொண்டார்கள்.

2. அவர்கள் புதிய அமைப்பின் கீழ் ஒன்று பட்டார்கள். இந்தத் தன்னம்பிக்கையும் ஒற்றுமையும் அவர்கள் கிறிஸ்தவர்களோடு சேர்ந்து தங்கள் ஜாதியின் மொத்த விடுதலைக்காகப் போராடும்படி அவர்களைத் தூண்டிற்று.

இந்த நிலையில் 1855-ல் திருவாங்கூரில் அடிமைத்தனம் (slavery) ஒழிக்கப்பட்டது. கிறிஸ்தவம் திருவாங்கூரின் பாரம்பரியத்தையே அச்சுறுத்தியது. 1857-ல் நடந்த சிப்பாய்க் கலகம் நாட்டை ஒரு உலுக்கு பலமாக உலுக்கிற்று. சிப்பாய்க் கலகத்தை ஒட்டி இங்கிலாந்து ராணி விக்டோரியா 1858 நவம்பரில் ஒரு பிரகடனம் செய்தார். அதில் ஒரு பகுதி கீழ்க்கண்டவாறு இருந்தது.

"மதநம்பிக்கை செய்முறை ஆகியவற்றின் காரணமாக ஒருவரும் சகாயம் செய்யப்படவோ துன்புறுத்தப்படவோ, உபத்திரப்படுத்தப்படவோ கூடாது என்பதும் எல்லாரும் சமமாகச் சட்டத்தின் சமமான நேர்மையான பாதுகாப்பை அனுபவிக்கலாம் என்பதும் நம் ராஜவிருப்பமும் மகிழ்ச்சியும் ஆகும் என்று அறிவிப்பதோடு நம்முடைய அதிகாரத்தின் கீழ் உள்ள அத்தனை பேரும் நம்முடைய எந்தப் பிரஜையினுடைய வாவது மத நம்பிக்கையில் அல்லது வழிபாட்டு முறையில் தலையிடாமல் விலகி இருக்கும்படி நாம் உறுதியாக ஆணையிடவும் செய்கிறோம்."

நடைமுறையில் இருக்கும் விதிகளை மீறுவதற்கு இப்பிரகடனம் தங்களுக்கு அனுமதி தருவதாக நாடார்கள் கருதினார்கள். தங்கள் ஜாதி உயர்வையும் பொருளாதார ஆதிக்கத்தையும் அச்சுறுத்தும் நாடார்களின் இந்த எழுச்சியை

அடக்கச் சட்டத்தைத் தங்கள் கைகளில் எடுத்துக்கொள்ள இப்பிரகடனம் உரிமையளிக்கிறது என்று சூத்திரர்கள் நினைத்துக் கொண்டார்கள்.

இதன் பயனாக அகஸ்தீஸ்வரம், தோவாளை, கல்குளம், விளவன்கோடு ஆகிய தாலுகாக்களில் பெருங்குழப்பங்கள் ஏற்பட்டன. மேல் ஜாதியினரைப் போல் உடை தரித்து வெளியே வந்த நாடார் பெண்களைச் சூத்திரர்கள் நேரடியாகவே தாக்கினார்கள். இந்தத் தாக்குதலில் சூத்திரர்களோடு முஸ்லிம்களும் சேர்ந்துகொண்டார்கள்.

முஸ்லிம்களுக்கு ஜாதியைப்பற்றி கவலை இல்லை. மத அடிப்படையில் அவர்களுக்கு நாடார்கள் தோள் சீலை போடுவதால் எந்தக் கசப்பும் ஏற்படுவதற்கு நியாயம் இல்லை. ஆனால் வளர்ந்து வரும் நாடார் சமுகம் தங்களுடைய முக்கியத் தொழிலான வியாபாரத்தை அபகரித்துக் கொள்ளக்கூடும் அதனால் தங்களுடைய பொருளாதார நிலைக்கு ஆபத்துவரக் கூடும் என்று அவர்கள் அஞ்சினார்கள். இந்தப் பொருளாதார அச்சமே அவர்களை மேல் ஜாதியினருடன் இணைந்து நாடார்களை எதிர்க்கத் தூண்டிற்று.

ஆக மேல்ஜாதி இந்துக்கள், அரசாங்க அதிகாரிகள், முஸ்லிம்கள் ஆகியவர்களின் கூட்டுத் தாக்குதலை நாடார்கள் தாக்குப்பிடித்து நிற்க வேண்டிய திருந்தது. அவர்கள் தாக்குப் பிடித்தார்கள் பதிலுக்குத் தாக்கவும் செய்தார்கள்.

"ஊர்ச்சந்தை ஒன்றில் ஒரு சிறு அதிகாரி தான் அரசாங்கத்திடமிருந்து அதிகாரம் பெற்றதாகச் சொல்லி ஒரு நாடார் பெண்ணின் மார்புத் துணியைக் கிழித்து எறிந்தார். இந்தச் சம்பவம் சுமார் இருபது நாள் கலகமாக வெடித்தது 30

1859 டிசம்பர் 27ல் மேக்கோடு ஊர் ஜெப வீடு கொளுத்தப்பட்டது. கோட்டாறு கடைத் தெருவிலும் இரணியல் சந்தையிலும் பெருங் கலகங்கள் நடந்தன. அன்று இரவு இன்னொரு ஜெப விடும் நாகர்கோவிலுள்ள ஆங்கிலப் பிரதிநிதியின் பங்களாவும் கொளுத்தப்பட்டன. ஜனவரி 11-க்கும் 16-க்கும் இடையில் இன்னும் இரண்டு ஜெப விடுகளும் கொளுத்தப்பட்டன. இரண்டு கிறிஸ்தவப் பள்ளிகள் அழிக்கப்பட்டன. சூத்திரர் கூட்டம் ஒன்று திட்டு விளையில் ஒரு நாடாரைத் தாக்கி அவர் வீட்டுடன் 27 வீடுகளைத் தீயிட்டு எரித்தது.

"அகஸ்தீஸ்வரம் தாலுகா நாடார்கள் ஒரு கூட்டான எதிர்த்தாக்குதலுக்கு ஒழுங்காகத் திட்டமிட்டு பணவசூல் செய்தனர். அவர்கள் நெல்லை மாவட்ட நாடார்களின் உதவியையும் நாடினர்"31

நாயர் பட்டாளமும் ஏராளமான துணைப் படையும் போலீசும் கலகம் நடந்த இடங்களுக்கு வசூலிக்கப்பட்டது, கலகக்காரர்கள் ஒடுக்கப்பட்டார்கள். அதோடு நாடார்கள் 1829-ம் ஆண்டு பிரகடனப்படி நடந்து கொள்ள அரசாங்கத்தால் வற்புறுத்தப்பட்டார்கள். பிரச்சனைக்குத் தீர்வுகாணும் எந்த முயற்சியும் மேற்கொள்ளப்படவில்லை.

இந்த நடவடிக்கைகள் அரசாங்கத்தின் ஒருதலைப்பட்ட சமான மேல் ஜாதி இந்துக்களுக்குச் சார்பான நிலைக்குச் சான்றுகளே தவிர அரசின் நியாயத் தன்மைக்கு அடையாள்மானவை அல்ல என்று நாடார்கள் கருதினார்கள். பழைய பிரகடனத்தை ரத்து செய்யும் படியும் பொருத்தமான சாதகமான ஒரு புதிய பிரகடனத்தைச் செய்யும் படியும் அவர்கள் கோரினார்கள்.] இதை மிஷனரிகள் திருவாங்கூர் அரசருக்கும் சென்னை அரசாங்கத்துக்கும் வேண்டுகோளாய் விடுத்தார்கள். இதன் பயனாக சென்னை கவர்னர் திருவிதாங்கூர் அரசின் ஆங்கிலப் பிரதிநிதிக்கு ஒரு காட்டமான கடிதம் எழுதினார்.

"உண்மையும் நீதியும் மட்டும்அல்ல நம்முடைய ஒவ்வொரு மனிதத்தன்மையுள்ள உணர்வும் ஒரம் சார்ந்து நிற்கும் இம்மாதிரி நிகழ்ச்சியை நான் இதுவரை சந்தித்ததே இல்லை. இந்த மாதிரி சந்தர்ப்பத்தில் நாம் உறுதியான ஒரு நிலையை எடுக்காவிட்டால் நாகரிக உலகம் முழுவதும் நம்மீது அவமானத்தைத் தூவும்"32

இவை அதிலுள்ள சில வரிகள்.

இக்கடிதம் திருவாங்கூர் மகராஜாவைக் கொஞ்சம் அதிர்ச்சிக்குள் ஆக்கியது. வெள்ளைக்

காரர்களைத் திருப்திபடுத்த அரசர் விரும்பினார். ஏதாவது செய்யாவிட்டால் போராட்டமும் நிற்காது. ஆகவே 1859 ஜூலை 26ல் மன்னர் ஒரு ராஜ பிரகடனம் செய்தார். அதன் முக்கியமான பகுதி.

"கிறிஸ்தவ சாணார் பெண்களைப் போல சாணார் பெண்கள் ஒரு ரவிக்கை போடுவதிலோ அல்லது எல்லா சாணார் பெண்களும் ஒரு முரட்டு உடை அணிந்து முக்குவத்திகள் போலச்சுற்றிக் கட்டிக்கொள்வதிலோ தங்கள் மார்புகளை வேறு எந்த விதமாகதவனும் மறைப்பதிலோ எந்த எதிர்ப்பும் இல்லை என்று இதன் மூலம் நாம் பிரகடனம் படுத்துகிறோம். ஆனால் அவர்கள் மேல் ஜாதிப் பெண்களைப் போல் அணியக்கூடாது."33

இந்தப் பிரகடனம் கிறிஸ்தவ நாடார்களைப் போல் உடை அணியும் உரிமையை இந்து நாடார்களுக்குத் தந்ததேதவிர மொத்தமாக நாடார்கள் எதிர்பார்த்த ஜாதிய சமத்துவத்தைத் தரவில்லை. மேலும் இது மேல் ஜாதியினருக்குரிய உடைச்சலுகைகளை மீண்டும் வற்புறுத்திற்று. ஆகவே நாடார்கள் இந்தப் பிரகடனத்தை மதிக்கவில்லை.

இந்த தனிச் சலுகைகளை மறுத்து தென் திருவிதாங்கூர் மிஷனரிமார் 1859 ஜூலையிலேயே சென்னை கவர்னருக்கு ஒரு விண்ணப்பம் கொடுத்தார்கள். அதன் நகல் ஒன்று லண்டனிலுள்ள இந்தியச் செயலாளருக்கும் அனுப்பப்பட்டது. தொடர்ந்து நாடார் பெண்கள் துணிவோடு மேல் ஜாதியினரைப்போல் உடை உடுத்தித் தைரியமாக வெளியே வந்தார்கள். இவ்வாறு உடுக்கலாம் என்று மகாராஜாவினால் சட்டம் இயற்றப்படவே இல்லை. என்றாலும் வளர்ந்து வரும் நாடார்களின் சமூக பொருளாதார வலிமையினால் மேல் ஜாதி இந்துக்களுக்கு அவர்களை முன்போல் தடுக்க இயலாமல் போயிற்று

இந்தத் தோள் சீலைப் போராட்டம் நாடார் சமூகத்தை மதத்துக்கு அப்பால் ஒன்று படுத்தி உறுதியாக்கியது. ஊர் ஒற்றுமையும் கட்டுப்பாடும் வலிமை பெற்றன. எல்லா எதிர்ப்புகளையும் அவர்கள் சேர்ந்து எதிர்த்துப் போரிடும் போராட்ட உணர்வை இது தூண்டி வலுப்படுத்தியது. அதன் செல்வாக்கு இன்று கூடக் குறைந்து விட்டதாகச் சொல்லுவதற்கில்லை,

இது நாஞ்சில் நாட்டு உழைக்கும் மக்களின் ஓர் பகுதியினரான நாடார்கள் தமது சமூக நிலையை உயர்த்திக் கொள்ள, தம்மை அடக்கும் சாதிய, பொருளாதார. நிலப்பிரபுத்துவ சக்திகளை எதிர்த்து நடத்திய போராட்டம், அவர்கள் ஒன்றுபடுவதற்கு ஒரு கொள்கைத் தொகுதியும் பரம்பரை வரலாறும் தேவை, ஏனெனில் இந்தச் சாதியாரை ஒன்றுபடுத்த ஒரு சமூக அமைப்போ அரசியல் அமைப்போ அப்பொழுது இல்லை, எனவே புதிதாக் வந்த கிறிஸ்தவ சகோதரத்துவக்கருத்துக்களையும், நாடார் மக்களின் பரம்பரைக்கதைகளையும் இணைத்து, சமய வரம்பிற்குள் போராட்டம் தொடங்கினார்கள். ஆனால் சமுதாய அடக்குமுறையை விரும்பிய நிலப்பிரபுத்துவ உயர் சாதியினரும், அவர்களுடைய நலனைப்பாதுகாத்த அரசரும் சமத்துவக்கிளர்ச்சிகளை அடக்கத் தொடங்கினர். அப்பொழுது சமயவரம்புகளை மீறி, இந்து, கிறிஸ்தவ உழைக்கும் நாடார்கள் சுரண்டலையும், அரசியல் ஆதிக்கத்தையும் எதிர்த்துப் போராடத் தொடங்கினர் கிறிஸ்தவக் கொள்கைகளோடு 'ஐயாவழி' என்ற முத்துக்குட்டி சுவாமிகளின் தன்னம்பிக்கைக் கொள்கைகளும், சமத்துவக் கொள்கைகளும் சேர்ந்து, அவர்களுடைய போராட்டங்களுக்கு கொளகைத் தொகுதியாயிற்று. தோள் சீலை சமுதாய — அரசியல் போராட்டத்தின் துவக்கத்திற்கு ஓர் அடையாள மாத்திரமே, பின்னர் பல சுரண்டல்களை எதிர்க்கவும், ஊழியங்கள் போன்ற கட்டாய ஊழியக்களை எதிர்க்கவும், அரசியல் பிரகடனங்களை எதிர்க்கவும் அவர்கள் முன்வந்தனர், சாதாரண தோள்சீலை அந்தஸ்துப்போராட்டம், அடிப்படையான சமுதாய சமத்துவம், அரசியல் கொடுமைகள் எதிர்ப்பு என்ற விரிவான போராட்டமாயிற்று. குறிப்பிட்ட குறிக்கோள்களில் வெற்றிபெற்று நாடார்கள் சமூக அந்தஸ்தும், சிற்சில உரிமைகளும் பெற்றனர். இப்பொழுது சுரண்டல் உறவுகள் சாதிக்குள்ளேயே பணத் தொழிலாளர் பணை உடைமையாளர் என்ற பிரிவுகளுக்கிடையே அமைந்து விட்டது.

## ஆதாரங்கள்.


| | | |
|---|---|---|
| 1 | Robert Caldwell-hectures on the Tinneveli Mission | Page 44-45 |
| 2 | Travancore State Manual T. K. Velupillai | Page 510 |
| 3 | அகுலத்திரட்டு அம்மானை-பால்வண்ண நாதர் சுவாமியார் | பக்கம் 116 |
| 4 | ,, ,, | ,, 116 |
| 5 | ,, ,, | ,, 118 |
| 6 | ,, ,, | ,, 117 |
| 7 | The Nadars of Tamil Nad. Robert L. Hardgrave Jr. | Page 29-30 |
| 8 | ,, ,, | ,, 30 |
| 9 | ,, ,, | ,, 31 |
| 10 | அருள் நூல் சாட்டு நீட்டோலை | பக்கம் 21 |
| 11 | Travancore State Manual T, K. Velupillai Page 592 | |
| 12 | ,, ,, ,, 510 | |
| 13 | The Nadars of Tamil Nad. Robert L. Hardgrave Jr. | Page 49 |
| 14 | ,, ,, | ,, 58 |
| 15 | ,, ,, | ,, 59 |
| 16 | ,, ,, | ,, 59 |
| 17 | ,, ,, | ,, 59 |
| 18 | Travancore State Manual V. Nagam Aiya | Page 525 |
| 19 | The Nadars of Tamil Nad. Robert L. Hardgrave Jr, | Page 60 |
| 20 | ,, ,, | ,, 60 |
| 21 | ,, ,, | ,, 61 |
| 22 | ,, ,, | ,, 62 |
| 23 | ,, ,, | ,, 62 |
| 24 | அகிலத்திரட்டு அம்மானை பால்வண்ண நாதர் சுவாமிகள் | பக்கம் 214 |
| 25 | ,, ,, | ,, 273 |
| 26 | அருள் நூல் சாட்டு நீட்டோலை முத்துகுட்டி சுவாமிகள் பா. தங்கையா நாடார் பதிப்பு | பக்கம் 16-21 |
| 27 | ,, ,, | ,, 17-18 |
| 28 | ,, ,, | ,, 12 |
| 29 | ,, ,, | ,, 22 |
| 30 | The Nadars of Tamil Nad, Robert L, Hardgrave Jr. | Page 65 |
| 31 | Travancore State Manual Nagam Aiya | Page 629 |
| 32 | Travancore State Manual V. Nagam Aiya | Page 527 |
| 33 | ,, ,, | ,, 531 |

நாகர்கோவில்

# எஸ். டி. இந்துக் கல்லூரி

## சமூகவியல் மன்றத் துவக்க விழா

ஆகஸ்டு 1973



# பிம்பெட்கா நாகரிகத்தின்
## தொல் பொருள்கள்



1. குணி லன்கள்
கல்லினுல் செய்யப்பட்டவை



2. குடிப்பதுபோல் காணப்படும்
இவ்வுருவம் தங்களுக்கு குடிப்ப
தால் ஏற்படும் வலுவுக்கு
அடையாளமாக தீட்டப்பட்டது.



3. ஈட்டிமுனை, கல்லினுல்
செய்யப்பட்டது.



4. ஓர் வேட்டைக் காட்சி. 10,000 ஆண்டுகளுக்குமுன் தீட்டப்பட்டது

# புகைப்படம்

நாகர்கோவில் S. T. இந்துகல்லூரி, சமூகவியல் கழகத்தின் துவக்கவிழா 1973 ஆகஸ்டு மாதம் நடைபெற்றது. இக்கல்லூரி ஒன்றில்தான், Sociology, முறையாக B. A., வகுப்பிற்கு கற்றுத்தரப்படுகிறது. இத்துறையின் பேராசிரியர் திரு சிவசுப்பிரமணியன்.

இவ்விழாவிற்கு கல்லூரி முதல்வர் திரு L. C. தாணு அவர்கள் தலைமை வகித்தார்கள். ஆராய்ச்சி ஆசிரியர், பேராசிரியர் நா. வானமாமலை 'கலையின் துவக்கம்' என்ற தலைப்பைப்பற்றி பேசினர்.

படம் :— (இடமிருந்து வலம்) நா. வானமாமலை, சிவசுப்பிரமணியன், L. C. தாணு, சமூகவியல் மாணவர் மன்றச் செயலாளர்.

# பிம்பெட்கா நாகரிகம்

**( படங்களுக்கு விளக்கம் )**

போபாலுக்கு அருகில் பிம்பெட்கா என அழைகைப்படும் பகுதியில் மலைச்சரிவுகளில் நூற்றுக்கணக்கான குகைகள் உள்ளன. அவற்றை ஆராய்ந்த இந்திய தொல் பொருள் ஆய்வாளர்கள் அவற்றில் காணப்பட்ட தொல் பொருள்களையும் குகை ஓவியங்களையும் ஆராய்ந்து இவ்விடங்களில் மூன்று லட்சம் ஆண்டுகளுக்கு முன்பிலிருந்து நாலாயிரம் ஆண்டுகட்கு முன்பு வரை புராதன இந்திய மக்கள் வாழ்ந்து வந்த தாக அனுமானித்துள்ளனர். அவற்றுள் மிகப் பல குகைகளில் பலவகையான கற்கருவிகள் கிடைத்துள்ளன. அவற்றை முன் தொல்பொருள் இயல் அறிவுகொண்டு ஆராய்ந்தால் அவற்றை படைத்தவர்களின்—நாகரிக படிமுறை வளர்ச்சியை எளிதில் வகைப்படுத்தி கூறலாம்.

இக்கற்கருவிகளைவிட 500க்கு மேற்பட்ட குகைச்சுவர்களில் காணப்படும் வர்ணச் சித்திரங்கள், இப்புராதன இந்திய மக்களின் வாழ்க்கை பற்றியும் நம்பிக்கைகள் பற்றியும் அறிவிக்கின்றன. முன்பக்கத்தில் காணப்படும் படங்கள் அக்கால மக்கள் வர்ணங்களால் பாறைச் சுவர்களில் வரைந்தவை.

**படம்: 1.** இவை அவர்கள் கழுத்தில் மரநாரால் கோர்த்து அணிந்த கல்லாலும், எலும்புகளாலும் செய்யப்பட்ட அணிகலன்கள். உலோகத்தின் பயனை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

**படம்: 2.** இச்சித்திரத்தில மனிதனைப் போன்ற ஓர் உருவம், ஓர் கோப்பையிலிருந்து பானமொன்றைக் குடிப்பது போலுள்ளது. இதன் தலை பறவைத் தலைபோல் உள்ளது. தலையின்மீது கொம்புகள் உள்ளன. இது அம்மக்களால், தமது மூதாதையர் எனக் கருதப்பட்ட ஒரு குலப் புருவ விலங்குக் குறியாகும். இதற்கு வலிமை யூட்டினால்தமக்கும் வலிமை உண்டாகுமென்பது அவர்களுடைய நம்பிக்கை. எனவே அது மது பருகுவது போல சித்திரம்தீட்டி அச்சித்திரத்தின் முன் சடங்குகள் செய்திருத்தல் வேண்டும்.

**படம்: 3.** இப்படத்தில் காணப்படுவது ஓர் ஈட்டிமுனையின் சித்திரம். இது கல்லால் ஆனது. முனையாகச் செதுக்குவதற்கு அவர்கள் வேலைத்திறன் பெற்ற பிறகு இந்தக் கருவியைச் செய்திருத்தல் வேண்டும். இக்கருவியில் கைப்பிடி பொருத்துவதற்கு ஒரு பள்ளம் உள்ளது ஈட்டிமுனையையும் மரத்தாலான கைப்பிடியையும் மரநார் கொண்டு பிணைத்திருத்தல் வேண்டும்.

படம்: 4. குகைச்சுவரில் இக்காட்சியில் காணப்படும் உருவங்கள் மிகப் பெரிதாகத் தீட்டப்பட்டுள்ளன. இது ஒரு இயற்கை வேட்டைக் காட்சியல்ல. இக்குகையில் வாழ்ந்த மக்கள் வேட்டைக்குச் செல்லும் முன்பு நடனமாடவும், சடங்குகள் செய்யவும் இச்சித்திரத்தின் முன்புள்ள களத்தைப் பயன்படுத்தியிருத்தல் வேண்டும். மனித உருவங்கள் முன்னோர் ஆவிகளையும், விலங்குகள் மாயவலைகளையும், விலங்குகளின் மீதுள்ள கட்டங்களும், வரிகளும், வசியக் கட்டுகளையும் குறிப்பிடுவன. இச்சித்திரத்தின்முன் சடங்கு புரிந்து நடனம் செய்தால் தமக்கு மந்திர ஆற்றல் உண்டாகுமென்றும், அதனால் வசியத்தில் கட்டுப்பட்ட விலங்குகள் தங்களிடம் அகப்படுமென்றும் அவர்கள் நம்பினார்கள்.

இப்படங்கள் வெளிப்படுத்தும் இனக்குழு நம்பிக்கைகள் தற்கால வேட்டை இனக்குழு மக்களிடையே இன்றும் நிலவுவதை மானிடவியலார் அறிந்துள்ளனர்.

## முகப்புப்படம்:

இம்முகப்பு படத்தில் பிம்பெட்கா குகையொன்றில் பண்டைக்கால இனக்குழு மக்கள் தீட்டிய சித்திரமொன்றின் வரைபடம் அச்சிடப்பட்டுள்ளது. இச்சித்திரத்தில் மாடு போன்ற ஓர் விலங்கின் படமும், மயில் போன்ற ஓர் பறவையின் படமும், கோடுகளும் ஒரு முக்கோணமும் சதுரமும் அடங்கிய ஒரு செவ்வகத்தின் படமும் உள்ளன.

இப்படம், குலக்குறி விலங்குகளையும், பலியிடப்பட்ட மனிதனது ஆவியையும், வசிய மந்திரம் செய்வதற்குறிய ஓர் வசிய எந்திரத்தையும் குறிப்பிடுவதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இச்சித்திரத்தின் முன்பு ஆடுகளம் இருந்திருத்தல் வேண்டும். இம்மக்கள் பறவைகளையும், மாடுகளையும் பிடித்து வளர்க்கும் சமுதாய நிலை அடைந்து விட்டவர்களாகத் தோன்றுகின்றனர்.

## அறிவிப்பு

மேற்கூறிய கருவிகளையும், சித்திரங்களையும் கொண்டுள்ள, பிம்பெட்கா குகைகளில் கிடைத்த தொல்பொருள் சான்றுகளைப் பற்றியும், குகைச் சித்திரங்களைப் பற்றியும், இவற்றிலிருந்து அறியப்படும் பிம்பெட்கா மக்களின் நாகரிகம் பற்றியும் இரண்டு பகுதிகள் கொண்ட ஓர் கட்டுரை அடுத்த ஆராய்ச்சி இதழில் வெளியாகும்.

முதற்பகுதி குகைகளையும், குகைகளில் கிடைத்த கருவிகளையும் பற்றியதாகும். இரண்டாவது பகுதி பிம்பெட்கா குகைச்சித்திரங்களையும், அவர்களுடைய கலையின் பொருளைப் பற்றியதுமாகும். மேலும் சில படங்கள் அக்கட்டுரையில் வெளியாகும்.



நெ. து. சுந்தரவடிவேலு
துணைவேந்தர்
3—10—'73

சென்னைப் பல்கலைக் கழகம்
திருவல்லிக்கேணி
சென்னை-5.

அன்புடையீர்,

'ஆராய்ச்சி' என்ற பெயரில் தாங்கள் நடத்தி வரும் காலாண்டு இதழின் 13-வது மலர் வெளியிட இருப்பதென்று அறிய மிக்க மகிழ்ச்சி. தங்கள் முயற்சி நல்லவண்ணம் வெற்றியடைய விரும்புகிறேன். 13-வது மலர் மணம் நிறைந்ததாய், அறிவொளி வீசுவதாய், 'ஆய்தல் உவத்தல் அகற்றி' உண்மையை ஆராய்ந்து காணும் போக்கினை வளர்ப்பதாய் அமைவதாக.

அன்புள்ள
நெ. து. சுந்தரவடிவேலு.




# ஆராய்ச்சி

காலாண்டுப் பத்திரிகை

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| இந்தியா: | ஆண்டுச் சந்தா | ரூ. 10-00 |
| இலங்கை: | ... | ரூ. 15-00 |
| மலாய்சியா: | ... | ரூ. 15-00 |
| சிங்கப்பூர்: | ... | ரூ. 15-00 |
| அயல்நாடுகள்: | ... | 3 டாலர் |